

பாரதியார்

1929க்கு முன்பிருந்தே ஆசிரியர் வசமிருந்த படம்

பாரதியாரும் அவர் மனைவியாரும்



உதவி : திரு. சி. சு. செல்லப்பா
அனுமதி : திருமதி செல்லம்மா பாரதி

காரைக்குடி ஹிந்து மதாபிமான சங்கத்தில் பாரதியார் (9-11-1919)



இடமிருந்து வலம்: திரு. அ. மு. க. மு. க. கறுப்பன் செட்டியார், திரு. ராய. சொக்கலிங்கம் பாரதியார், திரு. சொ. முருகப்பா, திரு. கி. நாராயணன் செட்டியார்.

நிற்பவர்: திரு. மு. நடராஜன்.

[அன்பு அனுமதி: ஹிந்து மதாபிமான சங்கத்தார், காரைக்குடி.
போட்டோ உதவி: திரு. ரா. அ. பத்மநாபன்.]

ஓம்.

புதுச்சேரி
19 ஜூலை 1915

எனதருமைத் தம்பியாகிய ஸ்ரீ. நெல்லையப்ப பிள்ளைக்கு பராசக்தி நன்கு காத்திடுக.

தம்பி — மாதத்துக்கு மாதம், வாரத்துக்கு வாரம், நினது மலர்ச்சி பெற்று வருவதைக் காண்கிறேன். நினது உள்ளக்கமலத்திலே பேரறிவாகிய உள்-ஞாயிற்றின் கதிர்கள் விரைவிலே புகுந்து நினக்கு நல்லின்பம் உண்டாகுமென்றே கருதுகிறேன்.

" " "

நெஞ்சம் இளகி இளகி விரிவெய்தி விரிவெய்தி அறிவிலே சுடர் எழுகிறது. நம்மிலும் மெலியார்க்கு நாம் இரங்கி அவர்களை நமக்கு நிகராகச் செய்துவிட வேண்டுமென்று பாடுபடுதலே நாம் வலிமை பெறுதற்கு வழியாகும். வேறு வழியில்லை.

" " "

ஹா! உனக்கு ஹிந்தி, மராட்டி முதலிய வடநாட்டு பாஷைகள் தெரியாதது. அந்த பாஷைப் பத்திரிகைகள் என்ன அற்புதமான புதுமை பெற்றுள்ளன

என்பதை ரோமுக்குத் தெரிந்து கொள்ள வேணுமானால் — தமிழ் நாட்டிற்கு எத்தனை கீர்த்தியுண்டாகும்! தமிழ், தமிழ், தமிழ் — என்று எப்போதும் தமிழை வளர்ப்பதே கடமையாகக் கொண்டு. அதில் புதிய புதிய செய்தி, புதிய புதிய யோசனை, புதிய புதிய உண்மை, புதிய புதிய இன்பம் — தமிழில் ஏறிக் கொண்டே போக வேண்டும்.

* *

* *

தம்பி, — நான் ஏது செய்வேனடா!
தமிழை விட மற்றொரு பாஷை சுகமாக இருப்பதைப் பார்க்கும்போது எனக்கு வருத்தமுண்டாகிறது.
தமிழனை விட மற்றொரு ஜாதியான் அறிவிலும், வலிமையிலும் உயர்ந்திருப்பது எனக்கு சம்மதமில்லை.
தமிழச்சியைக் காட்டிலும் மற்றொரு ஜாதிக்காரி அழகாயிருப்பதைக் கண்டால் என் மனம் புண்படுகிறது.
தம்பி — உள்ளமே உலகம்.
ஏறு! ஏறு! ஏறு! மேலே, மேலே, மேலே!
நின்றும் நிலையிலிருந்து கீழே விழாதபடி கயிறுகள் கட்டி வைத்துக் கொண்டு பிறகு முயற்சி பண்ணும் ஈ பழங்காலத்து கோட்டைகள் கண்டு கொல் லெனச் சிரி.
உனக்குச் சிறகுகள் தோன்றுக. பறந்து போ.

பக்கம் — 3

பாடு! பாடு! — மேலே, மேலே, மேலே.

" "

தம்பி — தமிழ்நாடு வாழ்க என்றெழுது.

தமிழ் நாட்டில் நோய்கள் தீர்க என்றெழுது.

தமிழ் நாட்டில் ஊர் தோறும் தமிழ்ப் பள்ளிக் கூடங்கள் பெருக என்றெழுது.

அந்தத் தமிழ்ப் பள்ளிக் கூடங்களிலே கவிதா-கலைகளெல்லாம் பயிற்சி பெற்று வளர்க என்றெழுது

தமிழ் நாட்டில் ஒரே ஜாதி தான் உண்டு. அதன் பெயர் தமிழ் ஜாதி அது ஆர்ய ஜாதி என்ற குடும்பத்திலே தலைச்சிறந்தது என்றெழுது.

ஆணும் பெண்ணும் - ஜீவனில் நிகரொத்தவர்கள் என்றெழுது.

ஆணும் பெண்ணும் ஒன்றிலொன்று தாழ்வில்லை என்றெழுது.

பெண்ணைத் தாழ்மை செய்தோன் கண்ணைக் குத்திக் கொண்டான் என்றெழுது.

பெண்ணை அடித்தவன் கண்ணை அடித்தவன் என்றெழுது.

தொழில்கள், தொழில்கள் தொழில்கள் என்று கூவு.

பக்கம் - 4.

ஒப்பற்ற வேதம் சொல்பவனைக் காட்டிலும் நன்குச் ஜோடு தைப்பவன் மேற்குலத்தானென்று கூவு.
வியாபாரம் வளர்க, யந்திரங்கள் பெருகுக.
முயற்சிகள் ஓங்குக. சங்கீதம், சிற்பம், யந்திரநூல், பூமிநூல், வானநூல், இயற்கை நூல்கள் ஆயிரம் கலைகள் கிளைக தமிழ் நாட்டிலே மலர்ந்திடுக என்று கூவு.

சக்தி, சக்தி, சக்தி, என்று பாடு.

தம்பி — நீ வாழ்க.

'' ''

''

உனது கடிதம் கிடைத்தது. குழந்தைக்கு உடம்பு சௌக்யமில்லாமல் இருந்தபடியால் உடனே "ஜவாப்" எழுத முடியவில்லை. குழந்தை புதிய உயிர் கொண்டது.
இன்று உன் விலாஸத்துக்கு "நாட்டுப் பாட்டுக்கள்" அனுப்புகிறேன். அவற்றைப் பகுதி பகுதியாக உனது பத்திரிகையிலும் ஞானபாநுவிலும் ப்ரசுரம் செய்வித்திடு.
"புதுமைப் பெண்" என்றொரு பாட்டு அனுப்புகிறேன். அதைத் தவறாமல் உடனே அச்சிட்டு அதன் கருத்தை விளக்கி எழுதுக. எங்கேனும், எப்படியேனும் பணம் கண்டு பிடித்து ஒரு நல்ல பெயரால் நமக்கு அனுப்புக. தம்பி— உனக் கேனடா இது கடமை யென்று. தோன்றவில்லை? நீ வாழ்க.

உன்னன்புள்ள
பாரதி

# சமர்ப்பணம்

★

தமிழ்த் தாயே,

உனது திருவடிகளிலே சூட்ட ஆர்வமுடன் பாரதி கொண்டுவந்த மணமிக்க அழகிய புதுமலர்கள் எத்தனையோ.

அவற்றிலே பல சிதறுண்டு மறைந்து கிடந்தன. தேடித் தொகுத்து அவற்றை மாலை யாக்கி யுள்ளேன்.

உனக்கே அம்மாலை உரியது.

ஏற்றருள்க.

## நன்றியுரை

சுதேசமித்திரன் ஆசிரியர் திரு. சி. ஆர். ஸ்ரீனிவாசன் அவர்களுடைய அன்பில்லாமல் இந்தப் புத்தகம் உருவாகி யிருக்க முடியாது. 1905 முதல் 1921-ஆம் ஆண்டு வரை சுதேசமித்திரன் தினசரி, வார மும்முறை இதழ்களைப் பார்வை யிட்டு அவற்றிலிருந்து பாரதியாரின் கவிதை, கட்டுரை முதலிய வற்றைப் பெயர்த்தெழுதிக் கொள்ள அவர் எனக்கு அன் புடன் அனுமதியளித்த விவரத்தை முன்னுரையிலேயே குறித்திருக்கிறேன். இந்நூலை அச்சிடத் தொடங்கிய பிறகும் புதிதாக வேண்டியிருந்த சில விவரங்களைச் சேகரித்துக் கொள்ள அவர் எனக்கு எல்லாவிதமான வசதிகளையும் செய்து உதவினர். புத்தக வடிவிலே வெளிவராத பாரதியாரின் கவிதை, கதை, கட்டுரை முதலியவற்றைத் தொகுத்து வெளி யிடச் சம்மதம் தெரிவித்ததோடு பாரதியாரைப் பற்றி எழுதும் நூலில் முன்பே வெளிவந்துள்ள புத்தகங்களிலிருந்து தேவை யான சிறு சிறு பகுதிகளைப் பயன்படுத்திக் கொள்ளவும் சென்னை அரசாங்கம் அன்புடன் அனுமதி தந்துள்ளது. சென்னை அரசாங்கத்தின் உதவியின்றியும் இந்நூல் வடிவு கொண்டிருக்காது. திரு. ரா. அ. பத்மநாபன் அவர்கள் தாம் பெருமுயற்சி செய்து பாரதியாரைப் பற்றிச் சேகரித்த விவரங் களையும், பாரதியாரின் **இந்தியா** பத்திரிகை இதழ்களையும் ஆராய்ந்து பயன்படுத்த ஆர்வத்தோடு உதவினர்கள். தம்மிட மிருந்த பாரதியார் எழுதிய ஏற்புச் சீட்டையும், பாரதியார் போட்டோக்களையும் அன்போடு தந்தார்கள். திரு. பி. ஸ்ரீ. அவர்கள் தாம் அருமையாகப் பாதுகாத்து வைத்திருந்த பாரதி யாரின் மொழிபெயர்ப்பு நூலாகிய **தாகூரின் பஞ்ச வியாசங்கள்**

என்பதன் பிரதியைத் தந்து உதவியதோடு இம்முயற்சியிலே எனக்குப் பெரிதும் உற்சாகமூட்டி வந்தார்கள். தாகூர் வியாசங்களின் மொழிபெயர்ப்புக்களை இந்நூலில் சேர்த்துக்கொள்ள ஸ்ரீ ரதீந்திரநாத தாகூரும் மாக்மில்லன் கம்பெனியாரும் அன்புடன் இசைந்தார்கள். திரு. கி. வா. ஜகந்நாதன் அவர்கள் தம்மிடமிருந்த பாரதி கட்டுரைகளைப் பார்வையிட உதவியதோடு, பாரதியாரைப் பற்றித் தாம் அறிந்திருந்த செய்திகளை அன்போடு கூறினார்கள். பரலி சு. நெல்லையப்பரின் அன்பைப் பற்றி முன்பே குறித்திருக்கிறேன். பாரதியார் அவருக்கு எழுதிய கடிதங்களை வெளியிட அன்போடு அவர் உதவினார். இவர்கள் அனைவருக்கும் என் மனமார்ந்த நன்றியைத் தெரிவித்துக் கொள்கிறேன்.

சக்தி கோவிந்தன் அவர்கள் பாரதியாரைப் பற்றித் தாம் வெளியிட்டுள்ள நூல்களையும் படங்களையும் பயன்படுத்திக் கொள்ளத் தாராளமாக அனுமதியளித்தார்கள். சிவாஜி ஆசிரியர் திருலோக சீதாராம் அவர்கள் பிளாக்குகள் உதவியதோடு இவ்வெளியீட்டில் பெரிதும் அக்கறை காட்டினார்கள். திருமதி செல்லம்மா பாரதி, திருமதி தங்கம்மாள் பாரதி ஆகிய இருவரும் பாரதியாரைப் பற்றிச் சில விவரங்களை எனக்குக் கூறியதோடு இந்நூல் வெளிவருவதிலே தமது ஆர்வத்தையும் கூறி எனக்கு ஊக்கமளித்தார்கள். அவர்களிடமிருந்து பாரதியாரைப்பற்றி இன்னும் பல விஷயங்களைத் தெரிந்துகொள்ள எனக்கு ஒழிவு கிடைக்காமையால் இயலாது போயிற்று. காரைக்குடி ஹிந்து மதாபிமான சங்கத்தார் அங்கே எடுக்கப்பெற்ற பாரதியார் போட்டோவை வெளியிட அன்போடு அனுமதியளித்தனர். பாரதியார் தம் மனைவியாரோடு நிற்கும் போட்டோவை வெளியிட அனுமதித்ததோடு அதன் பிளாக்கையும் திரு. ஆக்கூர் அநந்தாச்சாரியர் அன்போடு உதவினார்கள். பாரதியாரைப்பற்றிப்

பல ஆசிரியர்கள் எழுதியுள்ள நூல்களையும் கட்டுரைகளையும் நான் பயன்படுத்தி யிருக்கிறேன். இவர்கள் அனைவருக்கும் எனது மனமார்ந்த நன்றி உரியது.

எனது நண்பர்கள் திரு கே எஸ். பெரியசாமி, டாக்டர் ல. கி. முத்துசாமி ஆகிய இருவரும் கல்லூரியிற் படிக்கின்ற காலத்தில் என்னுடன் கூட இருந்து பாரதியாரின் கட்டுரைகளைச் சுதேசமித்திரனிலிருந்து பிரதியெடுக்க ஆர்வத்தோடு உதவினார்கள். இந்நூலுக்கு அச்சுப் பிழை பார்ப்பதிலும் பொருளடக்கம் தயாரிப்பதிலும் 'எல்லார்வி' அவர்கள் பெரிதும் உதவி செய்தார்கள். இவர்களுக்கும் எனது நன்றியைத் தெரிவித்துக் கொள்ளுகிறேன்.

விஜயதசமித் திருநாள்
அக்டோபர் 1953

பெ. தூரன்

# பொருளடக்கம்

## முன்னுரைப் பகுதி



## நூற் பகுதி

# முன்னுரை

1928-ஆம் ஆண்டு நான் சென்னையிலுள்ள மாகாணக் கல்லூரியில் இன்டர்மீடியட் முதல் வகுப்பில் படித்துக் கொண்டிருந்தேன். அப்பொழுதே எனக்குப் பாரதிப் பைத்தியம் என்ற சிறப்புப் பெயர் உண்டு.

இந்தப் பைத்தியம் எனக்கு ஒரு துணிச்சலைக் கொடுத்தது. ஒரு நாள் தன்னந்தனியாகச் சுதேசமித்திரன் பத்திரிகாலயத்திற்குச் சென்று அதன் ஆசிரியரான திரு. சி. ஆர். சீனிவாசன் அவர்கள் முன்னிலையில் நின்றேன். "சுப்பிரமணிய பாரதியார் சுதேசமித்திரனில் எழுதத் தொடங்கியதிலிருந்து அதாவது 1905-ஆம் ஆண்டு முதல் 1921-ஆம் ஆண்டு முடிய உள்ள பழைய சுதேசமித்திரன் பத்திரிகையின் தொகுதிகளைப் பார்வையிட ஆர்வத்தோடு வந்திருக்கிறேன். பாரதியார் எழுதியவற்றை ஒன்றுவிடாமல் சேகரம் செய்யவேண்டும் என்பது எனது ஆசை" என்று கூறினேன்.

என்னை யாரென்று அவருக்குத் தெரியாது. அறிமுகக் கடிதம் ஒன்றும் என்னிடமிருக்கவில்லை. அவர் என்னிடத்திலே என்ன கண்டாரோ எனக்குத் தெரியாது. என்னைப்பற்றி அதிகம் விசாரித்து அறிந்து கொள்ளக்கூட அவர் உத்தேசம் செய்யவில்லை. உடனே எனது விருப்பத்திற்கு அன்போடு சம்மதம் தெரிவித்தார். பழைய தொகுதிகள் நிறைந்து கிடக்கும் அந்த அறைக்குள்ளேயே இருந்து வேண்டியவற்றை நகல் எடுத்துக் கொள்ளலாம்; தொகுதிகளை மட்டும் வெளியில் எடுத்துச் செல்லக் கூடாது என்ற ஒன்றைத் தவிர வேறு எந்தவிதமான நிபந்தனையும் இல்லை. என் விருப்பம்போலச் செல்லலாம்; திரும்பி வரலாம்.

இன்றைக்கு நினைத்தாலும்கூட எனக்கு ஆச்சரியமாக இருக்கிறது. என்னிடத்திலே திரு. சி. ஆர். சீனிவாசன் அவர்களுக்கு அன்று எப்படி அவ்வளவு நம்பிக்கை பிறந்ததோ தெரிய

வில்லை. "என்னவோ சிறு வயசுப் பையன், கல்லூரியிலே படித்துக் கொண்டிருக்கிறவன், பழைய தொகுதிகளிலிருந்து காகிதங்களைக் கிழித்துக் கொண்டுபோய்விட்டால் பிறகு அவற்றை ஈடுசெய்ய முடியாதே" என்ற மாதிரி சாதாரணமாக உண்டாகக்கூடிய எண்ணமே அவருக்கு உண்டாகவில்லை. என் உள்ளத்திலே குமுறிக் கொண்டிருந்த ஆர்வத்தை அவர் நுட்பமாக எடுத்த எடுப்பிலேயே உணர்ந்து கொண்டிருக்க வேண்டும். இல்லாவிட்டால் அவ்வளவு தாராளமாக, அன்போடு அநுமதி தந்திருக்க முடியாது. இந்தச் சம்பவத்தை நினைக்கும்போதெல்லாம் எனக்கு அவரிடத்திலே தனிப்பட்ட ஒரு நன்றியுணர்ச்சி பிறக்கின்றது. அதை எவ்வாறு வெளிப்படுத்துவதென்று எனக்குத் தெரியவில்லை.

பாரதியார் எழுதிய கவிதைகள், கதைகள், கட்டுரைகள் பலப்பல அந்தக் காலத்திலே புத்தக வடிவத்திலே வெளிவராமல் மறைந்து கிடந்தன. அவருடைய நூல்களில் மூன்றும் தொகுதியாக இப்பொழுதுள்ள கட்டுரைகள் என்னும் தொகுப்பு அப்பொழுது வெளியாகவில்லை. அவற்றிற் பல சுதேசமித்திரன் தினசரித் தாள்களில் புதைந்து கிடந்தன. அவையல்லாத வேறு கட்டுரைகளும் அவற்றில் இருந்தன. சுதேசமித்திரன் வார மும்முறைப் பதிப்பொன்றும் பல ஆண்டுகள் வெளியாயிற்று. அதிலும் பாரதியார் பல கட்டுரைகள் எழுதியிருக்கிறார். இவற்றையெல்லாம் ஒன்றுவிடாமல் திரட்டிவிட வேண்டும் என்று நான் துடிதுடித்துக் கொண்டிருந்தேன்.

அப்பொழுது வனமலர்ச் சங்கம் என்ற ஒரு சங்கத்தைக் கல்லூரி மாணவர்களாகிய நாங்கள் ஆரம்பித்திருந்தோம். சென்னை, திருச்சி, மதுரை முதலிய நகரங்களிலும் பிற இடங்களிலும் அதற்குக் கிளைச் சங்கங்கள் இருந்தன. நாட்டு விடுதலை, சுதேசி இயக்கம், தமிழ் இலக்கியம் இவற்றில் ஆர்வம் உள்ள கல்லூரி மாணவர்களே வனமலர்ச் சங்கத்தின் அங்கத்தினர்களாக இருந்தார்கள். வனமலர்ச் சங்கத்தின் ஆதரவில் பித்தன் என்ற பத்திரிகை ஒன்றை நாங்கள் ஆரம்பித்தோம். முதலில் அது கையெழுத்துப் பத்திரிகையாக மாதம் ஒருமுறை வெளியாயிற்று.

அங்கத்தினர்கள் அதிகரிக்கவே கையால் எழுத முடியவில்லை. சைக்லோஸ்டைல் பிரதிகள் எடுத்து வெளியிட்டோம். விக்டோரியா ஹாஸ்டலில் எனது அறையில் சைக்லோஸ்டைல் வேலை சதா நடந்துகொண்டிருந்தது. பிறகு அந்த முறையாலும் சமாளிக்க முடியவில்லை. ஆதலால் 32 பக்கங்கள் கொண்ட அச்சுப் பத்திரிகையாக நடத்துவதென்று தீர்மானித்தோம்.

அந்தப் பத்திரிகை இரண்டாவது மாதத்திலேயே 64 பக்கங்கள் கொண்டதாக வளர்ந்தது. நூல் வடிவிலே வெளிவராத பாரதியாரது கட்டுரைகளை அதில் வெளியிடுவதென்றும், பிறகு நூலாகத் தொகுத்து வெளியிடுவதென்றும் நான் தீர்மானித்தேன்.

சுதேசமித்திரன் பழைய பிரதிகளின் தொகுதிகளுள்ள அறைக்குள்ளே மறைந்துகிடந்த பாரதியாரோடு நான் ஆர்வத்தோடு பல நாட்கள், மாதங்கள் அளவளாவிக் கொண்டிருந்தேன்.

பதினாறு ஆண்டுகளில் வெளியான தினசரிப் பத்திரிகை, வாரம் மும்முறைப் பத்திரிகை இவற்றின் தாள்களை ஒவ்வொன்ருகப் பரிசோதித்துப் பாரதியாரின் கட்டுரைகளை யெல்லாம் திரட்டிப் பிரதி எடுப்பது சுலபமான காரியமா? ஆனல் அது எனக்குக் கடினமான வேலையாகத் தோன்றவில்லை. எதிரிலே ஒரு பத்துப் பழந் தொகுதிகளை அடுக்கி வைத்து அவற்றையே மேஜையாக்கிக் கொண்டேன். அவற்றின் ஒரு பக்கத்திலே உட்கார்ந்து வேலை செய்யத் தொடங்கினேன்.

இப்படிப் பிரதி செய்யும் பணியில் எனது நண்பர்கள் திரு. கே. எஸ். பெரியசாமியும், டாக்டர் ல. கி. முத்துசாமியும் எனக்குப் பலநாள் உதவி செய்தார்கள். அவர்களுக்கும் பாரதிப் பைத்தியம் உண்டு. எங்களுடைய தோழமையிலேயே அது வளர்ந்ததாகையால் இந்தக் காரியத்தை உற்சாகமாகச் செய்தோம். பழம் பிரதிகள் நிறைந்த அறைக்கு ஒரு தனிப்பட்ட வாசனையுண்டு. அது எங்களுக்கு நறுமணமாக இருந்தது.

பாரதியார் கவிதை, கட்டுரை, கதை ஒவ்வொன்றையும் எழுதி வெளியிட்ட தேதி அவர் உபயோகித்த புனைபெயர்கள் முதலிய எல்லா விவரங்களையும் விடாமல் குறிக்கவேண்டும் என்பது என்னுடைய ஆசை.

பாரதியார் முதலில் மிஸ்டர் C. சுப்பிரமணிய பாரதி என்று தம் பெயரை வெளியிட்டிருக்கிறார். பின்னால் காளிதாஸன், சக்தி தாஸன் என்ற புனைபெயர்களில் பல கட்டுரைகள் எழுதியிருக்கிறார். தமது உண்மைப் பெயரிலேயே எழுதும்போது ஸ்ரீமான் சி. சுப்பிரமணிய பாரதி என்று குறித்திருக்கிறார். அந்தக் காலத்திலே கட்டுரை முதலியவற்றிற்குத் தமிழிலே தலைப்புக் கொடுப்பதோடு, ஆங்கிலத்திலும் தலைப்புக் கொடுப்பது ஒரு வழக்கமாக இருந்திருக்கிறது. பாரதியாருடைய கவிதைகள் சிலவே அவ்வாறு வெளியாகியிருப்பதை இந்நூலில் குறித்திருக்கிறேன். பிற்காலத்திலே பாரதியாரின் எண்ணங்கள் முதிர்ந்த போது ஆங்கிலத்தில் தலைப்புக் கொடுக்கும் பழக்கத்தைக் கண்டித்து எழுதியிருக்கிறார். இந்த மாறுதலை அவர் தமது பெயரை எழுதி வெளியிட்ட முறையிலுங்கூடக் காணமுடிகிறது.

கவிதை, கதை, கட்டுரை எழுதிய காலத்தை அறிந்து அந்த முறையிலே அவற்றை வெளியிட வேண்டும் என்பதும், அதன் மூலம் அவருடைய நடைவளர்ச்சி, கருத்து வளர்ச்சி, கவிதை வளர்ச்சி முதலானவற்றையெல்லாம் ஆராயவேண்டும் என்பதும் என்னுடைய ஆசை. ஆங்கிலத்திலே பல கவிஞர்களைப் பற்றிய இத்தகைய நல்ல ஆராய்ச்சிகளை நான் படித்திருக்கிறேன். ஷேக்ஸ்பியரின் நாடகங்களை மூன்று பகுதிகளாகப் பிரித்து ஆரம்பகால நாடகங்கள் என்றும், இடைக்கால நாடகங்கள் என்றும், முதிர்ச்சிக்கால நாடகங்கள் என்றும் அவற்றைக் குறித்து அவற்றின் சிறப்பை ஆராய்ந்திருக்கிறார்கள். ஆரம்ப கால நாடகங்களில் சொல்லதிகம், கருத்தும் கவிதையும் குறைவு என்றும், இடைக்காலத்து நாடகங்களில் அவை சமநிலை பெறுகின்றன என்றும், முதிர்ச்சிக்கால நாடகங்களிலே கவிதைப் பெருக்கும், கற்பனைத் திறமும், கருத்தாழமும் சொற்களை மீறிக் கொண்டு பொங்குகின்றனவென்றும் சுவைத் தேர்ச்சியாளர்கள் கண்டிருக்கிறார்கள். அவ்வாறு பாரதியாரை ஆராயவேண்டுமென்று கவிதைகளுக்கும், கட்டுரை கதைகளுக்கும் அவை வெளியான தேதிகளைக் குறித்து வைத்தேன்.

முன்பே புத்தக வடிவில் வந்த பல கவிதை முதலியவற்றிற்கு அத்தொகுதிகளிலேயே தேதி குறித்திருந்தேன். அத்தொகுதிகள் எப்படியோ என் கையைவிட்டு நழுவிவிட்டன. நிச்சயமாகத் திருப்பிக் கொடுத்துவிடுவதாக வாக்குறுதியளித்து மறந்துபோன அன்பர்களின் அஜாக்கிரதையால் அவை கிடைக்காமற் போய் விட்டன என்பதை நினைத்தால் எனக்கு வருத்தமாக இருக்கிறது. ஆனல் நல்லவேளையாக இந்நூலில் வெளியிட்டுள்ளவைகளுக்கும் இன்னும் பலவற்றிற்கும் அவை வெளியான தேதிக் குறிப்புகள் அவற்றை எழுதி வைத்துள்ள தாள்களிலேயே இருந்தன. அவற்றைக் குறித்திருக்கிறேன். பாடல்கள் பலவற்றிற்கும் அவ்வாறே செய்திருக்கிறேன். அவற்றிலிருந்து பாரதியா ருடைய இலக்கியத் திறமையின் மலர்ச்சியை ஒருவாறு அறியலாம்.

அன்பர் பரலி சு. நெல்லையப்பர் பாரதியாரோடு தொடர் புடையவர்கள். பாரதியாரைப் பற்றிய பல விஷயங்களை அவர் பல தடவை என்னிடம் கூறியிருக்கிறர். பாரதியார் தமக்கு எழுதிய இரண்டு கடிதங்களை அவர் எனக்குக் கொடுத்தார். அந்த இரண்டு கடிதங்களும் பாரதியார் எழுதிய நூல்களை வெளி யிடுவது பற்றியவை. அவையல்லாமல் குற்றலத்திற்குச் சென்ற சமயத்தில் அந்த அருவியை வருணித்து நெல்லையப்பருக்குப் பாரதியார் ஒரு கடிதம் எழுதியிருந்தாராம். அந்தக் கடிதத்தைப் படித்தால் குற்றல அருவியின் அழகிய காட்சியைக் காண்பது போலவே இருக்குமென்று நெல்லையப்பர் கூறினர். அதையும் எனக்குக் கொடுக்கத் தேடியபோது அது கிடைக்கவில்லை. அவ ருக்கும் ஏமாற்றம்; எனக்கும் ஏமாற்றமாக முடிந்தது.

முன்னல் குறிப்பிட்ட கடிதங்கள் பதின்மூன்று ஆண்டுகள் என்வசமிருந்தன. பிறகு ஒருநாள் நெல்லையப்பரிடமிருந்து எனக்கு ஒரு கடிதம் வந்தது. அந்த இரு கடிதங்களும் ஏதோ ஒரு காரியத்திற்காக வேண்டியிருக்கின்றன என அவர் எழுதினர். "பன்னிரண்டு ஆண்டுகளுக்குமேல் உங்கள் வசம் இருக்கும் கடிதங்கள் உங்களுக்கேதான் சொந்தம். எனக்குக் கேட்க உரிமை கிடையாது. ஆனல் நீங்கள் விரும்பினல் கொடுத்துதவ

லாம்'' என்று அவர் கடிதத்தில் தெரிவித்திருந்தார். அவரிடத்திலே பெரிதும் மரியாதை கொண்டுள்ள எனக்கு அவர் விருப்பத்தைப் பூர்த்தி செய்யாமலிருக்க முடியுமா? கடிதங்களை அனுப்பி வைத்தேன். குழந்தை உள்ளம் படைத்த நெல்லையப்பர் அவற்றை யாரிடமோ கொடுத்து இழந்துவிட்டார். நாங்கள் சந்திக்கும்போது இன்றும் அதை நினைத்துத் துக்கப்படுவதுண்டு. ஆனால் நல்ல வேளையாக அவற்றில் ஒரு கடிதத்தை நான் அப்படியே பிளாக் செய்து பாரதியாருடைய கையெழுத்திலேயே ஒருசமயம் கலைமகளில் வெளியிட்டிருந்தேன். அது இப்பொழுது கிடைத்தது. மற்றது மறைந்துபோயிற்று.

இந்நூலை இதுவரை வெளியிடாததற்கு ஒரு முக்கிய காரணம் உண்டு. கீட்ஸ் என்ற கவிஞனைப்பற்றி ஆங்கிலத்திலே நான் ஒரு ஆராய்ச்சி நூல் படித்தேன். அவருடைய வாழ்க்கையையும், கவிதைத் திறனையும் மிக விரிவாக ஆராய்ந்து அதில் எழுதியிருந்தது. கீட்ஸின் தலைமுடியின் நிறம் தங்கநிறமானதா செம்பட்டையானதா என்பதைப் பற்றிக்கூட அதில் விரிவாக ஆராய்ச்சி செய்யப்பட்டிருந்தது. அவரைப்பற்றி என்னென்ன தெரிந்து கூறமுடியுமோ அத்தனையும் அந்த நூலிலே இருந்தது. அதைப்போலப் பாரதியாருக்கு ஒரு வாழ்க்கை வரலாறும், இலக்கிய ஆராய்ச்சியும் செய்து இவற்றை வெளியிடவேண்டுமென்று நான் கனவு கண்டுகொண்டிருந்தேன். அவருடைய வாழ்க்கையைப் பற்றிப் பல விஷயங்களைத் திரட்டவேண்டுமென்றும் திட்டமிட்டிருந்தேன்.

ஆனால் இதுவரை அவ்வளவு விரிவான ஆராய்ச்சி செய்ய ஒழிவு கிடைக்கவில்லை. இடையிடையே முயன்றும் காலக் குறைவால் பெரியதோர் அளவிற்கு ஒன்றும் சாதிக்க முடியவில்லை. ஆகையால் இனிமேலும் ஒழிவுக்காகக் காத்திருந்து பாரதியாரின் இலக்கியத்தை மறைத்து வைத்திருப்பது சரியல்லவென்று எனக்குத் தோன்றியது. ஆகவே பாரதியாரைப் பற்றிப் புதிதாக இதுவரை தெரிந்த விவரங்களையும், வெளிவராத அவருடைய கவிதை, கதை, கட்டுரை, மற்றக் குறிப்புக்களையும் வெளியிட்டுவிடுவதென்ற தீர்மானத்திற்கு வந்தேன்.

இவ்வாறு வெளியிடுவதற்கும் பாரதியாரைப் பற்றிய ஆராய்ச்சியில் முன்னர் வெளிவந்துள்ள நூல்களிலிருந்து மேற்கோள் குறிப்புக்கள் எடுத்துக் கொள்வதற்கும் அன்புடன் அநுமதி தந்த சுதேசமித்திரன் ஆசிரியர் திரு. சி. ஆர். சீனிவாசன் அவர்களுக்கும், சென்னை அரசாங்கத்திற்கும், ஆசிரியர்களுக்கும் எனது மனமார்ந்த நன்றியைத் தெரிவித்துக் கொள்ளுகிறேன்.

இந்த நூலிலே பாரதியாரின் கவிதை, கதை, கட்டுரை முதலியவற்றை அவை வெளிவந்த தேதிக்கிரமப்படி வெளியிட்டிருக்கிறேன். முன்பே நூல் வடிவில் வெளியான கட்டுரையானால் அது சுதேசமித்திரனில் வெளியான தேதி தெரிந்திருந்தால் அதை மட்டும் குறிப்பிட்டிருக்கிறேன். பாரதியார் எழுதியதாக அவர் பெயரில் சில கட்டுரைகள் சமீப காலத்தில் சில பத்திரிகைகளில் வெளிவந்துள்ளதை நான் பார்த்திருக்கிறேன். ஆனால் அவை பாரதியாருடைய கட்டுரைகள்தாமா என்பதற்கு எனக்கு நிச்சயமான அத்தாட்சி கிடைக்காமையாலும் அவை முதல் முதலாக வெளிவந்த பழம் பத்திரிகைகளை நான் பார்க்க முடியவில்லையாதலாலும் அவற்றை இத் தொகுதியில் சேர்க்க விரும்பவில்லை.

பழைய சுதேசமித்திரனிலும்கூட வேறு புனைபெயர்களில் வந்துள்ள ஒரு சில கட்டுரைகள் பாரதியார் எழுதியவைதாமோ என்று ஐயுறும்படி உள்ளன. ஆனால் நிச்சயமாகத் தெரியாததால் அவற்றை நான் பிரதி செய்யவில்லை. இன்னும் ஊன்றிப் பார்த்திருந்தால் ஒரு சிலவாவது கிடைத்திருக்கும்.

இதுவரை நான் செய்த முயற்சி எனக்குப் பூரண திருப்தியளித்திருப்பதாக யாரும் நினைக்கக்கூடாது. தமிழுக்குப் புத்துயிர் தந்த கவிஞரின் எழுத்தை ஒன்று விடாமல் தொகுத்து வெளியிடவேண்டும் என்றும், அவரது எழுத்துத் திறமையின் வளர்ச்சியைக் காலக்கிரமத்தில் ஆராய்ந்து புது முறையிலே வாழ்க்கை வரலாறும், இலக்கியத் திறனாய்வும் எழுதவேண்டும் என்றும் நான் கொண்டுள்ள ஆசையை ஓரளவிற்கே இங்கு நிறைவேற்றி யிருக்கிறேன். **இந்தியா, ஞானபாநு, சக்ரவர்த்தினி, தேசபக்தன், லோகோபகாரி** முதலான பல பத்திரிகைகளின் பழம்

பிரதிகளை இன்னும் நன்றாக ஆராயவேண்டும். சுதேசமித்திரனில் வெளியான கட்டுரை, கவிதைகளின் தேதியைக் குறித்து வைத்திருந்ததுபோலவே கவிதைகள் சிலவற்றை எழுதக் காரணமான நிகழ்ச்சிகளையும் குறித்து வைத்திருந்தேன். உதாரணமாக பிஜித் தீவிலே ஹிந்து ஸ்திரீகள் என்ற பாடலைப் பாடுவதற்குத் தீனபந்து ஆண்டுரூஸ் எழுதிய கட்டுரையொன்று காரணமாக அமைந்தது. தீனபந்து பிஜிக்குச் சென்று அங்கு இந்தியப் பெண்களின் நிலைமையை நேரிற் கண்டறிந்து அது பற்றி மாடர்ன் ரெவியூ பத்திரிகையில் உருக்கமாக எழுதினார். அதைப் படித்த பாரதியார் அப்பாடலை இயற்றினார். இந்த விவரம் அப்பாடல் வெளியான காலத்திலேயே அதனடியில் கொடுக்கப்பட்டிருந்தது. இவ்வாறு குறித்து வைத்திருந்த காவிய நூல் கைநழுவிவிட்டதென்று முன்பே குறித்திருக்கிறேன். அந்த விவரங்களை மீண்டும் சேகரித்தால் பாரதியாரை இன்னும் நன்கு அறிந்து அநுபவிக்க உதவியாகவிருக்கும்.

பாரதியாரும் வ. வெ. சு. ஐயரும் சேர்ந்து ரவீந்திரநாத டாகூரின் சிறுகதைகள் பலவற்றை அழகாக மொழிபெயர்த் தார்கள். அவற்றின் தொகுப்பு நூல்களும் எப்படியோ என்னிட மிருந்து மறைந்துபோயின. வ. ரா. குறிப்பிடும் சின்னச் சங்கரன் கதை, எஸ். ஜி. ராமாநுஜலு நாயுடு குறிப்பிடும் புதிய கட்சியின் கோட்பாடுகள், எங்கள் காங்கிரஸ் யாத்திரை முதலான சிறு வெளியீடு கள் முதலிய எல்லாவற்றையும் தேடிப் பிடிக்கவேண்டும்.

நெல்லையப்பர் ஒரு தங்கமான மனிதர். பாரதியாரிடத்திலே பேரன்புபூண்டவர்களில் ஒருவர். இவரைப்போலவே பாரதி யாரை நேரில் அறிந்த திரு. எஸ். துரைசாமி ஐயர், புரட்சிக் கவிஞர் பாரதிதாசன் முதலியோர் அவரைப்பற்றி உண்மையான விவரங்கள் பலவற்றை அறிவார்கள். பாரதியாரைப்பற்றி உரிமையோடு பேசக்கூடிய அவர் மனைவியார் திருமதி செல் லம்மா பாரதி, குழந்தைகள் திருமதி தங்கம்மா பாரதி, சகுந்தலா பாரதி, அவருடைய மாமா சாம்பசிவ ஐயர், தம்பி திரு. விசுவநாத ஐயர் முதலியோர் நம்முடன் இருக்கிறார்கள். இவர்கள் அனை வரையும் விசாரித்து வாழ்க்கை விவரங்கள் பலவும் தயாரிக்க

வேண்டும். ஒருசமயம் பாரதியார் கனம் கிருஷ்ணசாமி ஐயருடைய வீட்டிற்குச் சென்று தாம் பாடிய பாடலொன்றைப் பாடிக் காட்டினாராம். படுத்துக்கொண்டிருந்த கிருஷ்ணசாமி ஐயர் பாடலைக் கேட்கக் கேட்க அதிலே மெய்ம்மறந்து எழுந்து நின்றாராம். பாரதியாருக்கு நூறு ரூபாய் கொடுத்து அந்தப் பாடலை அச்சிட்டு வெளியிடுமாறு கூறினாராம். பாரதி விழாக் கொண்டாடிய ஒரு சமயத்திலே இந்த விவரத்தைக் கனம் கிருஷ்ண சாமி ஐயர் அவர்களின் புத்திரர் திரு. கே. பாலசுப்பிரமணிய ஐயர் கூற நான் கேட்டேன். இலக்கிய ரஸிகர் டி. ஸ்ரீ. அவர்கள் பாரதியாரைப்பற்றி அறிந்திருக்கிறார்கள். இவர்களிடமிருந் தெல்லாம் விஷயங்களை அறிந்து உண்மையான வாழ்க்கை வரலாறும் பாரதி இலக்கியத் திறனாய்வும் செய்யவேண்டும், இதுவரை பாரதியாரைப்பற்றி எழுந்துள்ள நூல்களையும். முக்கியமாக வ. ரா., திருமதி செல்லம்மா பாரதி அவர்கள் எழுதிய நூல்களையும் துணைக்கொள்ள வேண்டும் என்பதை நான் கூறவேண்டுவதில்லை.

இவற்றில் சிலவற்றைத்தான் நான் ஓரளவு திருப்திகரமாகச் செய்ய முடிந்தது. பாரதியாரின் இலக்கிய வளர்ச்சியைக் காலக் கிரமத்தில் ஆராய்வதை நான் முக்கியமாக இந்நூலில் கொண் டிருக்கிறேன். அவருடைய வாழ்க்கை வரலாற்றையும் விரிவாக இல்லாமற்போனாலும் ஒருவாறு கால நிர்ணயத்தோடு எழுத முயன்றிருக்கிறேன். பாரதியாரின் நூல்களுக்கு ஆங்காங்கே குறிப்பாகத் திறனாய்வும் கண்டிருக்கிறேன். இன்னும் விரிவான முறையில் இந்த ஆராய்ச்சியைச் செய்யப் பாரதியன்பர் களும், தமிழன்பர்களும் வருங்காலத்திலே முன்வருவார் களென்று நம்புகிறேன். அவ்வாறு செய்தால் அது, தமிழ்நாட் டிற்கு ஒரு புது விழிப்பையும், தமிழுக்கு ஒரு புதிய சக்தியையும் ஊட்டிய பாரதியாருக்குச் செய்யும் சிறந்த சேவை என்பதோடு தமிழுக்கும் சிறந்த சேவையாகும் என்று நான் கருதுகிறேன்.

சென்னை
செப்டம்பர் 11, 1953

பெ. தூரன்

## பாரதியார் வாழ்க்கை வரலாறு

1904 - ஆம் ஆண்டு நவம்பர் மாதத்திலே ஒருநாள். அது மிக நல்ல நாள். தமிழன்னையின் உள்ளம் களிப் பெய்த மலர்ந்த ஒரு புனிதத் திருநாள் அது. அன்றுதான் பாரதியார் தமது உண்மையான இலக்கிய வாழ்வைத் தொடங்க மதுரையம்பதியை விட்டுச் சென்னைமாநகருக்குப் புறப்பட்டார். சென்னையை நோக்கி ரெயிலிலே வந்து கொண்டிருந்த அவருள்ளத்திலே என்னென்ன எண்ணங் கள் குமுறிக் கொண்டிருந்தனவோ யார் அறிவார்கள்! அந்த எண்ணங்களெல்லாம் தமிழைப் பற்றியும் பாரத தேசத்தைப்பற்றியும் தமிழுக்கும் பாரத தேசத்திற்கும் செய்ய வேண்டிய தமது சேவையைப் பற்றியுமே இருந் திருக்க வேண்டும் என்று மட்டும் நாம் நிச்சயத்தோடு ஊகிக்கலாம். எட்டையபுரத்தை விட்டு வந்து மதுரையிலே சிறிது காலத்திற்கு மேற்கொண்ட தமிழாசிரியர் வேலையை நினைத்துச் சிரிப்பும் இடையிடையே தோன்றி யிருக்க வேண்டும். தமிழாசிரியர் வேலை தாழ்ந்தது என்பதற்காக வல்ல. ஆனால் அவருடைய இயல்பிற்கும் அந்தக் காலத் திலே தமிழாசிரியர் தொழில் இருந்த நிலைமைக்கும் அவ் வளவு பொருத்தமில்லை என்பதை நினைத்தே அவர் புன் னகை செய்திருக்க வேண்டும். ஒரு சில மாணவர்களுக்குத் தமிழினிடத்தே பக்தியையும், தேசத்தினிடத்தே பக்தியை யும் உண்டாக்குவதை விடுத்துத் தமிழ் நாட்டிற்கே அவ்வித பக்தியை உண்டாக்க அவர் புறப்பட்டுவிட்டார்.

பாரதியார் 1904-ஆம் ஆண்டு ஆகஸ்டு மாதம் முதல் தேதியன்று, மதுரையிலுள்ள சேதுபதி உயர்தரப் பள்ளி யில் தமிழாசிரியரானார். அந்த ஆசிரியர் பணியை இரண்டு

மாதம் பத்து நாட்கள் அதாவது 1904 நவம்பர் 10–ஆம் தேதி வரை செய்துவிட்டுச் சென்னையை நோக்கிப் புறப் பட்டிருக்கிறார்.*

தமிழாசிரியராக அவருக்கு மாதம் 17½ ரூபாய் சம்ப ளம் கிடைத்தது.

பாரதியார் தமது இருபத்திரண்டாவது வயதிற்குள் சமஸ்தானப் புலவர், தமிழாசிரியர் ஆகிய இரண்டு பணி களிலே ஈடுபட்டு அவை இரண்டையும் தள்ளிவிட்டுப் பத்திரிகைத் தொழிலை நாடிச் சென்னைக்கு வந்தார்.

அவ்வாறு வருவதற்குச் சாதகமாக இருந்த நிகழ்ச்சி யைப் பற்றித் திரு. வ. ரா. அவர்கள் **மகாகவி பாரதியார்** என்ற தமது அழகிய நூலிலே கீழ்க் கண்டவாறு குறிப்பிடுகிறார்.

---

* இந்த விவரத்தை எனக்குத் தெரிவித்தவர் இப்பொழுது சேதுபதி உயர்தரப் பள்ளியின் தலைமையாசிரியராக இருக்கும் திரு எஸ். நாராயண ஐயர் அவர்கள். எனக்கு அவர் எழுதி யுள்ள கடிதம் வருமாறு:—

மதுரை
30-3-1953

அன்புடையீர்,

தங்கள் 24-3-'53 தேதியுள்ள கடிதம் கிடைத்தது. அதற் குறித்தவாறு பழைய தஸ்தாவேஜிகளைத் தேடிப் பார்த்ததில் காலஞ்சென்ற அமரகவி திரு. சுப்பிரமணிய பாரதியாரவர் கள் 1-8-1904 முதல் 10-11-1904 வரை இப் பள்ளியில் தமி ழாசிரியராகப் பணியாற்றி யிருப்பதாகத் தெரிகிறது. இச் செய்தியை மகிழ்ச்சியுடன் அறிவித்துக் கொள்ளுகிறேன்.

தங்கள்
எஸ். நாராயண ஐயர்,
தலைமை ஆசிரியர்.

இதே விவரத்தை அந்த உயர்நிலைப் பள்ளியில் பணியாற்றி வரும் திரு. வீ. ஜி. சீனிவாசன் அவர்களும் கண்டறிந்து எனக்குத் தெரிவித்தார்கள். இருவருக்கும் என் நன்றி உரியது.

"இந்தச் சமயத்தில், சென்னையில் சுதேசமித்திரன் பத்திரிகையை நடத்தி வந்த காலஞ்சென்ற ஸ்ரீமான் சுப்பிரமணிய அய்யர் மதுரைக்குப் போய்ச் சேர்ந்தார். அப்பொழுது சுப்பிரமணிய அய்யர் பாரதியாருக்கு அறிமுகமானார். பாரதியாரின் மேதையை அவர் உடனே தெரிந்து கொண்டார். உள்ளூர அவருக்கு ஆனந்தம். எப்படியாவது பாரதியாரைச் சென்னைக்குக் கொண்டு போய்விடுகிறது என்று அய்யர் தீர்மானங் கொண்டார். பாரதியாரின் மேதையை நேரில் கண்ட அய்யர், சென்னைக்கு வரும்படி பாரதியாரை வேண்டிக்கொண்டார்".

திரு. ஆக்கூர் - அனந்தச்சாரி அவர்கள் **கவிச் சக்கரவர்த்தி சுப்ரமண்ய பாரதி சரிதம்** என்ற ஒரு நூலை 1936 லேயே வெளியிட்டுள்ளார்கள். அதிலே அவர் கூறுவதாவது :

"எவருக்கும் கட்டுப்படும் சுபாவம் பாரதியாரிடம் இல்லாததன் காரணமாக 1904-ம் வருடம் எட்டையபுரம் சமஸ்தானத்திலிருந்து விலகிக்கொள்ள நேரிட்டது. பிறகு மதுரை சென்று அங்கு மூன்றுமாத காலம் சேதுபதி உயர்தரப் பள்ளியில் தமிழ்ப் பண்டிதராக இருந்தார். அவருக்கு வேறெத்தொழிலேனும் மேற்கொள்ள வேண்டுமென்ற எண்ணம் மேலிட்டது. சென்னைப் போதன முறைக் கல்லூரி வைஸ் பிரின்சிபாலும் தமது உறவினருமான லக்ஷ்மண அய்யருக்கு இவ் விஷயத்தைப் பற்றி எழுதினார். லக்ஷ்மண அய்யர் தமது நண்பரொருவர் மூலம் சுதேசமித்திரன் காரியாலயத்தில் பாரதியாருக்கு வேலை ஏதாவது கிடைக்குமாவென விசாரித்தார். அவ்வமயம் உதவி ஆசிரியர் ஸ்தானம் காலியாக விருப்பதை அறிந்து பாரதியாரைச் சென்னைக்கு வரவழைத்து மிகுந்த சிபார்சின் பேரில் சுதேசமித்திரனில் வேலைக்கமர்த்தினார்".

எப்படியோ 1904-ல் பாரதியார் சென்னை வந்து சுதேசமித்திரன் காரியாலயத்திலே பணியாற்ற அமர்ந்துவிட்டார்

**வங்க வாழ்த்துக் கவிகள்** என்ற அவருடைய பாடல் சுதேச மித்திரனில் 15-9-1905-ல் வெளியாகியிருக்கிறது. சுதேச மித்திரனில் பாரதியார் எழுதிய முதற் கவிதை இது வென்றே எனக்குத் தோன்றுகிறது. அதற்கு முந்திய தேதியில் அவர் தமது பெயரிட்டுச் சுதேசமித்திரனில் எழு தியதாகக் கவிதையோ, கட்டுரையோ எனக்கு எதுவும் கிடைக்கவில்லை. சுதேசமித்திரனில் சேர்ந்த முதல் ஏழெட்டு மாதங்கள் அவர் சாதாரண உதவியாசிரியர் போன்றே தினசரிக் கடமைகளைச் செய்திருக்கலாம். தனி யாக வேண்டுமானுல் கவிதை எழுதி வைத்திருக்கக்கூடும்.

சமஸ்தானத்துப் புலவராக இருந்து சமஸ்தானத்துக்கு உகந்த பாடல்களை எழுதுவதில் தொடங்கித் தேசத்துப் புல வராக மாறித் தேசத்துக்கும் தமிழுக்கும் உகந்த பாடல்களை எழுதும் வாய்ப்பைச் சுதேசமித்திரன் பத்திரிகையின் வாயி லாகப் பாரதியார் பெற்றுர். அவர் உள்ளத்திலே அரும்பு விட்டுக் கொண்டிருக்கும் தேசிய உணர்ச்சி மலருவதற்கும் சென்னை வாழ்வே ஏற்ற சூழ்நிலையாக அமைந்தது.

ஆனுல் உதவியாசிரியராகவே இருப்பதில் அவருக்குத் திருப்தி யேற்படவில்லை. அவருடைய கருத்துக்களையும் புதிய தேசிய உணர்ச்சியையும் யாதொரு தடையுமில்லாமல் வெளியிடுவதற்குத் தாமே பிரதம ஆசிரியராகவிருந்து நடத்தும் பத்திரிகை வேண்டும் என்று தோன்றியது. ஆத லால் பாரதியார் சுதேசமித்திரனிலிருந்து கொண்டே சக்ர வர்த்தினி என்ற பத்திரிகை யொன்றை நடத்துவதை நாம் காண்கிருேம்.

பங்கிம் சந்திரபாபு எழுதிய "வந்தே மாதரம்" என்ற அமர கீதத்தின் தமிழ் மொழி பெயர்ப்போடு அக் கீதத் தைப் பற்றிய விளக்கம் தாங்கிய கட்டுரை யொன்று சக்ரவர்த்தினியின் 1905-ஆம் ஆண்டு நவம்பர் இதழில் வெளியாகி யிருக்கின்றது.

1906 ஜனவரி 29-ஆம் தேதியில் சுதேசமித்திரனில் வேல்ஸ் இளவரசருக்கு நல்வரவு கூறிக் கவி யெழுதும் அதே கை இரண்டு மாதங்களுக்கு முன்பு வந்தே மாதர கீதத்தைத் தமிழில் வரைந்திருக்கிறது. 1906 ஜனவரிக் கடுத்த பிப்ரவரியிலே "வந்தே மாதரம்" என்ற சொந்தப் பாடலைச் சுதேசமித்திரனிலேயே தீட்டியும் இருக்கிறது.

பாரதியாரின் தேசிய உணர்ச்சியின் மலர்ச்சிக்கு அவரது காசி வாழ்க்கையும் பெரிதும் உதவியிருக்க வேண்டும். அவர் இளமையிலே காசிக்குச் செல்ல நேரிட்டதையும் மற்ற விவரங்களையும் அறிந்து கொள்வதற்கு அவருடைய வாழ்க்கை வரலாற்றைப் பிறப்பிலிருந்து தொடர்ச்சியாக அறிந்து கொள்வது நல்லது.

திருநெல்வேலி மாவட்டத்தைச் சேர்ந்த சிவலப் பேரியிலே சுப்பையர் என்பார் தமது நிலங்களைக் கவனித் துக்கொண்டு சுகமாக வாழ்ந்து வந்தார். அவருக்குக் குப்பம் மாள், சின்னசாமி அய்யர், சுந்தரராஜ அய்யர் என்ற மூன்று மக்கள் உண்டு.

சின்னசாமி அய்யர் தமது அறிவுத் திறமைக் கேற்ப நல்ல உத்தியோகம் வகிக்க ஆசை கொண்டு எட்டயபுரம் சமஸ்தானத்தை யடைந்தார். "அவரது கூரிய புத்தியையும் தமிழ்ப் புலமையையும் கண்ட மகாராஜா, அவருக்குத் தமது அரச சபையில் முதல் ஸ்தானம் அளித்துக் கௌர வித்தார். சின்னசாமி அய்யர் தமது தாய் மாமன் மகளான லக்ஷ்மியை மணந்து இல்லறம் நடத்தலானார். ......சின்னசாமி அய்யருக்கு இவ்வளவு நற்குணங்கள் அமைந்தும், முன்கோபம் பட்டும் அசாத்தியம். உறவினரோ மனைவியோ எதிர் நின்று பேசவும் நடு நடுங்குவார்கள்." (திருமதி செல்லம்மா பாரதி—**பாரதியார் சரித்திரம்**.)

சின்னசாமி அய்யருக்கும் லக்ஷ்மிக்கும் மைந்தராக 1882 ஆம் வருஷம் கார்த்திகை மாதம் மூல நக்ஷத்திரத்

தன்று எட்டயபுரத்தில் சி. சுப்பிரமணிய பாரதியார் பிறந்தார். அவர் பிறந்த தேதியை 11—12—1882 என்று கிறிஸ்துவ சகாப்தத்தை முழுதும் ஒட்டிக் கணக்கிட்டிருக்கிருர்கள்.

பாரதியாருக்கு ஐந்து வயது நிரம்பு முன்னரே அவருடைய தாயார் காலமாய்விட்டார்கள். அதனால் அவரையும் அவருடன் பிறந்த சகோதரி பாகீரதியையும் அவருடைய பாட்டியாராகிய பாகீரதியம்மாளே அன்புடன் வளர்த்து வந்தார்.

சின்னசாமி அய்யருக்கு எட்டயபுரம் சமஸ்தானத்திலே செல்வாக்கு அதிகம். அதனால் பாரதியாருக்கு அங்கே அதிகச் சலுகைகள் இருந்தன. சமஸ்தான வித்வான்களோடு தாராளமாகப் பழகவும் பேசவும் அவருக்கு உரிமையிருந்தது. வித்வான்களைப் போலப் பாடவும் வாய்ப்புண்டாயிற்று. பெரிய இடத்துப் பிள்ளையென்றால் அவனுடைய செயல்களுக்குச் சற்று அளவு கடந்தே புகழ்ச்சி ஏற்படுவது இயல்பு. அதனால் இயற்கையாகவே கவிதைத் திறமை பெற்றிருந்த இவருக்குப் "பாரதி" என்ற பட்டம் கிடைத்ததில் ஆச்சரியம் ஒன்றும் இல்லை. புலவர்களோடு அளவளாவுதலும், பாரதியென்ற பட்டமும் அவருக்குக் கவிதைத் துறையிலே நல்ல உற்சாக மளித்திருக்க வேண்டும்.

சின்னசாமி அய்யருக்குத் தம் மைந்தன் கணித சாஸ்திரத்திலும் யந்திரக் கலையிலும் வல்லவனாக வேண்டும் என்று ஆசை. பாரதியாருக்கு இயல்பான திறமை எதிலிருக்கிறதோ அந்தத் துறையிலே அவருக்கு எட்டயபுர சமஸ்தான வாழ்வுதான் பெரிதும் உதவியாக இருந்தது என்று சொல்ல வேண்டும்.

சின்னசாமி அய்யர் தமது விருப்பத்திற்கேற்பப் பாரதியாரைப் புத்தகமும் கையுமாகக் காலங் கழிக்க வேண்டு

மென்று விரும்பினர். தந்தையிடத்திலே மகனுக்குப் பயமும் அதிகம். அதனல் துள்ளித்திரிய விரும்பும் இளமைக் காலத்திலே பாரதியார் புத்தகத்தைத் தவிர வேறு தோழமையின்றி வருந்தினராம். இதை அவர் **ஸ்வசரிதை** என்ற பாடலிலே நன்ருக எடுத்துக் கூறி யிருக்கிருர்.

**ஆண்டோர் பத்தினி லாடியு மோடியும்**
**ஆறு குட்டையி னீச்சிறும் பேச்சினும்**
**ஈண்டு பன்மரத் தேறி யிறங்கியும்**
**என்னே டொத்த சிறிய ரிருப்பரால்**
**வேண்டு தந்தை விதிப்பினுக் கஞ்சியான்**
**வீதி யாட்டங்க ளேதிலும் கூடிடேன்**
**தூண்டு நூற்கணத் தோடு தனியனய்த்**
**தோழமை பிறி தின்றி வருந்தினேன்**

என்று அவர் தமது இளமை ஏக்கத்தை விவரிக்கிருர்.

பாரதியாரின் தாயார் லக்ஷ்மியம்மாள் இறந்த இரண் டாண்டுகளின் பின் சின்னசாமி அய்யர் வள்ளியம்மாள் என்ற பெண்மணியை இரண்டாந் தாரமாக மணம் செய்து கொண்டார். அந்த அம்மாள் மூலமாக அவருக்கு ஆண் குழந்தை யொன்றும், பெண் குழந்தை யொன்றும் பிறந்தன.

பாரதியாருக்கு ஆங்கில உயர்தரக் கல்வி அளிக்க வேண்டு மென்றும், சீமைக்கு அவரை அனுப்ப வேண்டு மென்றும் சின்னசாமி அய்யருக்கு ஆசையிருந்தது. முத லிலே திருநெல்வேலிக்கு அனுப்பி ஹிந்து கலாசாலையில் படிக்க வைத்தார். திருநெல்வேலிக்குச் செல்லும்போது அவருக்கு வயது என்ன என்பது தெரியவில்லை. 1887 முதல் 1890 வரை அங்கு படித்ததாக யோகி சுத்தானந்த பாரதி யார் தமது **பாரதி விளக்கம்** என்ற நூலில் கூறுகிருர். அவ்வாருனல் அவர் தமது ஐந்தாம் வயதில் அங்கு படிக்கச்

சேர்ந்ததாக ஆகிறது. இது சரியென்று தோன்றவில்லை. ஐந்தாம் பாரம் வரை அங்கு படித்ததாக ஏற்படுவதால் அவர் மணமாகும் வரையிலோ அல்லது அதன் பின்னருங் கூடவோ படித்திருக்க வேண்டும்.

பாரதியாருக்கு அந்தப் படிப்பும் பிடிக்கவில்லை.

> **செலவு தந்தைக்கோ ராயிரஞ் சென்றது**
> **தீதெ னக்குப் பல்லாயிரஞ் சேர்ந்தன**
> **நலமொ ரெட்டுணை யுங்கண் டிலேனிதை**
> **நாற்ப தாயிரங் கோயிலிற் சொல்லுவேன்**

என்று அவரே தமது திருநெல்வேலிப் படிப்பைப் பற்றிக் கூறுகிறார். ஐந்தாம் பாரம் வரையில்தான் பாரதியார் அங்கு படித்தார்.

இதன் மத்தியிலே பாரதியாருக்குக் கல்யாண ஏற்பாடாகி விட்டது. 1897 ஆம் ஆண்டு ஜூன் மாதத்தில் திருநெல்வேலி மாவட்டத்திலுள்ள கீழ்க்கடையத்தில் வாழ்ந்த செல்லப்பா அய்யரின் புதல்வி செல்லம்மாளுக்கும் இவருக்கும் திருமணம் நடைபெற்றது.

மணமாகும் போது பாரதியாருக்கு வயது பதினான்கு என்று அவர் மனைவியார் எழுதுகிறார்கள்; பதினைந்து என்று மற்ற நூல்கள் கூறுகின்றன. ஆனால் தமக்கு அப்பொழுது வயது 12 என்று பாரதியார் தமது **ஸ்வசரிதை**யில் இரண்டு முறை குறிப்பிடுகிறார். ஒரு வேளை அது அவர் ஞாபகப் பிசகாக எழுதியதாக இருக்கலாம். மணமாகும்போது திருமதி செல்லம்மாளுக்கு வயது ஏழு,

இந்தச் சந்தர்ப்பத்திலே **ஸ்வசரிதை** கூறும் மற்றொரு விஷயந்தான் நன்றாக விளங்கவில்லை.

பத்து வயதினிலே தோழமை யின்றிப் பாரதியார் வருந்தியதைப் பற்றி முன்பே குறித்தேன். அவ்வாறு துன்பம் உழன்ற காலத்தில் ஒன்பது வயதுள்ள ஒரு

அழகிய கன்னியைக் கண்டு காதலுற்றதாக அவர் **ஸ்வசரிதை** யில் கூறுகிறார்.

**ஒன்ப தாயபி ராயத்த ளென்விழிக்**
**கோது காதைச் சகுந்தலை யொத்தனள்.**

பிள்ளைக் காதலர்கள் இருவரும் "கானகத்தி லிரண்டு பறவைகள் காதலுற்றது போல" அன்பு கொண்டிருந் தனர். அவர்கள் காதலிலே உடலைப்பற்றிய எண்ணமே இல்லை.

**ஊன கத்த துவட்டுறு மன்புதா**
**னென்று மின்றி யுயிர்களி லொன்றியே**
**தேன கத்த மணிமொழி யாளொடு**
**தெய்வ நாட்கள் சிலகழித் தேனரோ**

என்று இவ்வாறு பாரதியார் பாடுகிறார்.

இந்த நிலையிலே பாரதியாருக்குத் திருமணம் நடந்தது.

**ஆங்கொர் கன்னியைப் பத்துப் பிராயத்தில்**
**ஆழ நெஞ்சிடை யூன்றி வணங்கினன்;**
**ஈங்கொர் கன்னியைப் பன்னிரண்டாண்டனுள்**
**எந்தை வந்து மணம்புரி வித்தனன்**

என்றும்,

**கற்றுங் கேட்டு மறிவு முதிரு முன்**
**காதலொன்று கடமையொன் றாயின**

என்றும் பாரதியார் கூறுவதிலிருந்து அவருடைய பிள்ளைப் பருவத்திலே ஏற்பட்ட ஓராழ்ந்த அன்புணர்ச்சியை நாம் அறிகிறோம்.

தக்க பருவமெய்தியவரிடையே தோன்றுவதும், சாதாரணமாகக் காதலென்ற சொல்லால் குறிக்கப்படுவது மான உள்ளுணர்ச்சியையே பாரதியார் தமது பத்தாவது வயதில் கொண்டிருந்தார் என்று நான் கருதவில்லை.

பத்து வயதுப் பாலகனுக்கு ஒத்த வயதினருடைய சேர்க்கையிலே எத்தனையோ ஆசையிருப்பது இயல்பு. அப்படிப்பட்ட தோழமை கிடைக்காது வருந்திய பாரதியாருக்குத் தற்செயலாக அந்தப் பெண்ணின் தோழமை கிடைத்தது. அன்புணர்ச்சியை யெல்லாம் வெளியிட அவளே தனிப்பாத்திரமாக அமைகிருள். அந்த ஆழ்ந்த அன்பைக் காதலென்றே கூறத் தோன்றுகிறது கவிஞருக்கு. சுமார் பதினைந்து ஆண்டுகள் கழித்து அதாவது 1910–ல் **ஸ்வசரிதை** எழுதும்போது இந்தத் தோழமை ஒரு பெரிய இன்பக் கனவாகத் தோன்றியிருக்க வேண்டும். லட்சியத் தெய்விகக் காதலாகவும் தோன்றியிருக்க வேண்டும். அவையே இத்தோழமையைக் காதல் என்று கூறத் தூண்டியிருக்க வேண்டும்.

பாரதியார் பிற்காலத்தில் இந்தக் காதலை நினைத்து ஏங்கினுரென்று கூறுவதற்கில்லை. **ஸ்வசரிதையில்** தவிர வேறு எங்கும் இதைப்பற்றி அவர் குறிப்பிடுவதாகத் தெரியவில்லை. 1905–ல் காசியில் நடைபெற்ற காங்கிரசுக்குப் பாரதியார் சென்றிருந்ததாகத் திருமதி செல்லம்மா பாரதி எழுதியுள்ளார்கள். அது சமயம் டம்டம் என்னும் ஊரிலிருந்த சகோதரி நிவேதிதா தேவியாரை அவர் சென்று தரிசிக்கிருர். அந்த அம்மையாரின் உபதேசத்திலே பாரதியாரின் உள்ளம் லயித்து விடுகிறது. அவருடைய உள்ளத்திலிருந்த கலக்க மெல்லாம் அம்மையாரின் தரிசனத்திலேயே அகன்று விடுகிறது. பாரதியார் அவரையே தமது குருவாக ஏற்றுக் கொள்ளுகிருர். அது முதல் அவருக்குப் பெண்களெல்லாம் பராசக்தியின் வடிவங்களாகவே காட்சியளிக்கத் தொடங்குகின்றனர்.

1908–ல் பாரதியார் **ஸ்வதேச கீதங்கள்** என்ற நூலை வெளியிடுகிருர். இதுவே அவருடைய முதல் நூலென்று கொள்ளலாம். அந்நூலை அவர் நிவேதிதா தேவியாருக்கே

ஸமர்ப்பணம் செய்திருக்கிருர். " ஸ்ரீ கிருஷ்ணன் அர்ஜுன னுக்கு விசுவ ரூபம் காட்டி ஆத்ம நிலை விளக்கிய தொப்ப, எனக்குப் பாரத தேவியின் ஸம்பூர்ண ரூபத்தைக் காட்டி ஸ்வதேச பக்தி யுபதேசம் புரிந்தருளிய குருவின் சரண மலர்களில் இச்சிறு நூலை ஸமர்ப்பிக்கின்றேன் " என்று அவர் எழுதியுள்ளார்.

1909-ல் வெளியான **ஜன்ம பூமி** என்ற நூலில் பாரதி யார் தமது குருவின் பெயரைக் குறிப்பிட்டு அவருக்கே அந் நூலையும் ஸமர்ப்பிக்கிருர்.

"எனக்கு ஒரு கடிகையிலே, மாதாவினது மெய்த் தொண்டின் தன்மையையும், துறவுப் பெருமையையும் சொல்லாமலுணர்த்திய குருமணியும், பகவான் விவே கானந்தருடைய தர்ம புத்திரியும் ஆகிய ஸ்ரீமதி நிவேதிதா தேவிக்கு இந்நூலை ஸமர்ப்பிக்கிறேன்".

பாரதியார் தமது ஞான குருவைக் கீழ்க்கண்டவாறு துதி செய்து பாடியும் இருக்கிருர்.

**அருளுக்கு நிவேதனமாய் அன்பினுக்கோர்**
**கோயிலாய் அடியேன் நெஞ்சில்**
**இருளுக்கு ஞாயிரு யெமதுயர் நா**
**டாம்பயிர்க்கு மழையா யிங்கு**
**பொருளுக்கு வழியறியா வறிஞர்க்குப்**
**பெரும் பொருளாய்ப் புன்மைத் தாதச்**
**சுருளுக்கு நெருப்பாகி விளங்கிய தாய்**
**நிவேதிதையைத் தொழுது நிற்பேன்**

பாரதியாரின் வாழ்க்கையிலே பக்தி யென்பது அடிப் படையாக இருந்தமைக்கு இவ்வம்மையாரின் அருளுப தேசம் முக்கிய காரணங்களில் ஒன்ருக இருந்திருக்கிறது.

பாரதியாருக்கு மணமாகின்ற காலத்திலேயே அவரு டைய தந்தை சின்னசாமி அய்யரின் செல்வ நிலை சீர் கேடடையத் தொடங்கிவிட்டதென்று கூறலாம்.

**ஈங்கிதற்கிடை யெந்தை பெருந்துயர்**
**எய்தி நின்றனன் தீய வறுமையான்**
**ஓங்கிநின்ற பெருஞ் செல்வம் யாவையும்**
**ஊணர் செய்த சதியி விழந்தனன்**

செல்வத்தையிழந்த தந்தை மனமுடைந்து தளர்வெய்தலானுர்.

**ஆர்ப்பு மிஞ்சப் பலபல வாணிகம்**
**ஆற்றி மிக்க பொருள் செய்து வாழ்ந்தனன்**
**நீர்ப்ப டுஞ்சிறு புற்புத மாமது**
**நீங்கவே யுளங் குன்றித் தளர்ந்தனன்**

பாரதியாருக்கு மணமான ஓராண்டிற்குள்ளே சின்னசாமி அய்யர் நோயுற்றுக் காலமானுர்.

**தந்தை போயினன் பாழ்மிடி சூழ்ந்தது**
**தரணி மீதினி லஞ்சலென் பாரிலர்**

இவ்வாறு பாரதியார் துயருற்றிருக்கும்போது காசிக்கு வரும்படி அவருக்கு அழைப்புக் கிடைத்தது. அவருடைய அத்தை குப்பம்மாள் தம் கணவர் ஸ்ரீ கிருஷ்ணசிவனேடு அது சமயம் காசியில் வசித்து வந்தார்கள். அவர்கள் அழைக்கவே பாரதியார் அங்கு சென்றுர். எந்த ஆண்டிலே காசி சென்றுர் என்று நிச்சயமாகத் தெரியவில்லை. 1901–ல் சென்றதாக திரு. ஆக்கூர் அனந்தாச்சாரியார் கூறுகிருர். ஆனுல் 1902–ல் அவர் எட்டய புரத்திற்குத் திரும்பிவிட்டதாகத் திருமதி செல்லம்மா பாரதி எழுதுகிருர். 1898 முதல் 1901 வரை காசியிலிருந்ததாக யோகி சுத்தானந்தர் எழுதுகிருர் (பாரதி விளக்கம்). ஆகவே ஒன்றிரண்டு ஆண்டுகள் அவர் காசியில் வசித்திருக்கலாம். ஆங்கிலத்தோடு ஹிந்தியும் சம்ஸ்கிருதமும் படிக்க அவருக்கு அங்கே வாய்ப்புக் கிடைத்தது. மேலும் கல்கத்தா சர்வகலாசாலைப் பிரவேசப் பரீட்சைக்குப் படித்து அதில் முதல் வகுப்பில் தேர்ச்சி பெற்றுர்.

வட நாட்டினரைப் போலவே திருத்தமான உச்சரிப்போடு பாரதியார் ஹிந்தியில் பேசுவாராம்.

பாரதியார் தமது பதினெட்டாவது வயது சமயத்திலே காசியில் வாழ்ந்திருக்கிறார். சம்பவங்களும், அநுபவங்களும் உள்ளத்திலே ஆழ்ந்து பதிகின்ற பருவம் அது. உயர்ந்த லட்சியங்களெல்லாம் ஓங்கியெழும் பருவமும் அது. வங்காளத்திலே குமிழி விட்டெழுந்து கொண்டிருக்கும் தேசிய உணர்ச்சி அவர் உள்ளத்தைத் தாக்கி யிருக்கவேண்டும். வெறும் சமஸ்தான வித்துவானாக நின்றுவிடாமல் தேசியக் கவியாக மாறுவதற்கு வேண்டிய உள்ளுணர்வைப் பெறக் காசி வாழ்க்கையும் பாரதியாருக்கு உதவிற்று என்று கூறலாம். அந்தத் தேசிய உணர்ச்சி பிற்காலத்திலே சென்னை வாழ்க்கையிலே நன்கு மலரலாயிற்று.

காசியிலிருந்தபோது பாரதியாருக்கு வடநாட்டிலேயே தங்கிவிடவேண்டுமென்ற எண்ணம் இருந்ததாம். ஆனால் டில்லி தர்பாருக்குச் சென்று திரும்பிய எட்டயபுரம் மகாராஜா காசிக்கு வந்தபோது பாரதியாரை எட்டயபுரம் வரும்படி அழைத்ததால் அதற்கிணங்கிப் பாரதியார் ஊர் திரும்பினார். (திருமதி செல்லம்மா பாரதி—**பாரதியார் சரித்திரம்.**)

சுதந்தர உணர்ச்சி பெற்ற பாரதியாருக்குச் சமஸ்தான சேவை பிடிக்காது போனதில் ஆச்சரியமில்லை. சுதந்தரத்தோடு வாழ விரும்பி அவர் எப்படியாவது எட்டயபுரத்தைவிட்டு வெளியேற உத்தேசித்திருக்க வேண்டும். 1902 ஆம் ஆண்டில் காசியை விட்டு எட்டயபுரம் திரும்பியவர் 1904 ஆகஸ்டு முதல் தேதியிலேயே மதுரையில் தமிழாசிரியராகி விடுகிறார். இரண்டு ஆண்டுகள் கூட அவரால் சமஸ்தான வித்துவானாக இருக்க முடியவில்லை.

சமஸ்தான வித்துவானாக இரண்டாண்டுகள் இருக்க முடியவில்லை யென்றால் தமிழாசிரியராக மூன்று மாதங் கூட இருக்க முடியவில்லை.

சென்னை வாழ்விலும் அவருடைய சுதந்தரப் போக்கே வெளியாகிறது. சுதேசமித்திரனிலிருந்து கொண்டே சக்ர வர்த்தினி என்ற மாதப் பத்திரிகை நடத்தினர் என்று முன்பே குறிப்பிட்டேன். அதோடு நில்லாமல் அவர் **இந்தியா** என்ற வாரப் பத்திரிகையின் ஆசிரியராகித் தமது தேச பக்தி ஆவேசம் தமிழ் நாட்டில் பரவுமாறு செயல் புரியலானர்.

திருவல்லிக்கேணியிலிருந்த திருமலாச்சாரியார் ஒரு அச்சகம் வைத்து நடத்திக் கொண்டிருந்தார். அவருடைய ஆதரவிலே **இந்தியா** பத்திரிகை தொடங்கியது. ஸ்ரீ ராம கிருஷ்ணபரமஹம்சரின் சிஷ்யராகிய சுவாமி அபேதா நந்தர் 1906 ஜூலை 15 ஆம் தேதியன்று சென்னைக்கு விஜயம் செய்தார். அவருடைய வருகையைப் பற்றியும் சொற்பொழிவைப் பற்றியும் பாரதியார் **இந்தியா** பத்திரிகையிலே 1906 ஜூலை 21ஆம் தேதி ஒரு கட்டுரை எழுதியிருக்கிறர் (பக். 19). இதிலிருந்து **இந்தியா** பத்திரிகை 1906 ஜூலைக்கு முன்பே வெளியாகத் தொடங்கி விட்டது என்பதை அறியலாம்.

ஆனல் **இந்தியா** தோன்றியதும் பாரதியார் சுதேசமித் திரனைவிட்டு முற்றிலும் விலகிவிட்டதாகக் கொள்ள முடியாது. 1907 மே 18ஆம் தேதியன்று கூடப் பாரதி யாரின் கட்டுரையொன்று மித்திரனில் வெளியாகியுள்ளது. **சென்னை வாசிகளின் நிதானமும் விபினசந்திரபாலரின் சந்நிதானமும்** என்ற அக்கட்டுரைதான் (பக். 47) அவர் புதுச்சேரி செல்லுமுன்பு மித்திரனில் எழுதிய கடைசிக் கட் டுரையென்று தெரிகிறது. அதன் பிறகு 1915 ஜூன் 15-ல் தான் மறுபடியும் மித்திரனில் அவருடைய கட்டுரை வெளியாகிறது.

1907 மே 18க்குப் பிறகு மித்திரனில் அவ்வாண்டு டிசம்பர் 17-ல் தான் சூரத் காங்கிரசுக்குச் செல்ல விரும்பும்

பிரதிநிதிகளுக்குப் பாரதியார் ஓர் அறிக்கை விடுத்திருக்கிறார். அதனால் மே மாதத்திற்குப் பிறகே அவருக்கும் சுதேசமித்திரனுக்கும் இருந்த தொடர்பு நீங்கியிருக்குமென்று ஊகிக்கலாம்.

விபினசந்திரபாலரைப் பற்றிய கட்டுரையின் போக்குக்கும், பாரதியார் அதுவரை மித்திரனில் எழுதியவற்றின் போக்குக்கும் நல்ல வித்தியாசமிருப்பதை எளிதில் அறிந்து கொள்ளலாம்.

விபினசந்திரபாலரின் சென்னை விஜயம், சூரத் காங்கிரஸ் ஆகிய இரண்டு சம்பவங்களும் பாரதியாரின் எழுத்திலும் கொள்கையிலும் மிகப் பெரிய மாறுதலை யுண்டு பண்ணி யிருக்கின்றன. சூரத் காங்கிரஸ் பாரதியாரின் வாழ்க்கையில் ஒரு புதிய கட்டத் தொடக்கம் என்று கூறலாம்.

விபினசந்திரபாலர் வங்காளத்து தேசிய வீரர்களில் ஒருவர். உணர்ச்சிப் பெருக்கோடு பேசக்கூடிய நாவலர். அவருடைய பேச்சு மக்களின் உள்ளத்திலே புதியதோர் சுதந்தர ஆவேசத்தை வளர்த்தது. ஆந்திர நாட்டுக்கு வந்திருந்த அவரைச் சென்னைக்கும் வரும்படி செய்ததற்குப் பாரதியாரும் அவருடைய நண்பர்களுமே காரணஸ்தர் என்று வ. ரா. குறிப்பிடுகிறார்.

1907 மே 9 ஆந் தேதியன்று பஞ்சாப் சிங்கம் லாலா லஜபதிராய் பர்மாவுக்கு நாடு கடத்தப்பட்டார். அதையொட்டி மே 17ஆந் தேதி சென்னை விக்டோரியா நகர மண்டபத்திலே நடைபெற்ற பொதுக் கூட்டத்தில் விபின சந்திரபாலர் பேசினார். மற்றும் சில கூட்டங்களிலும் பேசினார். அவருடைய வீராவேச மொழிகளால் சென்னையில் தேசியக் கனல் ஓங்கி வளரத் தொடங்கவே சர்க்கார் அவரைப் பலவந்தமாக இம் மாகாணத்தை விட்டு வெளியேற்றியது.

லஜபதிராயைப் போற்றிப் பாரதியார் இந்தச் சமயத்திலே இரண்டு கவிதைகள் இயற்றி யிருக்கிறார். நாடு கடத்தப்பட்ட லஜபதி,

**தொண்டுபட்டு வாடுமென்றன் தூயபெரு நாட்டிற்**
**கொண்டு விட்டங் கென்னையுடன் கொன்றாலு மின்புறுவேன்**

என்று கூறுவதாகவும்,

**ஒரு மனிதன் தனைப்பற்றிப் பலநாடு**
**கடத்தியவற் கூறுசெய்தல்**
**அருமையிலை; எளிதினவர் புரிந்திட்டா**
**ரென்றிடினும் அந்த மேலோன்**
**பெருமையை நன்கறிந் தவனைத் தெய்வமென**
**நெஞ்சினுளே பெட்பிற் பேணி**
**வருமனித ரெண்ணற்றார் இவரையெலாம்**
**ஓட்டியெவர் வாழ்வ திங்கே?**

என்றும் உணர்ச்சி மிக்க வரிகள் பாரதியாருடைய வாக்கிலே அப்பொழுது பிறந்திருக்கின்றன.

சுதந்தரப் போராட்டத்திலே சூரத் காங்கிரஸ் மிக முக்கியமானது. 1906-ல் கல்கத்தாவில் நடைபெற்ற காங்கிரசிலேயே மிதவாதிகளுக்கும் தேசியவாதிகளுக்கு மிடையே கருத்து வேறுபாடுகள் வெளிப்படையாகத் தோன்றலாயின. தாதாபாய் நௌரோஜி தலைவராக இருந்ததால் அவர் இவ்வேறுபாடுகள் மேலோங்காதபடி தம்முடைய வசீகர சக்தியால் நிலைமையைச் சமாளித்துவிட்டார். ஆனால் அடுத்த ஆண்டு காங்கிரஸ் கூடுவதற்குள் வேறுபாடுகள் மிகவும் வலுவடைந்துவிட்டன. நாகபுரியில் நடைபெற வேண்டிய காங்கிரசைச் சூரத்தில் நடத்திவிட ஏற்பாடு செய்தார்கள். மிதவாதிகள் தங்களிஷ்டம்போல் காரியங்களைச் சாதித்துக்கொள்வதற்காகவே இவ்வாறு ஏற்பாடு செய்யப்பட்டதாகத் தேசியவாதிகள் அவர்கள்மேல் குற்றம் சாட்டினார்கள். மிதவாதிகளும் தேசியவாதிகளும் தங்கள்

தங்கள் பலத்தைச் சோதனை செய்வதற்காகவே கூட்டுவது போல அமைந்தது இந்தக் காங்கிரஸ்.

பாரதியார் தேசியக் கட்சியை ஆதரித்தார். அதற்குப் பலம் திரட்டும் வேலையில் வ. உ. சிதம்பரம் பிள்ளையோடு சேர்ந்து நின்றார். சுதேசக் கிருஹத்திலிருந்து காங்கிரஸ் டெலிகேட்டுகளுக்குப் பாரதியார் அறிக்கை விடுவதை நாம் காண்கிறோம் (பக் 52, 53).

**வ. உ. சி. கண்ட பாரதி** என்ற நூலிலும் இது பற்றி விவரம் காணப்படுகிறது. "தூத்துக்குடியினின்று நான் (வ. உ. சி.) சில நண்பர்களுடன் புறப்பட்டுச் சென்னை போய்ச் சேர்ந்தேன். மண்டையன் கூட்டத்தார் வீட்டில் 'சென்னை ஜன சங்க'த்தின் அங்கத்தினர்களாகிய இளந் தேசாபிமானிகளையெல்லாம் ஒரு கூட்டம் கூட்டி ஆலோசனை செய்தோம்.

"பாரதி மாமா (பாரதியாரை வ. உ. சி. அன்புடன் அழைப்பது) நூறு பிரதிநிதிகளுக்குக் குறையாமல் சென்னையிலிருந்து சூரத்துக்கு அழைத்துக்கொண்டு போக வேண்டுமென்று சொன்னார்.

"அப் பிரதிநிதிகளில் பணம் இல்லாதவர்களுக்குப் பணம் கொடுத்துக் கூட்டிக் கொண்டுபோக வேண்டுமென்றும், அவர்களைச் சூரத்திற்குக் கூட்டிப்போய் வருவதற்குரிய செலவுத்தொகையில் ஒரு பாதியை மண்டையன் கூட்டத் தலைவர் ஸ்ரீநிவாஸாசாரியும், மற்றொரு பாதியை நானும் கொடுக்க வேண்டுமென்றும் எங்களுக்குள் முடிவு செய்து கொண்டோம். சுமார் நூறு பிரதிநிதிகளைக் கூட்டிக்கொண்டு வருவதாகத் திலகருக்குத் தந்தி கொடுத்தோம்."

பாரதியார், வ. உ. சி. முதலியோர் மிகுந்த உற்சாகத்தோடு சூரத் போய்ச் சேர்ந்தார்கள். 1907 டிசம்பர் 27 ஆந்

தேதி தொடங்கிய காங்கிரஸ் மிதவாதிகளின் விருப்பம் போல நடைபெறவில்லை. ராஷ்பிகாரிகோஷைத் தலைவராகப் பிரேரேபணை செய்தது முதல் ஒரே குழப்பந்தான். அடுத்த நாள்வரை நடவடிக்கைகளைத் தள்ளி வைத்தார்கள். அடுத்த நாள் நிலைமை இன்னும் மோசமாகிவிட்டது. திலகர் தமக்குப் பேச உரிமை உண்டென்று தலைவர் அநுமதியை எதிர் பார்க்காமல் மேடை மீதேறினர். ஆரவாரம், நாற்காலி வீச்சு, செருப்பு வீச்சு, தடியடி என்றிப்படிக் காங்கிரஸ் முடிந்தது.

குழப்பத்தில் முடிந்தாலும் சூரத் காங்கிரசால் நன்மை ஏற்படாமலில்லை. திலகர் கட்சியிலும், அவர் கொள்கைகளிலும் பாரதியாருக்குப் பற்று மிகுந்தது. திலகரைப் போற்றியும், நிதானக் கட்சியாரை நையாண்டி செய்தும் பாரதியார் பாடல்கள் எழுதலானர்.

சென்னை திரும்பிய பிறகு அவர் இன்னும் தீவிரமாக **இந்தியா**வில் எழுதத் தொடங்கினர். "பாரதியாரின் **இந்தியா** பத்திரிகை சட்ட வரம்பை மீறி நெருப்பு மழை பொழியத் தொடங்கிற்று" என்று எஸ். ஜி. இராமாநுஜலு நாயுடு குறிப்பிடுகிருர்.

அரசாங்கம் சும்மா இருக்குமா? **இந்தியா**வின் மீது தனது கண் போடலாயிற்று. அப் பத்திரிகை வெளியாவதற்குக் காரணமானவர்களைக் கைது செய்ய உத்தரவும் பிறந்தது. **இந்தியா**வின் ஆசிரியராகப் பாரதியார் இருந்த போதிலும் அவருடைய பெயர் அதிலே ஆசிரியரெனக் குறிப்பிடப்படவில்லை. ஸ்ரீநிவாசன் என்பார் ஒருவரே அதன் ஆசிரியராகப் பதிவு செய்துகொண்டிருந்தார்.

ஆதலால் அவரையே போலீசார் கைது செய்தார்கள். பின்னல் பாரதியாருக்கும் பத்திரிகையின் சொந்தக்காரருக்கும் இதே கதி நேரும் என்பதில் யாதொரு ஐயமுமில்லை. அவர்களும் அதை உணர்ந்து கொண்டார்கள்.

பாரதியார் ரகசியமாகப் புதுச்சேரி போய்ச் சேர்ந்தார். அவர் அங்கு சேர்ந்த ஒரு மாதத்திற்குள் மண்டையம் சீனிவாசாசாரியாரும் அங்கே வந்து சேர்ந்துவிட்டார்.

ஸ்ரீநிவாசனுக்கு ஐந்து வருஷ தீப்ாந்திர சிக்ஷை விதிக்கப்பட்டது. இது நியாயமல்ல வென்று 16–11–1908–ல் சுதேசமித்திரன் துணையங்கம் எழுதியுள்ளது (பக். 42).

**இந்தியா** பத்திரிகை 34, பிராட்வே, சென்னை என்ற விலாசத்திலிருந்து வெளியாயிற்று. அதன் வீர முழக்கம் 1908ஆம் ஆண்டு அக்டோபர் அல்லது நவம்பர் வரை சென்னையில் ஒலித்தது (பக். 44).

பாரதியார் புதுச்சேரிக்குச் செல்லத் தீர்மானித்ததைப் பற்றிச் சிந்திக்கும்போது அந்தச் சமயத்தில் நாட்டில் ஏற்பட்ட சில முக்கிய நிகழ்ச்சிகளையும் நினைவில் வைத்துக் கொள்ள வேண்டும். அதே ஆண்டிலே ஜுலை மாதம் 13–ஆம் தேதி கைது செய்யப்பட்டு ஐந்து நாள் விசாரணைக்குப் பின் திலகருக்கு ஆறுண்டு கடுங்காவல் தண்டனை விதிக்கப்பட்டது. பாரதியார் தமது தலைவராகக் கொண்ட பெரியார் மாண்டலேயுக்குக் கொண்டு போகப்பட்டார். தமிழ் நாட்டிலே பெரிய தேசிய வீரராக விளங்கிய கப்பலோட்டிய தமிழர் வ. உ. சிதம்பரம்பிள்ளை அதே ஆண்டு மார்ச்சு மாதம் 12–ஆம் தேதி கைது செய்யப்பட்டார். திருநெல்வேலிக் கலெக்டர் வின்சின் அழைப்பை ஏற்றுக் கொண்டு அவரைக் காணச் சென்றவிடத்தில் அவரைக் கைது செய்தார்கள். கைது செய்யு முன் வின்சிற்கும் சிதம்பரனுருக்கும் நடந்த வாக்குவாதமாகப் பாரதியார் இரண்டுபாடல்களை எழுதினர். **ஆங்கிலேயன் ஒரு தேச பக்தனுக்குக் கூறுவது, தேச பக்தன் ஆங்கிலேயனுக்குக் கூறும் மறுமொழி** என்ற தலைப்புக்களோடு அப் பாடல்கள் பாரதி நூல்கள்–முதல் தொகுதியில் சேர்க்கப்பட்டுள்ளன. ஆனுல் 1909-ல் பாரதியார் வெளியிட்ட ஸ்வதேச கீதங்களின் இரண்டாம்

பாகமாகிய **ஜன்மபூமி** என்ற நூலில் இப் பாடல்களுக்குக் **கலெக்டர் வின்ச் ஸ்ரீ சிதம்பரம் பிள்ளைக்குச் சொல்லுதல், கலெக்டர் வின்சுக்கு ஸ்ரீ சிதம்பரம் பிள்ளை சொல்லிய மறுமொழி** என்ற தலைப்புக்கள் கொடுக்கப்பட்டிருந்தன. சிதம்பரனாரின் சார்பிலே ஒரு சாட்சியாகப் பாரதியாரும் சென்றிருந்தார்.

1908 ஜுலை மாதம் 7-ஆந் தேதி சிதம்பரனாருக்கு அரசநிந்தனைக் குற்றத்திற்காக இருபது வருடமும், சுப்பிரமணிய சிவாவுக்கு உடந்தையாக இருந்ததற்காக மேலுமோர் இருபது வருடமும் ஆக நாற்பது வருடம் தீவாந்தர தண்டனை விதிக்கப்பட்டது. சிவாவுக்குப் பத்தாண்டு தீவாந்தர தண்டனை.

இவ்வாறு நாடுகடத்தப்படுவதால் தேசத்திற்குச் செய்யக்கூடிய சேவையில் தடையேற்படும்; ஆதலால் அதை எவ்வகையிலாவது தவிர்த்துத் தாம் செய்யக்கூடிய சேவையை நாட்டிற்குச் செய்யவேண்டும் என்பது அக்காலத்தவரின் பொதுவான கருத்து. காந்திய வழியிலே சத்தியாக்கிரகம் செய்து சிறை செல்லுவதே ஒரு தருமமாக அப்பொழுது ஏற்படவில்லை. இந்திய அரசியல் அரங்கிலே காந்தியடிகள் தோன்றாத காலம் அது.

ஆதலால் பாரதியார் புதுச்சேரிக்குச் செல்லுவது உசிதம் என்று அவருடைய நண்பர்கள் தூண்டியிருக்க வேண்டும். அவரும் புதுச்சேரி சென்றார். மண்டையம் ஸ்ரீநிவாசாச்சாரியாரும் அங்கு போய்ச் சேர்ந்தார். அச்சுயந்திரங்களும் போய்ச் சேர்ந்தன. **இந்தியா** பத்திரிகை புதுச்சேரியிலிருந்து வெளியாகத் தொடங்கியது. ஆகவே அரசாங்கத்தின் பிடியிலகப்படாமல் தொடர்ந்து தேச சேவை செய்ய முடியுமானால் அதற்கான முயற்சியைச் செய்யவேண்டுமென்பதே பாரதியாருக்கும் அவருடைய நண்பர்களுக்கும் எண்ணம் என்று தெரிகிறது.

புதுச்சேரி வாழ்க்கை இனிமையாக இருக்குமென்று நினைத்துப் பாரதியார் அங்கு சென்றதாகக் கொள்ளுவதற்கில்லை. அவருக்கு அங்கே வாழ்க்கை இன்பமாக நடைபெறவுமில்லை. எத்தனையோ தொல்லைகள், துன்பங்கள்.

"முதல் முதல் பாரதியார் புதுவை ஈசுவரன் கோவில் தெருவில் திரு. மு. இராஜபாதரின் இல்லத்திற்கு அடுத்த ஒரு சிறு வீட்டில் குடியிருந்தார். பிறகு அவ்விட்டைக் காலி செய்து, அதே வீதியில் 28ஆம் எண்ணுள்ள ஒரு மாடி வீட்டில் குடியேறினர். அது ஒரு செட்டியாருக்குச் சொந்தம். அவர் பெயர் ஐயாக்கண்ணு செட்டியார். அவர் குள்ளமாக இருப்பார். தயாள குணம் உள்ளவர்...... இவரைப் பாரதியார் வேடிக்கையாக 'விளக்கெண்ணெய்ச் செட்டியார்' என்று அழைப்பதுண்டு" (திரு. ரா. கனகலிங்கம்—**என் குருநாதர் பாரதியார்**). சபாபதி செட்டியார் என்பது அவர் பெயரென்று திருமதி தங்கம்மாள் பாரதி எழுதுகிருர்கள் (**பாரதியும் கவிதையும்** பக். 58.).

"1908ஆம் ஆண்டில் பாரதியார் **இந்தியா** பத்திரிகையைப் புதுவை மிஸியோம் எத்திரான் ழேர் வீதியிலிருந்து நடத்தி வந்தார். 1910ஆம் ஆண்டில் அச்சுக்கூடத்தை டுப்ளே வீதிக்கு மாற்றிக் கொண்டார்" (திரு. ரா. கனகலிங்கம்–**பாரதியாரின் புதுவை வாழ்வு** என்ற கட்டுரை). ஆனல் எந்தத் தேதி வரையில் **இந்தியா** புதுச்சேரியில், நடந்து வந்தது என்பது நிச்சயமாகத் தெரியவில்லை. பொருள் நெருக்கடி ஒரு பக்கம். அரசாங்கத்தாரின் கோபம் ஒரு பக்கம். இந்த நிலையிலே தமிழ் நாட்டாரின் ஆதரவு புதுச்சேரிக்கு எட்டுவதிலும் எவ்வளவோ சிரமமிருந்தது. மேலும் **இந்தியா** பத்திரிகை பிரிட்டிஷ் இந்தியாவிற்குள் வரக்கூடாதென்று 1909ஆம் ஆண்டில் அரசாங்கம் தடைவிதித்தது. மற்றக் காரணங்களைவிட அதுவே இப்

பத்திரிகையின் ஆயுளை ஒரேயடியில் போக்கிவிட்டதென்று கூறலாம்.

மாணிக்டோலா வெடிகுண்டு வீச்சு சம்பந்தமாக ஸ்ரீ அரவிந்தர்பேரில் வழக்குத் தொடரப்பட்டிருந்தது. அதில் அவர் விடுதலையடைந்தார். பிறகு அவர் **கர்மயோகின்** என்ற ஆங்கிலப் பத்திரிகையைக் கல்கத்தாவிலிருந்து கொஞ்சகாலம் நடத்திவந்தார். அந்தப் பத்திரிகையைத் தழுவிக் **கர்மயோகி** என்ற பத்திரிகையைப் பாரதியார் புதுச்சேரியில் தொடங்கினுர். பின்னர் **விஜயா** என்ற தினசரித் தமிழ்ப் பத்திரிகை ஒன்றையும் தொடங்கினுர். இவையெல்லாம் 1910ஆம் ஆண்டிற்குள்ளேயே மறைந்து போயின.

பத்திரிகைத் தொண்டு முடிவடைந்தது. பாரதியாரின் வறுமையும் துன்பமும் மட்டும் வளர்ந்து கொண்டேதான் இருந்தன. தமது பொழுதையும், மனத்தையும் கவரக்கூடிய பத்திரிகைகளும் நின்றுவிடவே அவர் வாழ்க்கை வெறிச் சென்று போயிருக்கவேண்டும்.

பாரதியார் புதுவைக்குத் தனியாகவே சென்ருர். மனைவி திருமதி செல்லம்மா பாரதி சென்னையிலே யிருந்தார். பிறகு அவருடைய தமையனுர் வந்து கடையத்துக்கு அவரை அழைத்துச் சென்ருர்.

பின்னுல் திருமதி செல்லம்மா பாரதியும் புதுச்சேரி வந்து சேர்ந்தார். குடும்பத்தைப் பராமரிக்க வேண்டிய பொறுப்பும் சேர்ந்து கொண்டது.

பாரதியார் எத்தனையோ துன்பங்களை அநுபவித்தார். அவருடைய நிலையினைச் **சித்தக்கடல்** என்ற சிறு பகுதியினில் அவர் எழுதியுள்ள கீழ்க்கண்ட வாசகத்திலிருந்து ஒருவாறு தெரிந்து கொள்ளலாம்.

''மண்ணையும், காற்றையும், கடலையும் எத்தனை யுகங்கள் ஒரே வடிவத்தில் வைத்துக் காப்பாற்றுகிருய்! பரா

சக்தீ, எனது கருவி கரணங்களிலே நீ பரிபூர்ணமாக ஸந்நிதி கொண்டு என்னையும் அங்ஙனமே காக்கவேண்டும்.

இன்பமில்லையா ?

பராசக்தி, இந்த உலகத்தின் ஆத்மா நீ.

உனக்கு அறிவில்லையா? உனக்குக் காது கேட்காதா? நாள்தோறும் உன்மீது பாட்டுப் பாடுகிறேன். நான் கேட்கும் வரங்களை யெல்லாம் கொடுத்துவிடக் கூடாதா?

முதலாவது, எனக்கு என்மீது வெற்றி தரவேண்டும். குழந்தைக்கு ஜ்வரம் வந்தது. நினது திருவருளால் குணமாய்விட்டது. இரண்டு மாத காலம் இரவும் பகலுமாக நானும் செல்லம்மாளும் புழுத்துடிப்பது போலத் துடித்தோம். ஊண் நேரே செல்லவில்லை, இருவருக்கும். உறக்கம் நேரே வரவில்லை—இருவருக்கும். எப்போதும் சஞ்சலம். பயம், பயம், பயம்! சக்தி, உன்னை நம்பித்தாவிருந்தோம். நீ கடைசியாகக் காப்பாற்றினாய். உன்னை வாழ்த்துகிறேன்.

கடன்காரர் தொல்லையும் அத்துடன் வந்து கலந்தது. வைத்தியனுக்குக் கொடுக்கப் பணமில்லை. குழப்பம், குழப்பம்—தீராத குழப்பம்! எத்தனை நாட்கள்! எத்தனை மாதங்கள்! எத்தனை வருஷங்கள்!

பராசக்தி, ஓயாமல் கவிதை எழுதிக் கொண்டிருக்கும்படி திருவருள் செய்யமாட்டாயா? கடன்களெல்லாம் தீர்ந்து, தொல்லை யில்லாதபடி என் குடும்பத்தாரும் என்னைச் சார்ந்த பிறரும் வாழ்ந்திருக்க, நான் எப்போதும் உன் புகழை ஆயிரவிதமான புதிய புதிய பாட்டுக்களில் அமைக்க விரும்புகிறேன். உலகத்தில் இதுவரை எங்குமில்லாதபடி அற்புதமான ஒளிச் சிறப்பும், பொருட் பெருமையும் உடைய பாட்டொன்று என் வாயிலே தோன்றும்படி செய்யவேண்டும்.

தாயே, என்னைக் கடன்காரர் ஓயாமல் வேதனைப் படுத்திக் கொண்டிருந்தால், நான் அரிசிக்கும், உப்புக்கும் யோசனை செய்து கொண்டிருந்தால் – உன்னை எப்படிப் பாடுவேன் ?

மனைவியைப் பிரிந்து செல்லும்படி சொல்வதில் பயனில்லை. அவளும் உனது சரணையே நம்பி, என்னுடன் எப்போதும் வாழ்ந்து கொண்டு, உனது தொழும்பிலே கிடைக்கும் புகழில் பங்குபெற்று மேன்மையுற விரும்புகிருள். இயன்ற வரை உண்மையோடுதானிருக்கிருள். அவளையும் நீ ஸம்ரக்ஷணை செய்யவேண்டும்.

அவளுக்கு நோயின்மை, கல்வி, கவலையின்மை, பக்தி, ஞானம் முதலிய சோபனங்களெல்லாம் ஏற்படுத்திக் கொடுக்கவேண்டும்.

குழந்தையை உனது குழந்தையாகக் கருதி, இவ்வுலகத்தில் நீடித்துப் புகழுடன் வாழும்படி திருவருள் செய்ய வேண்டும். காசியிலிருக்கும் குழந்தையையும் நீதான் காப்பாற்ற வேண்டும்.

எனது குடும்ப பாரமெல்லாம் உன்னைச் சேர்ந்தது. உன்னைப் புகழ்ச்சி புரியும் தொழில் என்னைச் சேர்ந்தது. தாயே, ஸம்மதந்தானு ?

மஹா சக்தி ! என்னுள்ளத்தில் எப்போதும் வற்ருத கவிதையூற்று ஏற்படுத்திக் கொடு.

ஓயாமல் வியாதிபயம் கொண்டு உளைகின்ற நெஞ்சமே! தூ! தூ! தூ! கோழை.

புகையிலை வழக்கம் தொலைந்து விட்டது, பராசக்தியின் அருளால். இனிக் 'கஸரத்' வழக்கம் ஏற்படவேணும், பராசக்தியின் அருளால். தோள் விம்மி வயிரம் போலாக வேணும். நெஞ்சு விரிந்து, திரண்டு வலிமையுடையதாக வேணும். இரத்தம் மாசு தீர்ந்து, நோயின்றி, நன்ருக ஓடி-

உடலை நன்கு காத்துக் கொண்டிருக்கவேணும்—பராசக்தி யின் அருளால்.

செட்டி பணத்துக்கு எத்தனை நாள் பொய் சொல்லு கிறது? பொய் வாயிதா, பொய் வாயிதா, பொய்வாயிதா—தினம் இந்தக் கொடுமைதானா ? சீச்சீ !

பராசக்தி—உன்னை நான் நம்புவதை முற்றிலும் விட்டு, நிச்சயமாக நாஸ்திகனாய் விடுவேன், நீ என்னை அற்பத் தொல்லைகளுக்கு உட்படுத்திக் கொண்டே யிருந்தால்.

மஹாசக்தி—நீ யிருப்பதை எவன் கண்டான் ? உனக்கு அறிவுண்டென்பதை எவன் கண்டான்? இந்த உலகம்—சரி, சரி, இப்போது உன்னை வையமாட்டேன். என்னைக் காப்பாற்று. உன்னைப் போற்றுகிறேன்.

பிறருக்கு நான் திங்கு நினையாதபடி நீ அருள் புரிந் தால் நல்லது. துஷ்டர்களைக்கூட நீ தண்டனை செய்து கொள். எனக்கு அதிலே ஸந்தோஷமில்லை. எனக்குப் பிறர் செய்யும் திங்குகளை நீ தவிர்க்கவேண்டும். நான் உன்னையே சரணடைந்திருக்கிறேன்.

சொல்லு! மனமே, சொல்லு, பராசக்தி வெல்க!

பராசக்தி வெல்க."

இந்தக் குறிப்பு 1915 ஜூலை 2ஆந்தேதி எழுதப்பட் டுள்ளது. அதுசமயம் பாரதியாரின் இரண்டாவது குழந்தை சகுந்தலை மட்டும் அவருடன் இருந்தது. முதற் குழந்தை தங்கம்மா காசியில் வாழ்ந்தது. சகுந்தலைக்குக் காய்ச்சலால் மிகவும் கவலைக்கிடமான நிலைமை ஏற்பட் டிருக்கிறதென்று தெரிகிறது. இதே மாதத்தில் பரலி சு. நெல்லையப்பருக்கு எழுதியுள்ள கடிதத்திலும் இது விஷயம் குறிப்பிடப்பட்டிருக்கிறது.

இந்தத் துன்பக் கனலில்தான் அவருடைய கவிதையும் எழுத்தும் புடமேறி மெருகு பெற்றுயர்ந்தன. அவருடைய

மிகச் சிறந்த பாடல்களும் கதை கட்டுரைகளும் புதுச்சேரி வாழ்க்கைத் துயரினிடையே உருப்பெற்றன. பாஞ்சாலி சபதம், கண்ணன் பாட்டு, குயில்பாட்டு ஆகியவை இங்கே எழுதப்பெற்றவை. ஜீவசக்திநிறைந்த புதிய உரைநடையில் பல கதைகள், கட்டுரைகள் இங்கு உதயமாயின. பாரதி யாருடைய கவிதையும் உரைநடையும் புதுச்சேரியில் மெருகேறிப் பூரண முதிர்ச்சி யடைந்தன என்று பொதுவாகக் கூறலாம்.

பாரதியார் துன்ப வாழ்க்கை நடத்தினுர் என்று சொல்லுவதால் அவருக்கு யாருமே உதவி செய்யவில்லை என்று தீர்மானித்து விடக்கூடாது. புதுச்சேரியிலேயே பொன்னு முருகேசம் பிள்ளை, அவர் மனைவி அன்ணியம்மாள் என்றழைக்கப்பெறும் சௌந்திரம்மாள், விளக்கெண்ணெய்ச் செட்டியார், குவளைக் கண்ணன், சுந்தரேசையர், கிருஷ்ணசாமி செட்டியார் (வெல்லச்சு செட்டியார்) போன்றவர்கள் அவரவர்களுக்கு இயன்ற வழியிலே பாரதியாருக்கு உபகாரமாக இருந்தார்கள். பிரிட்டிஷ் இந்தியாவிலிருந்தும், சில சமயங்களில் தென்னுப்பிரிக்காவிலிருந்தும் பொருளுதவி கிடைத்து வந்தது. அந்த உதவி கைக்கு வந்து சேருவதில் எத்தனையோ சிரமம் உண்டு.

ஏ. ரங்கசாமி ஐயங்கார் அவர்கள் சுதேசமித்திரன் பத்திரிகையை ஏற்று நடத்தத் தொடங்கிய பின் மறுபடியும் அப்பத்திரிகைக்கு எழுதும் சந்தர்ப்பம் பாரதியாருக்குக் கிடைத்தது. அரசியல் கலப்பில்லாதவாறு எழுதுவதென்று ஏற்பாடாயிற்று. அதற்காக மாதம் முப்பது ரூபாய் பாரதியாருக்குச் சம்மானம்.

"ரங்கசாமி ஐயங்கார் பாரதியாருக்கு முப்பது ரூபாய்தானு கொடுத்தார் என்று யாரும் அசட்டுத்தனமாகக் கேட்க வேண்டாம். ஐயங்கார் சுதேசமித்திரனை வாங்கி நடத்துகையில், அது நஷ்டத்தில்தான் நடந்து

வந்தது. மேலும், அப்பொழுது முப்பது ரூபாய் என்பது இப்பொழுது நூறு ரூபாய்க்குச் சமானம். ஜீவாதாரமாக மாதம் முப்பது ரூபாய் பாரதியாருக்குக் கொடுத்து வந்து, அவரது பாடல்களைப் பிரசுரம் செய்த ரங்கசாமி ஐயங்காரைத் தமிழர்கள் எக்காலத்திலும் மறக்கலாகாது. அவரையும் அவரது ஜீவநாடியைப் போல் விளங்கி வந்த ஸி. ஆர். ஸ்ரீநிவாசனையும் தமிழ் நாடு முழுமனத்துடன் பாராட்டி வாழ்த்த வேண்டியதுதான் நேர்மையான கடமையாகும்" (வ. ரா.—**மகாகவி பாரதியார்**).

1097-ஆம் ஆண்டு செப்டம்பர் மாதவாக்கில் நின்று போன பாரதியாரது கட்டுரைகள் சுதேசமித்திரனில் 1915-ஆம் ஆண்டு ஜூன் மாதம் முதல் மறுபடியும் வெளிவரலாயின. 1915 ஜூன் 15-ல் **எதிர் ஜாமீன்.** என்ற கதை வெளியாயிற்று. பிறகு அடுத்த ஆண்டு ஜனவரியில்தான் **கிச்சடி**யைப் பார்க்கிறோம். 1916 பிப்ரவரியிலிருந்து தொடர்ந்து கட்டுரைகள் வர ஆரம்பிக்கின்றன. அதற்கு மேலே தான் மாதா மாதம் முப்பது ரூபாயும் நிச்சயமாக வரத் தொடங்கியிருக்கும். இடையே கழிந்த பல ஆண்டுகளில் அன்பர்கள் உதவியும், பாஞ்சாலி சபதம் ஜன்மபூமி முதலான நூல்களின் வெளியீட்டாலும், லோகோபகாரி, ஞானபாநு முதலிய பத்திரிகைகளுக்கு எழுதிய கட்டுரைகளாலும் ஒரு வேளை கிடைத்திருக்கக்கூடிய பணமும் தவிர அவருக்கு வேறு வருவாய் இல்லை.

" எங்கேனும், எப்படியேனும் பணம் கண்டு பிடித்து ஒரு நண்பன் பெயரால் நமக்கனுப்புக. தம்பி, உனக்கேனடா இது கடமை என்று தோன்றவில்லை?" என்று 1915 ஜூலை 19-ல் பரலி நெல்லையப்பருக்கு அவர் எழுதியுள்ள கடித வாக்கியத்தில் பாரதியாருடைய பண முடை மறைந்து நின்று மிக நன்றாகத் துன்பக் கோலத்தில் காட்சியளிக்கிறது.

ஆனால் பாரதியாரின் புதுச்சேரி வாழ்க்கை எல்லா அம்சங்களிலும் துன்பம் நிறைந்திருந்ததாக யாரும் நினைக்கக் கூடாது. அவருக்கு இரண்டு பெரிய மஹான்களின் தொடர்பும், நட்பும் அங்கே கிடைத்தன. "கலியப்தம் 5011 பங்குனி 21 ந் தேதி (1911 ஏப்ரல் 3) ஸ்ரீ அரவிந்த கோஷ் புதுவைக்கு வந்தார். வந்த வகையில் ஐந்தாறு மாத காலம் அவர் கோமுட்டித் தெருவில் ஸ்ரீமான் சங்கர செட்டியார் வீட்டில் தங்கி யிருந்தார் **(பால பாரதி).** ஸ்ரீ வ. வெ. சு. ஐயர் இவருக்குச் சற்று முன்பே வந்து சேர்ந்திருக்க வேண்டும். லண்டன் நகரத்தில் இந்திய விடுதியிலிருந்த மதன்லால் திங்கிரா என்னும் இளைஞன் 1909 ஜூலை 1–ஆம் தேதி கர்சான் வில்லி என்ற ஆங்கிலேயனைச் சுட்டு வீழ்த்தினன்; தானும் சுட்டுக்கொண்டு உயிர் துறந்தான். உடனே இந்திய விடுதியிலிருந்த சவர்க்கார், வ. வெ. சு. ஐயர் முதலியோரைக் கைது செய்ய ஏற்பாடாயிற்று. சவர்க்கார் பிடிபட்டார். ஐயர் மாறு வேடம் பூண்டு தந்திரமாகப் பல விபத்துக்களைச் சமாளித்துக் கொண்டு புதுச்சேரி வந்தடைந்தார்.

தேச பக்தியின் காரணமாகவே மூவரும் புதுச்சேரியிலே தஞ்சம் புக நேரிட்டது. ஸ்ரீ அரவிந்தர், ஐயருடைய கூட்டுறவு பாரதியாருக்குப் பெரிதும் இன்பமும் ஆறுதலும் அளித்திருக்க வேண்டும். பாரதியார் சிறந்த கவிஞராகப் பூரண மலர்ச்சி பெறவும், ஸ்ரீ அரவிந்தர் ஆத்மஞானியாகவும், ஸ்ரீ ஐயர் மிகச் சிறந்த ரஸிகராகவும் புதுச்சேரி உதவிற்று. மூன்று வேறு துறைகளிலே மூவரும் சிறப் பெய்தினர்கள்; ஆனால் மூவரும் கவிதை உள்ளம் படைத்தவர்கள். தேசபக்தி, கடவுள் பக்தி முதலியவற்றில் ஆர்வமுடையவர்கள்.

அவர்களுடைய கூட்டுறவு அவரவருடைய தனித்தனி லட்சியங்களையும் பக்தியையும் வலுவடையச் செய்திருக்க

வேண்டும். மனத்தை வெல்லவும், சோம்பலை ஒழிக்கவும், தெய்வ நம்பிக்கையிலே செயலாற்றவும் பாரதியார் புதிது புதிதாகச் சங்கற்பம் செய்து கொள்ளுகிறார்.

"இந்த மனமாகிய கடலை வென்று விடுவேன். பல நாளாக இதை வெல்ல முயன்று வருகிறேன். இந்த மனத்தை வெல்ல நான் படும்பாடு தேவர்களுக்குத் தெரியும். இதிலே ப்ராண பயம், வியாதி பயம், தெய்வ பக்திக் குறைவு, கர்வம், மமதை, சோர்வு முதலிய ஸம்ஸ்காரங்கள் மிகுதிப்பட்டிருக்கின்றன. இவற்றை ஒழித்துவிட வேண்டும்.

"புகையிலைச் சாற்றினால் தலை கிறுக்குகிறது. இருபது லக்ஷம் தரம் புகையிலையை நிறுத்தி விடுவதாக ப்ரதிக்ஞை செய்திருக்கிறேன். இது வரை கைகூடவில்லை............"
(**சித்தக் கடல்** 1915 ஜூலை 1)

நோயென்றால் பாரதியாருக்குப் பயம் அதிகம். நோய்க் கிருமிகள் அணுகக் கூடாதென்று நிரம்பவும் எச்சரிக்கை எடுத்துக்கொள்ளுவார். வெளியிலிருந்து வீட்டிற்குள் நுழையுமுன்னே யாராயிருந்தாலும் காலைஅலம்பிச் சுத்தம் செய்து கொண்டுதான் வரவேண்டு மென்று கடுமையான உத்தரவு செய்திருந்தார். ஹோட்டல்களிலிருந்து ஏதாவது வாங்கி உண்ணக் கூசுவாராம். "ஓயாமல் வியாதி பயம் கொண்டு உளைகின்ற நெஞ்சமே! தூ! தூ! தூ! கோழை" என்று அவர் தம்மைப்பற்றிச் **சித்தக் கட**லில் எழுதியிருக்கிறார்.

பாரதியாருக்குக் கோபம் அதிகமாம். அவருடைய மனைவியோ நண்பர்களோ எதிர்த்துப் பேச முடியாது என்று வ. ரா. குறிப்பிடுகிறார்.

கற்பனை உலகத்திலே சதா சஞ்சரித்துக் கொண்டிருக்கும் கவிஞரோடு வாழ்க்கை நடத்துவது எளிதான காரிய

மல்ல. அவர் எந்தச் சமயத்திலே எதை எதிர்பார்க்கிருரென்று மற்றவர்கள் காண்பது மிகவும் சிரமம். அதனல் கவிஞர் பெரிதும் ஏமாற்ற மடைவதும் கோபங் கொள்வதும் சகஜம். மேலும் சிறிய நிகழ்ச்சிகளெல்லாம் அவர் உள்ளத்திலே பெரியதோர் உணர்ச்சி வெள்ளத்தைத் தோற்றுவித்துவிடும். அதன் குமுறலை அவரே சகிக்க முடியாதென்ருல் மற்றவர்கள் நிலைமையைச் சொல்ல வேண்டியதில்லை. கவிஞரின் உள்ளம் மிக மிக நுட்பமானது. மற்றவர்களுக்குச் சாதாரணமாகத் தோன்றுபவை எல்லாம் அவருடைய நுண்ணிய உள்ளத்திலே ஆழ்ந்து பதிந்து அலைமோதும்; கொந்தளித்து மேலெழும்—அனல் வீசவும் தொடங்கும். அவற்றின் எதிரொலியை அவரைச் சூழ்ந்து நிற்போர் அநுபவித்துத்தான் ஆக வேண்டும். விஷயம் உணர்ந்தவர்கள் இதை ஒரு பாக்கியமாகக் கருதுவார்கள். மற்றவர்களுக்கோ பெரிய வேதனை தான்.

இவ்வாறு கோபமும் படபடப்பும் கவிதைத் துடிப்பும் மிகுந்த கணவருடன் வாழ்வதிலே திருமதி செல்லம்மாபாரதி எத்தனையோ துன்பங்களைச் சகித்துக்கொள்ள வேண்டியிருந்திருக்கும். அதிலும் குடும்பம் நடத்துவதற்குவேண்டிய பொருளும் இல்லாமல் புதுச்சேரியில் மறைந்து வாழ்கின்ற போது அவருடைய நிலைமை எவ்வாறிருந்திருக்கும்? ஆனல் இங்கே கோபத்தையும் படபடப்பையும் மட்டும் கூறி விட்டு விடுதல் சரியல்ல. பாரதியாரின் அன்பு வழிந்தோடும் நிலையையும் கூறவேண்டாமா? அது கவிஞருடைய அன்பு. சாதாரண உள்ளங்கள் எட்ட முடியாத உயரத்தை அது அடைந்திருக்கு மல்லவா? அதன் பெருக்கையும் அவர் மனைவியாரும் மற்றவர்களும் அநுபவித்திருப்பார்களல்லவா? மேலும் பாரதியார் பெண்களுக்கு மிக உயர்ந்த ஸ்தானம் அளிக்க வேண்டு மென்ற கொள்கை யுடையவர்.

"ஜகத்திற்கு ஆதாரமாகிய பெருங் கடவுள் ஆண் பெண் என இரண்டு கலைகளுடன் விளங்குகிறது. இரண்டும் பரிபூர்ணமான சமானம். பெண்ணை அணுவளவு உயர் வாகக் கூறுதலும் பொருந்தும்" என்பது அவர் வாக்கு. பெண்களைப்பற்றிய அவருடைய கட்டுரைகளிலும் கவிகளிலும் அவருடைய உள்ளம் தெரிகின்றது. அதன் லட்சியக் கனவை உணர்ந்து அநுபவிக்கக்கூடிய வாய்ப்பும் அவருடைய மனைவியாருக்கு உண்டல்லவா?

நிவேதிதா தேவியார் பாரதியாருக்கு முதற் குருவாக அமைந்தார் என்று முன்பே கூறினேன். ஆன்மிகத் துறையிலே ஆர்வத்தைப் பெருக்க ஸ்ரீ அரவிந்தரின் நட்பும் கிடைத்தது. மேலும் குள்ளச்சாமி, கோவிந்தஸ்வாமி, யாழ்ப்பாணத்துச் சுவாமி ஆகிய ஞானிகளின் தரிசனமும் உபதேசமும் தமக்குக் கிடைத்ததாகப் **பாரதி அறுபத்தாறு** என்னும் நூலில அவர் குறிப்பிடுகிறார். சித்தர்களின் வாக்குப் போல அந்நூல் அமைந்திருக்கிறது. குள்ளச் சாமியைப் பற்றிப் பாரதியார் சில கட்டுரைகளிலும் எழுதி யிருக்கிறார். பராசக்தியினிடத்தே பாரதியாருக்கு இளமையி லிருந்தே பக்தியுண்டு. பராசக்தியின் மேல் அற்புதமான பல பாடல்கள் பாடியிருக்கிறார். கண்ணனும், முருகனும் அவர் உள்ளத்தை ஒருங்கே கவர்ந்திருக்கிறார்கள். **கண்ணன் பாட்டு** தமிழ் இலக்கியத்திலே தனியிடம் பெறுகின்றது. புதுவை மணக்குளப் பிள்ளையாரின் மேல் **விநாயகர் நான் மணிமாலை** பாடியிருக்கிறார். தோத்திரப் பாடல்களும், வேதாந்தப் பாடல்களும் அவர் பாடியன எத்தனையோ. இவை யெல்லாம் அவருக்கு ஆத்மிகத் துறையிலிருந்த ஆர்வத்தை நன்கு காண்பிக்கின்றன. வாழ்க்கையிலே துன்பம் உழன்ற பாரதியாருக்குப் பக்தியே வலிமையளித் திருக்கிறது. நாட்டுப் பற்றும் தாய் மொழிப் பற்றும்

அவருடைய மூச்சு நின்றுபோகாமல் உயிரளித்து வந்துள்ளன.

முதல் உலக யுத்தத்தின் இறுதியில் இந்தியாவுக்குப் பல நன்மைகள் ஏற்படும் என்று பலர் எதிர் பார்த்தார்கள். பாரதியாரும் அவர்களில் ஒருவர். யுத்தம் 1918 நவம்பரில் முடிவுற்றது. பாரதியாருக்கு அதற்கு மேலும் புதுச்சேரியில் தங்கியிருக்க மனமில்லை. ஏ. ரங்கசாமி அய்யங்காரின் ஆலோசனையின்படி அவர் பிரிட்டிஷ் இந்தியாவுக்குப் புறப்பட்டார். சூழ்நிலை அதற்குச் சாதகமாக இருந்தது.

இருப்பினும் புதுச்சேரி எல்லையைத் தாண்டியதும் அவரைக் கைது செய்து கடலூரில் சிறையிலிட்டனர். ஆனால் ரங்கசாமி ஐயங்காரின் முயற்சியால் விரைவில் விடுதலை கிடைத்தது. பாரதியார் சென்னைக்கு வந்து, பின் கடையம் சென்று அங்கு சில காலம் வாசம் செய்யலானார். கடையத்திலிருந்து அவர் பரலி. சு. நெல்லையப்பருக்கு 1918 டிசம்பர் 21 ஆம் தேதியிட்டு ஒரு கடிதம் எழுதியிருக்கிறார். இதிலிருந்து அவர் 1918–டிசம்பரில் புதுச்சேரியை விட்டுப் புறப்பட்டுக் கடையம் அடைந்தார் எனக் கொள்ளலாம்.

கடையத்திற்கு வரும்போதே பாரதியாரின் உடல்நிலை மிகவும் சீர்குலைந்து விட்டது. உள்ளத்திலே உணர்ச்சி வேகம் மாறாதிருப்பினும் உடல் ஒடிந்துபோய் விட்டது. அவர் ஒரு புது மனிதராகக் காணப்பட்டார்.

புதுச்சேரியிலிருந்து திரும்பிய பாரதியாரைப்பற்றி திரு எஸ். ஜி. இராமானுஜலு நாயுடு 1921 செப்டம்பர் 17–ஆந் தேதி சுதேசமித்திரன் வார அநுபந்தத்தில் எழுதியுள்ள கட்டுரையில் பின்வருமாறு கூறுகிறார்:

"ஸ்ரீமான் பாரதியார் புதுச்சேரியினின்று வந்த பின்பு பழைய பாரதியின் உருவமேயில்லை. ஒரு வங்காளி போன்ற

உருவத்தோடு காணப்பட்டார். அதற்கானபடி தலைப் பாகையும் பிறவும் பொருந்தி யிருந்தன. அவரது நடையும் கோலமும் யாவுமே மாறின. எல்லாம் புதுவிதமாக இருந்தது. ஒரு பிரம்ம ஞானி போன்றும் காணப்பட்டார். அவரைப் பார்த்தாலே உற்சாகந் தோன்றிவிடும். எவ்விதக் கர்வமும் இல்லை. அவர் படிப்பை அவர் அறியார். சிறு குழந்தை போன்றும் இருப்பார். தமக்கென்று ஒரு பெருமையை அவர் வைத்துக்கொள்ளவில்லை. எந்த இடத்தில் அவரை உட்கார வைத்துப் பாடச் சொன்னா லும் உடனே ஆனந்தத்துடன் பாட ஆரம்பித்து விடுவார். அவர் பாடுங்கால் கூட இருந்து கேட்ட பாக்கியம் நமக் குண்டு. அவர் பாடுகையில் அந்தப் பாட்டின் அத்தனை ரசங்களும் அவரது வதனத்தில் தத்ரூபமாய்த் தோன்றும்—ஜ்வலிக்கும். எவரையும் லக்ஷ்யம் பண்ணுகிற சிந்தை அவருக்கில்லை. எல்லோருக்கும் வணங்கிய உடம்பாகத் தாழ்ந்து பணிந்து நடந்து கொள்வார். ஆனால் ஏதேனும் நெஞ்சில் எண்ணம் குடிகொண்டு விட்டால் ரஜபுத்திர வீரனாகி விடுவார்."

பழங் கொள்கைகள் சற்று வலிமையாக வேரூன்றி நிற்கும் நாட்டுப்புறத்திலே அவருடைய போக்கு யாருக்கும் திருப்தியளிக்கவில்லை. மேலும் பதின்மூன்று, பதினான்கு ஆண்டுகளுக்குப் பிறகு கடையத்திற்குத் திரும்பிவரும் அவரை எத்தனை பேர் அறிந்து கொண்டிருப்பார்கள்? வறுமையின் பிடி வேறு அங்கேயும் தளராமல் இருந்தது.

இந்த நிலையில்தான் பாரதியார் எட்டயபுரம் ஜமீன் தாருக்கு இரண்டு சீட்டுக் கவிகள் 1919 மே 2ஆம் தேதியில் எழுதியிருக்கிறார்.

கிராமத்திலே அவரால் வசிக்க முடியவில்லை. மறுபடி யும் சென்னையை நோக்கிப் புறப்பட்டார். சுதேசமித்திரன்

மறுபடியும் அன்போடு அவரை ஏற்றுக்கொண்டது. மீண்டும் அதன் உதவியாசிரியரானார்.

இரண்டாம் முறை அவர் சுதேசமித்திரனில் சேர்ந்த காலம் நிச்சயமாகத் தெரியவில்லை. 1920 ஜுன் 20ஆம் தேதியன்று பொட்டல் புதூரிலே **இஸ்லாம் மார்க்கத்தின் மஹிமை** என்ற பொருள்பற்றி அவர் பேசியதாகத் தெரிகிறது. கடையத்தில் வசித்தபோது இது நிகழ்ந்திருக்கலாம். 1920 ஏப்ரல் 9ஆம் தேதி ஸ்ரீ வ. வெ. சு. ஐயர் புதுச்சேரியிலிருந்து சென்னைக்கு வருகிறார். அன்று சென்னையில் அவருக்குப் பெரிய வரவேற்பு நடந்தது. பலர் அவரைப் பாராட்டிப் பேசியிருக்கிறார்கள். பாரதியார் அது சமயம் சென்னையில் இல்லையென்றும் தெரிகிறது. 1920 நவம்பர் 15ஆம் தேதியிலிருந்து சுதேசமித்திரனில் தொடர்ந்து, அநேகமாக நாள்தோறும் குறிப்பு, ரஸத்திரட்டு, விநோதத் திரட்டு என்பன போன்ற தலைப்புக்களுடன் பாரதியார் எழுதுவதைப் பார்க்கும்போது அவர் அது சமயந்தான் மறுபடியும் உதவியாசிரியராக வேலை ஏற்றுக்கொண்டிருக்கலாம் என்று தோன்றுகிறது.

இவ்வாறு அவர் எழுதும் குறிப்புகள் பொதுவாக இந்திய அரசியலைப்பற்றி மட்டுமல்லாமல் வேறு விஷயங்களைப் பற்றியும், ஐர்லாந்து, துருக்கி போன்ற பிற நாடுகளைப் பற்றியும், முதல் உலக யுத்தத்தின் விளைவாகத் தோன்றிய நிகழ்ச்சிகளைப் பற்றியும் இருக்கின்றன.

உலக விஷயங்களைப் பற்றி எழுதும்போதும் ஆங்கிலேயரைத் தாக்கியும், தாய்நாட்டு விடுதலைக்கு ஆர்வமூட்டக்கூடிய ஐரிஷ் சுதந்தரப் போராட்டம் போன்ற நிகழ்ச்சிகளைப் பற்றியும் அவர் முக்கியமாக எழுதுகிறார்.

இக் குறிப்புக்களெல்லாம் தனித்தனி இலக்கிய சிருஷ்டியல்லவென்றாலும், பாரதியாருடைய அரசியல் ஞான விரிவையும், கருத்துக்களையும், கொள்கைகளையும்

எழுத்துத் திறமையையும் இவை நமக்கு நன்கு எடுத்துக் காட்டுகின்றன. சக்தி வாய்ந்த எழுத்து நடையையும், வசையுரை, ஹாஸ்யம் முதலியவற்றையும் ஆங்காங்கு இவை நன்கு வெளிப்படுத்துகின்றன. அந்தக் காலத்து உலக நிலையையும் அவை நமக்கு ஒருவாறு புலப்படுத்து கின்றன.

இடையிடையே ரிஷிகள் கடன், மகாமகம் போன்ற அழகிய கட்டுரைகளும் எழுதி யிருக்கிறார்.

சென்னைக்கு மீண்டபின் பாரதியார் பழையபடி பல கூட்டங்களில் பேசுவதைக் காண்கிறோம். சில சமயங்களில் வெளியூர்களுக்குச் சென்று சொற்பொழிவுகள் நிகழ்த்து வதுமுண்டு. 1921 மார்ச் 25–ல் அவர் கூடலூர் சென்றி ருக்கிறார். அடுத்த ஆகஸ்டில் ஈரோட்டிற்கடுத்த கருங்கல் பாளையத்தில் ‘மனிதனுக்கு மரணமில்லை’ என்ற பொருள் பற்றிப் பேசியிருக்கிறார். அது விவரம் **எனது ஈரோடு யாத்திரை** என்ற கட்டுரையில் கூறப்படுகிறது. அடுத்த நாள் ஈரோட்டில் ‘இந்தியாவின் எதிர்கால நிலை’ என்ற பொருள் பற்றிப் பேசியிருக்கிறார். அதைப்பற்றி வேறொரு கட்டுரையில் எழுதுவதாகக் குறித்த பாரதியார் அதை எழுதவேயில்லை. அதற்குள் அவர் பேனா ஓய்ந்து விட்டது.

பாரதியாரின் உடல்நிலை மிகவும் சீர்குலைந்து விட்ட தென்று முன்பே குறிப்பிட்டேன். அந்த நிலையிலே திரு வல்லிக்கேணி பார்த்தசாரதி கோயில் யானை அவரைக் கீழே தள்ளிக் காயமுண்டாக்கிவிட்டது.

இரண்டாம் முறை சென்னைக்குத் திரும்பியதும் பாரதியார் முதலில் தம்பு செட்டி தெருவில் சில மாதங் கள் வசித்தார். பிறகு திருவல்லிக்கேணி துளசிங்கப் பெருமாள் கோவில் தெருவிலுள்ள ஒரு வீட்டிற்குக் குடி வந்தார். அடிக்கடி பார்த்தசாரதி சுவாமி கோயிலுக்குச்

செல்லுவார். கோயில் யானைக்குப் பழம் தேங்காய் அன்புடன் அளிப்பார்.

அந்தக் கோயில் யானைக்கு மதம் பிடித்திருந்த ஒரு நாளிலே அது பாரதியாரை இழுத்துக் கூடத்திற்குள் தள்ளிவிட்டது. குவளைக் கிருஷ்ணமாச்சாரியார் இதை எப்படியோ அறிந்து ஒரே பாய்ச்சலாக அங்கு வந்து பாரதியாரை வெளியில் எடுத்து வந்தார். பாரதியாருக்கு மண்டையிலும் உடம்பிலும் காயம்.

காயம் ஆறிப் பாரதியார் பிழைத்தார். ஆனால் இந்தச் சம்பவத்திற்குப் பிறகு அவர் நெடுநாள் உலகில் வாழவில்லை. வயிற்றுக்கடுப்பு நோய் அவரை மரணப்பிடியாகப் பிடித்தது. இளைத்துப் போயிருந்த அவருடைய உடம்பு அதன் பிடியை எதிர்த்துப் போராடி வெற்றி கொள்ளச் சக்தியற்றுவிட்டது. அதற்குப் பணிந்து விட்டது. 1921 செப்டம்பர் 10ஆம் தேதி தேசபக்தன் ஆசிரியராகவிருந்த வ. வெ. சு. ஐயர் ராஜத்துவேஷத்திற்காகக் கைது செய்யப்பட்டார். கைது செய்யப்படு முன்பே அவர் ஆசிரியர் பதவியினின்றும் விலகிவிட்ட போதிலும் தேசபக்தனில் இவர் இருந்த காலத்தில் வெளி வந்த ஒரு கட்டுரைக்காகச் சிறை புக நேர்ந்தது. சிறைக்குப் போகுமுன் ஐயர் நோய்வாய்ப்பட்டுக்கிடந்த பாரதியாரைப் பார்க்க வந்தார். அடுத்த நாள் இரவு சுமார் 1–30 மணிக்குப் பாரதியாரின் தூல வாழ்க்கை முடிவுற்றது.

பாரதியாரின் பிரிவைக் குறித்துச் சுதேசமித்திரனில் 1921 செப்டம்பர் 12ஆம் தேதியில் ஒரு குறிப்பு வெளியாகியிருக்கிறது: "தமிழ்நாடு போற்றும் ஸ்ரீ சுப்பிரமணிய பாரதியார் இவ்வுலக வாழ்வை நேற்றிரவு துறந்து விண்ணவருக்கு விருந்தாகிவிட்டார் என்ற செய்தியை அறிவிக்க நமது மனம் பதறுகிறது. சில தினங்களாக நோயினால் வருந்திக் கொண்டிருந்த அவரை மறுபடியும் ஸ்தூல

சரீரத்தில் பார்க்கப்போகிறதில்லை என்று நாம் நினைக்க வில்லை. திங்கட்கிழமையன்று மித்திரன் வேலைக்கு வந்து விடுவதாகச் சில தினங்களுக்கு முன் சொல்லியனுப்பிய அவர் அத்திங்கட்கிழமையன்று சாம்பராகி விட்டது என்ன கொடுமை!........."

அதே நாளில் நகரச் செய்தி என்ற தலைப்பின்கீழ் இன்னும் சில விவரங்கள் எழுதப்பட்டுள்ளன: "ஒரு வார மாக ஸ்ரீ சுப்ரமணிய பாரதி தேக நோய் கொண்டு திருவல் லிக்கேணியில் அசௌக்கியமாய் இருந்து திடீரென்று நேற்று இரவு 1 மணிக்கு இம்மண்ணுலகைவிட்டு விண்ணுலகமடைந்தார். அவர் இறந்த செய்தி தெரிந்த வுடன் ஸ்ரீமான்களான புதுச்சேரி ஸ்ரீனிவாசாச்சாரியார், திருமலாசாரியார், ஹரிஹர சர்மா, சின்னசாமி, நெல்லை யப்பர், நீலகண்டன் முதலான பலர் வந்தனர்......... ஹரிஹர சர்மா, கிருஷ்ணசாமி சர்மா, முதலானவர்கள் பிரேதத்தைத் தாங்கிக் கொண்டு சுடுகாடு சென்று அங்கு தகனத்துக்குச் சற்று முன்னர் ஸ்ரீமான் சர்க்கரை செட்டி யார், கிருஷ்ணசாமி சர்மா, ராமச்சந்திர அய்யர் இவர்கள் தமிழிலே பேசிய பிறகு, சுரேந்திரநாத் ஆர்யா தெலுங்கில் பேசினர். பாரதியார் இயற்றிய கீதங்கள் பாடிய பிறகு தீ மூட்டப்பட்டது. பாரதியார் ஆவி நற்கதியடையும்படி எல்லோராலும் பிரார்த்திக்கப்பட்டது."

தமது எழுத்து வன்மையினலே நாட்டிலே விழிப்பை யும் மொழியிலே மறுமலர்ச்சியையும் உண்டாக்கிய கவிஞர் தமது 38வது வயதிலேயே மறைந்து விட்டார். அவருடைய உள்ளத்தினின்று பொங்கிய உணர்ச்சிக் கனலை அவ ருடைய உடம்பு அதற்குமேல் தாங்கமுடியவில்லை. உடல் தாங்க முடியாததைத் தமிழ் தாங்கி நிற்கிறது. அதனல் புதிய உரம் பெற்று வளர்கின்றது.

# பாரதி தமிழ்

பாரதி என்ற பட்டம் பெற்று சி. சுப்பிரமணிய பாரதியார் சமஸ்தானப் புலவராக இளமையிலேயே வாழ்க்கை தொடங்குகிருர். ஆனல் அந்த வாழ்க்கையில் அவருக்கு விருப்பம் நீண்டநாள் இருக்கவில்லை. அவருடைய இயல்பிற்கு அது ஒத்துக் கொள்ளுமா? தேச விடுதலையிலே ஆர்வமுள்ளவர் அவர்; இந்த ஆர்வத்தை அவருடைய காசி வாழ்க்கை ஓங்கச் செய்திருக்க வேண்டும். அவருடைய தேசியப் பற்றுதலுக்கு உகந்தவாறு சுதேசமித்திரன் பத்திரிகையில் உதவி ஆசிரியர் வேலை கிடைக்கிறது. கொஞ்ச நாட்களில் அவரே **இந்தியா** என்ற பத்திரிகையின் ஆசிரியராகிவிடுகிருர். அரசியல் கிளர்ச்சி மிகுந்த தலைநகர்ப் பட்டினமான சென்னை வாழ்க்கையும், பத்திரிகைத் தொழிலும் அவருடைய தேச பக்தியையும், மொழியன்பையும் மேலும் மேலோங்கச் செய்கின்றன. அவருடைய கவிதையுள்ளம் தேசபக்திக் கனலால் ஒளிவிட்டு மலரத் தொடங்குகிறது. சமஸ்தானத்திற்கு உகந்த பழைய சம்பிரதாயப் பாடல்கள் பாடிய கவிஞர் நாட்டு மக்களின் உள்ளத்திலே தேசபக்திக் கனலைத் தூண்டும் தேசியக் கவியாக மாறுகிருர். சமஸ்தானத் தொழிலிலே உலாவும் மடலும் பாடியதாக வ. ரா. குறிப்பிடுகிருர். அத்தகைய கவிதைகள் மறைந்து உணர்ச்சி மிக்க தேசியப் பாடல்கள் தோன்றுகின்றன. பாரதியார் மக்களிடத்தே ஒரு தளர்ச்சியையும், தோல்வி மனப்பான்மையையும் காண்கிருர். அவற்றைப் போக்கி மக்களைத் தட்டி எழுப்ப வேண்டுமென்று துடிக்கிருர். பாரத நாட்டின் பெருமையையும், தமிழ் நாட்டின் பெருமையையும், தமிழ் மொழியின் தனிப் பெருமையையும் பாடுகிருர். தாமாக

எழுதிய கவிதைகளோடு பங்கிம்சந்திரர் எழுதிய "வந்தே மாதரம்" என்ற அமர கீதத்தின் மொழிபெயர்ப்பும், மாஜினியின் பிரதிக்கினையை அடிப்படையாகக் கொண்ட வீரப் பாடலும் உருவாகின்றன.

**மன்னும் இமய மலையெங்கள் மலையே**
**மாநில மீதது போற்பிறி திலையே**

என்று பாரத நாட்டுப் பெருமையை விரிக்கிறார்.

**வாழிய செந்தமிழ் வாழ்கநற் றமிழர்**
**வாழிய பாரத மணித் திருநாடு**

என்று நாட்டு வாழ்த்துப் பாடுகிறார்.

இப் பாடல்களெல்லாம் 1908 ஜனவரிக்கு முன்பே வெளிவந்தவை. 1904-ஆம் ஆண்டு நவம்பர் மாதத்தில் சென்னைக்கு வந்து சேர்ந்த பாரதியார் மூன்று ஆண்டு களிலே தேசியக் கவியாகப் பெரிதும் முன்னேறி விட்டார். இப்பாடல்களிலே நந்தனார் சரித்திரக் கீர்த்தனைப் பாடல் களின் மெட்டுக்களையும், (இவற்றை நந்தனார் கீர்த்தனை அனுகரணப் பாடல்கள் என்று பாரதியாரே குறிப்பிட் டிருக்கிறார்) ஆநந்தக் களிப்பு, கிளிக்கண்ணிகள் முதலான இசைப் பாடல் வகைகளையும் காணலாம். இப்பாடல்களை எழுதுவதற்கு முன்பே எழுதிய சில பாடல்களைப் பார்த்தால் அவைகளுக்கிடையேயுள்ள வேறுபாடு நன்கு தெரியும். 1906 செப்டம்பரில் எழுதிய "யான்", "சந்திரிகை" என்ற சானெட்டுக்களைப் படிக்கும்போது இந்த வேறுபாடு நன்கு தெளிவாகின்றது. 1906-ல் வேல்ஸ் இளவரசருக்கு நல்வரவு கூறி எழுதிய ஆசிரியப்பாவில் "யாஅன்", "எறிவதூஉம்" என்பன போன்ற அளபெடைகளெல்லாம் வருகின்றன. ஆரம்பநிலைப் பாடல் என்பதை அதிலே நன்கு காணலாம்.

**இந்தியா** பத்திரிகையில் தமது விருப்பம்போல் யாதொரு தடையுமின்றி எழுதத் தொடங்கிய காலத்திலேயே அவருடைய கலைத் திறமை நன்கு அமைந்து விட்டது. அது புதுச்சேரி வாழ்விலே மெருகேறி, "குயில் பாட்டு", "கண்ணன் பாட்டு", "பாஞ்சாலி சபதம்" முதலிய பாடல்களில் பூரணமடைகிறது.

பாரதியாரின் கவிதையைப் படிக்கும்போது முதலிலே நமக்குத் தோன்றுவது அதன் எளிமையும் உணர்ச்சி வேகமுமேயாகும். அடிமைப்பட்டுக் கிடக்கும் நாட்டிற்கு விடுதலை வேண்டும் என்று அவர் உள்ளம் பொங்குகிறது. அவருக்கு இயல்பாக அமைந்துள்ள கவிதைத் திறமையிலே அந்த உணர்ச்சி உண்மையான உருப் பெறுகிறது. உள்ளத்திலே தெளிவிருக்கும்போது அது தெள்ளிய எளிய முறையிலே அனைவருக்கும் புரியும்படியாக வெளியாகின்றது. அந்தத் தெளிவும் உணர்ச்சியும் இல்லாதபோது தான் வார்த்தைகள் நேராக வருவதில்லை; பின்னிக் கொள்கின்றன; மனப்பாடம் செய்த நிகண்டுகளைத் தஞ்சம் புக நேரிடுகிறது.

ஆதலால்தான், "மடாலயங்களிலும், சமஸ்தானங்களிலும், பண்டிதர்களிடையேயும் தேங்கி வளர்ச்சி குன்றிக்கிடந்த தமிழைக் காப்பாற்றி தேசிய வாழ்க்கையின் முன்னணிக்குப் பாரதியார் கொண்டு வந்தார்" என்று அவரைப் புகழ்கிறார்கள். கவிதையைப்பற்றிப் பாரதியார் 'புனர் ஜன்மம்' என்ற கட்டுரையிலே தமது கருத்தைத் தெளிவாக விளக்கி யிருக்கிறார்: "நமது கவிதையிலே ஆனந்தம் குறையத் தொடங்கிற்று, ருசி குறைந்தது. கரடு முரடான கல்லும் கள்ளி முள்ளும் போன்ற பாதை நமது கவிகளுக்கு நல்ல பாதையாகத் தோன்றலாயிற்று. கவிராயர் 'கண்' என்பதை 'சக்கு' என்று சொல்லத் தொடங்கினர். ரஸம் குறைந்தது; சக்கை அதிகப்பட்டது;

உண்மை குறைந்தது; பின்னல் திறமைகள் அதிகப் பட்டன.........கவிதைகளில் ஒளி, தெளிவு, குளிர்ந்த நடை மூன்றும் இருக்கவேண்டுமென்பது கம்பனுடைய மத மாகும். இதுவே நியாயமான கொள்கை.

"மேலும், நெடுங் காலத்துக்கு முன்னே எழுதப்பட்ட நூல்கள் அக்காலத்து பாஷையைத் தழுவினவை. காலம் மாற மாற, பாஷை மாறிக்கொண்டு போகிறது; பழைய பதங்கள் மாறிப் புதிய பதங்கள் உண்டாகின்றன. புலவர் அந்த அந்தக் காலத்து ஜனங்களுக்குத் தெளிவாகத் தெரியக்கூடிய பதங்களையே வழங்க வேண்டும். அருமை யான உள்ளக் காட்சிகளை எளிமை கொண்ட நடையிலே எழுதுவது நல்ல கவிதை."

பாரதியாருடைய கவிதைகளிலும் கட்டுரைகளிலும் இந்த எளிமையை நாம் காண்கிறோம். உணர்ச்சி நேராக உள்ளத்தைத் தொடுகிறது. அரண்மனையிலே அடைபட் டுக்கிடந்த தமிழ், மக்களின் பொது மேடைகளிலே புத்துயிர் பெற்று அவர்களுடைய உள்ளக் கிளர்ச்சிகளை வெளியிடும் வலிமை வாய்ந்த கருவியாக மலர்கிறது. நாடு விடுதலையடைவதற்கு அறிகுறியாகத் தமிழ் விடுதலை பெற்றது என்று அறிஞர்கள் மகிழ்ந்தார்கள்.

கவிதையைப் பற்றிப் பொதுவாக மேலே கூறும்போது கட்டுரையைப் பற்றியும் குறிப்பிட்டேன். உரைநடை யிலும் பாரதியார் சிறந்த இலக்கியம் உண்டாக்கியவர்.

சாதாரணமாக இக்காலத்திலே பாரதியாரைப்பற்றி நினைக்கும்போது அவருடைய கவிதையைத்தான் மனதில் வைத்துக் கொள்ளுகிறோம். ஒரு காலத்தில் பாரதியார் என்றால் அவருடைய தேசியப் பாடல்களே நினைவுக்கு வரும். அந்த நிலை மாறி அவருடைய மற்றக் கவிதைகளை யும் ஆராய்ந்து அனுபவிக்கும் காலம் வந்துவிட்டது. ஆனால்

இன்னும் அவருடைய உரைநடை இலக்கியத்தைப் பற்றி யாரும் அதிகமாக எண்ணுவதில்லை.

வேகமும், எளிமையும், நேருக்கு நேரான சம்பாஷணைப் போக்கும், இடையிடையே ஹாஸ்யமும் கலந்து ஒரு புதிய நடையில் பாரதியார் எழுதுகிறார். பேச்சு மொழியை அவர் கையாளுவதிலே ஒரு புதிய ஜீவன் இருக்கிறது. "ஞான ரத"த்தில் அமைந்துள்ள நடை ஒரு தனிச் சிறப்பு வாய்ந்தது. அதைக் கவிதை நடை என்றே கூறலாம். அவருடைய உரை நடையிலே இறந்துபட்ட சொற்கள் இல்லை; உயிருள்ள வழக்குச் சொற்கள் வலிமையோடு இடம் பெறுகின்றன. இதை அவருடைய கட்டுரைகள், கதைகள், குறிப்புகள் முதலிய எல்லாவற்றிலும் காணலாம். எழுதுவோனது முழுத் தோற்றத்தையும் அவனுடைய எழுத்து நடை வெளிப்படுத்திவிடும் என்று கூறுவதுண்டு. வலிமையும் உணர்ச்சி வேகமும் ஜீவனும் நிறைந்தது பாரதியின் நடை. அது பாரதியாரின் முழுத்தோற்றப் பொலிவையும் நன்கு காட்டுகிறது.

உரை நடையைக் கையாள்வதிலும் பாரதியாரின் கலை வளர்ச்சியை நாம் எளிதில் காண முடியும். 1906 பிப்ரவரியில் பாரதியார் ஒரு விண்ணப்பம் செய்துகொள்கிறார். பலராலும் எழுதப்பட்டிருக்கும் சிறந்த தேச பக்திப் பாடல்களைத் தொகுத்து வெளியிட வேண்டுமென்பது அவர் நோக்கம். விண்ணப்பம் தொடங்குகிறது; "எமது தாய் நாடாகிய பாராதாம்பிகையின் பெருமையை வருணித்து ஆங்கிலத்திலும் தமிழிலும் பல்வேறு காலத்துப் பல்வேறு புலவர்களால் பாடப்பெற்ற செய்யுள் மணிகளை ஓர் மாலையாகப் புனைந்து பதிப்பிக்கக் கருதியிருக்கின்றேனாதலின் பண்டைத் தமிழ் நூல்களில் பாரத நாடு முழுதினையும் ஒருங்கே புகழ்ந்து கூறப்பட்டிருக்கும் பாடல்களை அறிஞர்

தெரிந்தனுப்புவார்களாயின் அவர் மாட்டு மிக்க கடப்பாடுடையவனுவேன்."

இதைப் படிக்கின்ற மூச்சிலேயே பாஞ்சாலி சபதத்திற்குப் பொருள் விளக்கக் குறிப்பாகப் பாரதியார் எழுதிய சூர்யாஸ்தமன வருணனையையும் படித்துப் பாருங்கள்.

"பார்! ஸூர்யனைச் சுற்றி மேகங்களெல்லாம் தீப்பட்டெரிவது போலத் தோன்றுகிறது! ஆஹா! என்ன வர்ணங்கள்! எத்தனை வித வடிவங்கள்! எத்தனை ஆயிர விதமான கலப்புகள்! அக்கினிக் குழம்பு! தங்கம் காய்ச்சி விட்ட ஓடைகள்! எரிகின்ற தங்கத் தீவுகள்! .

நீல ஏரிகள்! கரும் பூதங்கள்! எத்தனை வகை நீலம்! எத்தனை விதச் செம்மை! எத்தனை வகைப் பசுமை! எத்தனை வகைக் கருமை! நீல ஏரியின்மீது மிதக்கும் தங்கத் தோணிகள்; எரிகின்ற தங்க ஜரிகைக் கரை போட்ட கரிய சிகரங்கள்! தங்கத் திமிங்கிலங்கள் மிதக்கும் கருங்கடல்! எங்கு பார்த்தாலும் ஒளித் திரள், வர்ணக் களஞ்சியம். போ, போ, என்னால் அதை வர்ணிக்க முடியாது."

அல்லது "கண்கள்" என்ற கட்டுரையில் நேரே உற்றுப் பார்ப்பதைப் பற்றிப் பாரதியார் கூறுவதைப் பாருங்கள். "நேரே பார்த்தால் விரோதக் குறியென்று யோக்யன் ஏன் நினைக்க வேணும்? அகத்தின் அழகு முகத்தில் தெரியும். உன் மனசில் என்ன இருக்கிறதென்று தெரிந்துகொள்ளும் பொருட்டாக உன் கண்ணை நேரே பார்க்கிறேன். விரோதமில்லை. அவமரியாதை யில்லை. விஷயம் தெரிந்துகொள்ளும் பொருட்டு." (பக். 229.)

அல்லது "பெண்" என்ற கட்டுரையிலே 'இடிப் பள்ளிக்கூடத்திலே' பிரமராய அய்யருடைய கர்ஜனையைக் கேளுங்கள்; "துருக்கி தேசம் தெரியுமா? அங்கே நேற்று வரை ஸ்திரீகளை மூடி வைத்திருப்பது வழக்கம். கஸ்தூரி

மாத்திரைகளை டப்பியில் போட்டு வைத்திருக்கிறார்களோ இல்லையோ? அந்த மாதிரி. திறந்தால் வாசனை போய் விடும் என்று."

இவையெல்லாம் பிற்காலத்திலே புதுச்சேரியில் எழுதப் பட்டவை. இவற்றிலே சொல் தடுமாற்றம் கிடையாது. கருத்துக்களும், உணர்ச்சிகளும் நேராக, லாகவமாக வழக்கி லுள்ள சொற்களிலேயே வெளியாகின்றன. அவற்றை யெல்லாம் தமிழிலே சொல்ல முடியுமா என்று பெரிதும் ஐயங்கொண்டிருந்த காலத்தில் மிக அழகாகத் தமிழிலே கூறலாம் என்று பாரதியார் காட்டினார். அவருடைய கட்டுரைகளைப் படிக்கும்போது அவர் பலவேறு விஷயங்களைப் பற்றித் தெளிவாக விளக்கியிருப்பது புலனாகும். உலக அரசியல் விவகாரங்களாயினும் சரி, ரவீந்திரநாத தாகூரின் கவிதைகளாயினும் சரி, அவருடைய கவிதை நடை கொண்ட கதைகள், கட்டுரைகளாயினும் சரி எல்லா வற்றையும் தமிழிலே பாரதியார் சொந்த எழுத்துப் போல நல்ல முறையிலே மொழி பெயர்த்துத் தருவதையும் நாம் காண்கிறோம்.

பாரதியார் வாழ்ந்த காலம் சுதந்தர உணர்ச்சி அரும்பி மலரத் தொடங்கிய காலம். விண்ணப்ப முறையை விடுத்து அந்நிய ஆட்சியை எதிர்த்துப் போராட வேண்டும் என்ற உணர்ச்சி ஏற்பட்ட காலம். தாதாபாய் நௌரோஜி யும், திலகரும் விடுதலைப் போராட்டத்தை உருவாக்கிய காலம் அது. சுவாமி விவேகானந்தர் ஒரு புதிய விழிப்பை யும், கௌரவத்தையும் உண்டாக்கிய காலம் அது. அரசி யல், சமூகம் முதலியவற்றில் இப் பெரியார்களின் கருத்துக் களும், இவர்கள் விரும்பிய மாறுதல்கள், சீர்திருத்தங்களைப் பற்றிய பேச்சுக்களும் நாடெங்கும் ஒலித்தன. பாரதியா ருடைய கவிதைகளிலும் கட்டுரைகளிலும் அவற்றின் தெளிவான, ஆழ்ந்த பிரதிபலிப்பைக் காணலாம். அவ

ருடைய கவிதைக் குரல் அக் கருத்துக்களுக்குப் புது வலிமையையும் அழகையும் கொடுக்கிறது. கவிஞரே அவற்றைப் புதிதாகக் கூறுவது போன்று உணர்ந்து மக்கள் அவற்றில் லயித்துவிடுகிறார்கள்.

பாரதியாரின் அந்திய காலத்தில்தான் காந்தியடிகள் தென்னாப்பிரிக்காவிலிருந்து இந்தியாவுக்கு வெற்றியுடன் திரும்பி வந்து இந்திய அரசியலில் பங்குகொள்ளத் தொடங்குகிறார். அன்பு, அஹிம்சை என்ற காந்தியக் கருத்துக்கள் அரசியல் விவகாரங்களிலே அதுவரை நாட்டில் பரவவில்லை. அரசியலிலே அவற்றைப் புகுத்தும் துணிச்சல் பெரியதோர் அளவிலே காந்தியடிகளுக்குத்தான் வந்தது. அதை அவர் அப்பொழுது தென்னாப்பிரிக்காவிலே வெற்றிகரமாகச் சோதனை செய்துகொண்டிருந்தார். பாரதியாருக்கு அரசியல் தலைவர் திலகர், காந்தியடிகளல்ல. இந்த அடிப்படை உண்மையை மனதில் வைத்துக்கொண்டு பாரதியாருடைய தேசியப் பாடல்களைப் படிக்கவேண்டும்.

திலகரை ஆர்வத்தோடு பின்பற்றிய பாரதியார் ஆரம்ப காலத்தில் காந்தியடிகள் கூறிய கருத்துக்கள் சிலவற்றை ஆமோதிக்காததோடு தமது மாறுபட்ட கருத்துக்களை விளக்கி வெளிப்படையாக எழுதுவதையும் காண்கிறோம். அக்காலத்தில் மகாத்மா காந்தி வெறும் ஸ்ரீமான் காந்தியாகவே இருக்கிறார். இருப்பினும் பாரதியார் காந்தியடிகளின் சத்தியாக்கிரக இயக்கத்தைக் கூர்ந்து கவனித்து வருகிறார். அடிகளின் அன்பிற்கு முன்னால் தென்னாப்பிரிக்க வெள்ளையரின் கொடுமை பணிந்துவிடுவதைத் தமது **இந்தியா** பத்திரிகையில் சித்திரம் போட்டு விளக்குகிறார். பிற்காலத்திலே அவரைப் பற்றி "மஹாத்மா காந்தி பஞ்சகம்" என்ற பாடலில் போற்றும்போது நுட்பமான தமது கவிதா மேதையால் அவருடைய பெருமையையும், அவருடைய அஹிம்சா மார்க்கத்தின் தனிச் சிறப்பையும்

உணர்ந்து பாராட்டுகிருர். காந்தியடிகளால் நமது நாட்டிற்குக் கதி மோட்சம் பிறக்குமென்று அவர் காண்கிருர். ஆதலால்தான்

**கொடியவெந் நாக பாசத்தை மாற்ற**
**மூலிகை கொணர்ந்தவ னென்கோ ?**

என்று அடிகளைப் போற்றுகிருர்.

ஜீவராசிகளெல்லாம் கடவுளின் வடிவம் என்பது உயர்ந்ததோர் உண்மை. அந்த உண்மையைக் காந்தியடிகள் கொலையும் போரும் நிறைந்த அரசியலில் புகுத்திடத் துணிந்தது கவிஞருக்குப் பேராச்சரியத்தை யளிக்கிறது.

**இன்ன மெய்ஞ் ஞானத் துணிவினை மற்றுங்**
**கிழிபடு போர், கொலை, தண்டம்**
**பின்னியே கிடக்கும் அரசியலதனிற்**
**பிணைத்திடத் துணிந்தனை, பெருமான் !**

என்று வியந்து பாராட்டிப் பாடுகிருர்.

மேலும் பாரதியார்,

**நெருங்கிய பயன் சேர் 'ஒத்துழையாமை'**
**நெறியினால் இந்தியாவிற்கு**
**வருங்கதி கண்டு பகைத்தொழில் மறந்து**
**வையகம் வாழ்கநல் லறத்தே**

என்று அப்பாடலை முடிக்கிருர். அஹிம்சா நெறியினால் இந்தியாவிற்கு விடுதலை கிடைக்குமாயின் அந்த வழியைப் பின்பற்றி வையகம் வாழவேண்டுமென்று அவர் உலகத்திற்கே இந்த வழியைச் சிபார்சு செய்கிருர்.

பாரதியாரின் கவிதைகளைத் தனித்தனியே ஆராய்வது இங்கே எனது நோக்கமல்ல. இந்நூலினிடையே ஆங்

காங்கு உரிய இடங்களில் சுருக்கமாக அதைச் செய்திருக்கிறேன். பொதுவாக அவருடைய கவிதை வளர்ச்சி, உரை நடை வளர்ச்சியைப் பற்றிக் குறிப்பிடுவதே இங்கு எனது நோக்கம்.

முக்கியமான உலக மொழிகளிலே தேசியப் பாடல்களில்லாத மொழி ஒன்றும் இல்லையென்றே கூறலாம். மேல்நாட்டு மொழிகளிலுள்ள பல தேசியப் பாடல்கள் அந்நாட்டு மக்களுக்கு என்றும் உணர்ச்சியூட்டும் சக்தி வாய்ந்தவையாக அமைந்திருக்கின்றன. அவற்றோடு சரி நிகராக வைத்துப் போற்றக்கூடிய தேசியப் பாடல்களைப் பாரதியார் நமக்குத் தந்திருக்கிறார். சிறந்த தேசியப் பாடல்கள் தமிழில் இல்லை என்ற குறையை நீக்கிய தனிப் பெருமை அவருக்கே உரியது. அவர் பாடிய தேசியப் பாடல்களில் சில அந்தக் காலத் தேவைக்காக உண்டானவையாக இருக்கலாம். அந்தத் தேவை மறைந்த பிறகு அவற்றின் முக்கியத்துவமும் மறைந்துவிடலாம். ஆனால் நாட்டைப்பற்றி நினைக்கும்போது என்றும் உணர்ச்சிப் பெருக்கோடு பாடி அநுபவிக்கும் பாடல்கள் பல அவற்றிலே இருக்கின்றன. அவை மக்களின் உள்ளத்தை என்றும் கவர்ந்து கொண்டேயிருக்கும்.

புதுச்சேரிக்குச் சென்று அங்கும் விடாமுயற்சியோடு தமது பத்திரிகைகளின் வாயிலாகத் தேசப்பற்றையும், சுதந்தர ஆர்வத்தையும் வளர்த்த பாரதியார் பத்திரிகைச் சட்டத்தின் மூலமாகத் தமது முயற்சிகளை பிரிட்டிஷ் அரசாங்கம் தடுத்துவிட்டதை உணர்கிறார். 1910–ஆம் ஆண்டு மார்ச்சு மாதத்திலே அவருடைய பத்திரிகைகள் நின்று விடுகின்றன (இது பற்றிய விவரம் அடுத்த பகுதியில் பார்க்க.). அதற்குப் பிறகு அவருடைய உள்ளம் தேசியப் பாடல்களும் அரசியல் கட்டுரைகளும் அல்லாத வேறு இலக்கியத் துறைகளிலே முக்கியமாகச் செல்லு

கிறது. அதற்கு முன்பும் அத்துறைகளிலே அவர் கவனம் செலுத்தாமலில்லை. முன்பே பல பக்திப் பாடல்களைப் பாடியிருக்கிறார். பராசக்தியும் கண்ணனும் முருகனும் அவர் சிந்தையிலே மாறுதிருக்கிறார்கள். மேலும் ஞான ரதம் போன்ற நூல்களுக்கு அடிகோலி யிருக்கிறார். ஆனால் பெரியதோரளவிலே 1910-க்குப் பிறகுதான் அவருடைய உள்ளம் அந்தத் துறைகளிலே செல்லுகிறது. கண்ணன் பாட்டு, குயில் பாட்டு, பாஞ்சாலி சபதம் முதலான இலக்கியங்களும், கதைகளும், கட்டுரைகளும் தமிழுக்குச் சிறந்த புது அணிகளாகக் கிடைக்கின்றன. அவருடைய தேசிய உணர்ச்சி இந்த இலக்கிய சிருஷ்டிகளின் போதும் இடையிடையே மேலோங்குவதையும் நாம் காண்கிறோம். பாஞ்சாலி சபதத்திலே இதைத் தெளிவாகக் காணலாம். பாரதியாரின் இறுதி மூச்சு வரை இந்த உணர்ச்சியின் வேகத்தை நாம் உணர்கிறோம். அவரது வாழ்க்கையின் அந்திக் காலத்திலே சுதேசமித்திரன் உதவியாசிரியராக மறுபடியும் அமர்ந்தபோதும் இதை உணர்கிறோம். ஆனால் அது பழைய பாரதி இடிமுழக்கத்தின் எதிரொலி போலவே சற்று லேசாக நமக்குக் கேட்கின்றது. தேசத்திற்கும், தமிழுக்கும் செய்யவேண்டிய தமது கடமைகளை மிகச் சிறந்த முறையிலே என்றும் அழியாதவாறு முன்பே பாரதியார் செய்து முடித்துவிட்டார். உடலொடுங்கிச் சென்னைக்கு மீண்டும் வந்த பாரதியார் அந்த உடலோடு தாம் அதிக நாட்கள் உலகத்திலே இருக்கமுடியாது என்பதை உணர்ந்து கொண்டார்போலும். அதுவே மரணத்தைப் பற்றிய நினைவிலே அவரை அடிக்கடி இழுத்துச் சென்றிருக்கிறது.

**காலா, உனை நான் சிறு புல்லென மதிக்கிறேன் ; என்றன்**
**காலருகே வாடா! சற்றே உனை மிதிக்கிறேன்**

என்று தொடங்கும் பாடலை அவர் 1919 டிசம்பர் இறுதி

யில் வெளியான சுதேசமித்திரன் ஆண்டு அநுபந்த மலரில் எழுதியிருக்கிருர். 1921 ஜூலை மாதம் இறுதியிலோ அல்லது ஆகஸ்ட் முதலிரண்டு தேதிகளிலோ பாரதியார் ஈரோட்டிற்குச் சென்றிருக்கிருர். அங்கே கருங்கல் பாளையம் என்ற ஊரிலுள்ள வாசகசாலையில் பேசியதைப் பற்றி எழுதும்போதும், "எனக்கு ஒரு விஷயந்தான் முக்கிய மாகத் தெரியும். அதையே அங்கும் எடுத்துப் பேசினேன். அதாவது இந்த உலகத்தில் மானுடர் எக்காலத்திலும் மரணமில்லாமல் இருக்கக்கூடுமென்ற விஷயம்" என்று கூறுகிருர். அடுத்த செப்டம்பர் 11-லேயே அவருடைய உடம்பு வீழ்ந்து விடுகிறது.

ஆனல் மரணமில்லாமல் வாழலாம் என்று பாரதியார் கூறியது அவரைப் பொறுத்த அளவிலே பொய்யாகவில்லை. அவருடைய பூதவுடல் அதன் இயல்புக்கு ஏற்றவாறு நலிந்து மறைந்துவிட்டாலும் பாரதியார் சாகவில்லை. அவருடைய எழுத்துக்களின்மூலம் அவர் சிரஞ்சீவியாக இருக்கிருர். தேடிச் சோறு நிதம் தின்று, பல சின்னஞ் சிறு கதைகள் பேசி, நரை கூடிக் கிழப் பருவமெய்தி கொடுங் கூற்றுக்கு இரை யெனப் பின் மாயும் வேடிக்கை மனிதரைப்போல அவர் வீழ்ந்துவிடவில்லை. அவருடைய தமிழின்மூலம் அவர் அமரர் ஆனுர்.

## பாரதி இந்தியா

பாரதியாரின் தேசபக்திக் கனல் எவ்விதமான தடையுமின்றிச் சுடர்விட்டெழுந்தது **இந்தியா** என்னும் அவருடைய வாரப் பத்திரிகையில்தான். நாட்டு விடுதலை இயக்கத்தில் தமிழ் மக்களைத் தூண்டிவிட அவர் எவ்வாறு முயன்ருர் என்பதை அப்பத்திரிகையின் ஒவ்வொரு பக்கத்திலும் காணலாம்.

1904-ஆம் ஆண்டின் இறுதியில் பாரதியார் சுதேசமித்திரனில் உதவியாசிரியரானுர். அடுத்த ஆண்டிலேயே அவர் **சக்கரவர்த்தினி** என்னும் மாதப் பத்திரிகை நடத்துவதைக் காண்கிறேம்.

**இந்தியா** 1906-ஆம் ஆண்டு ஏப்ரில் அல்லது மே மாதத்தில் ஆரம்பமாகி யிருக்கிறது. ஸ்வதந்திரம், ஸமத்துவம், ஸஹோதரத்வம் அதனுடைய லட்சியம். தனிப்பிரதி விலை அணு ஒன்று. ஆனுல் பாரதியார் அதற்கு ஆண்டுச் சந்தா நிர்ணயித்த வழியே தனிப்பட்டது.

நமது பத்திரிகையின் சந்தா விவரம்

| | ரூ. | அ. | பை. |
|---|---|---|---|
| எல்லா கவர்ன்மெண்டாருக்கும் | 50 | 0 | 0 |
| ஜமீந்தார்கள், ராஜாக்கள் முதலியவர்களுக்கு | 30 | 0 | 0 |
| மாதம் ரூ. 200-க்கு மேற்பட்ட வருமானம் உடையவர்களுக்கு | 15 | 0 | 0 |
| மற்றவர்களுக்கு | 3 | 0 | 0 |

**இந்தியா** சென்னையில் 34, பிராட்வேயிலிருந்து 1908-ஆம் ஆண்டு செப்டம்பர் மாதம் வரை வெளியாகி

யுள்ளது. முதல் இரண்டு தொகுதிகள் ஒரு அளவிலும் மூன்றும் தொகுதி தொடக்கத்திலிருந்து முன்பு வெளியான அளவைப்போல இரண்டத்தனை அளவில் அதாவது தினசரிப் பத்திரிகை அளவிலும் வெளியாகியுள்ளன.

புதுச்சேரிக்கு மாற்றப்பட்டு 1908 அக்டோபர் மத்தியிலிருந்து மறுபடியும் பழைய அளவில் வெளியாகிறது. இடையிலே சிறிது காலந்தான் **இந்தியா** நின்றிருக்கிறது. புதுச்சேரி சென்று பத்திரிகையைத் தொடர்ந்து நடத்த வேண்டும் என்று பாரதியாரும் அவர் நண்பர்களும் முன்பே தீர்மானம் செய்து கொண்டதுபோலவே தோன்றுகிறது. அதன்படியே ஸ்ரீனிவாசாசாரியாரும் புதுச்சேரி செல்லுகிறார்.

1909 மார்ச்சு 27-ல் புதுச்சேரியிலிருந்து வெளியான **இந்தியா** தொகுதி 1 இதழ் 24-ல் பாரதியாரின் ஸ்வதேச கீதங்களின் இரண்டாம் பாகமாகிய **ஜன்ம பூமி** என்ற நூலைப் பற்றிப் பின்வருமாறு விளம்பரம் காணப்படுகிறது:

**ஜன்ம பூமி**

'ஸ்வதேச கீதங்கள் என்ற நூல் வெளியேறியதற்கப்பால் ஸ்ரீ சுப்பிரமணிய பாரதியாரால் எழுதப்பட்ட பாக்களும் கீர்த்தனங்கள் முதலியனவும் அடங்கியது. முதற் பாகத்தைவிட மாதுரியத்திலும் சுதேச பக்தியிலும் சிறப்பு வாய்ந்தது. அச்சடித்துத் தயாராகிவிட்டது. வேண்டியவர்கள் புதுச்சேரி இந்தியா ஆபீஸில் ஸ்ரீ ஸ்ரீனிவாசாசாரியாருக்கு எழுதிப் பெற்றுக் கொள்க.

இதன் விலை அணா மூன்று.

இதே இதழில் **ஞான ரதத்தில்** கந்தர்வ லோகம் என்ற பகுதியில் கடற்கரை என்ற உட்பிரிவு தொடங்குகிறது.

ஆதலால் இந்நூலில் ஒரு சிறு பகுதியே சென்னையிலிருந்து வெளியாகியிருக்கலாம் அல்லது தொடக்கம் முதல் புதுச்சேரியிலிருந்து வெளியாகியிருக்கலாம் என்று தோன்றுகிறது. இந்தியாவின் இதழ்கள் அனைத்தையும் பார்க்க இயலாமையால் இதை நிச்சயமாகக் கூற முடியவில்லை.

**இந்தியாவில்** காரிபால்டியின் வாழ்க்கை வரலாறு, ராணி லக்ஷ்மிபாய் சரித்திரம், லண்டன் கடிதம் முதலானவற்றை வ. வெ. சு. ஐயர் லண்டனில் இருக்கும்போதே எழுதி வந்தார். தேசிய உணர்ச்சியைப் பெருக்கும் இத்தகைய விஷயங்களும் செய்திகளும் கட்டுரைகளுமே **இந்தியா**வில் அதிகமாக இடம் பெற்றன.

தேச விடுதலைக்கு யார் யார் தீவிரமாக உழைக்கவில்லையோ அவர்களையெல்லாம் தாக்கி எழுதுவதில் பாரதியார் கொஞ்சமும் தயங்கவில்லை. மிதவாதிகள் பலமுறை அவருடைய கூரிய சொல்லம்பிற்கு ஆளாகிறார்கள். அன்னி பெஸன்ட் அம்மையாரைப் பற்றியும் அக்காலத்தில் பாரதியாருக்கு நல்ல அபிப்பிராயம் இல்லை. அவரையும் தாக்கி எழுதியிருக்கிறார்.

கார்ட்டூன் சித்திரம் வரைந்து, முக்கிய விஷயங்களை விளக்குதல் அல்லது யாரையாவது கேலி செய்தல் ஆகிய முறையைத் தமிழ்ப் பத்திரிகையில் பாரதியார் அப்பொழுதே கையாள்கிறார்.

ஸ்ரீ அரவிந்தர் ஓராண்டுக் காலம் பாதுகாப்புக் கைதியாக வைக்கப்பட்டிருந்து பிறகு விடுதலை பெற்றபோது அச்சம்பவம் பற்றி சித்திரமும் சித்திர விளக்கமும் **இந்தியா**வின் 1909 மே 13-ஆம் தேதி இதழில் வெளியாகியுள்ளன. கிரஹண விமோசனம் என்பது அச் சித்திரத்தின் தலைப்பு.

"அரவிந்த சூரியனை விழுங்க வந்த போலீஸ் பாம்பு நீங்கிப் போய்விட்டது" என்று சித்திரத்தின் அடியிலே

எழுதியிருக்கிறார். இப் படத்துடன் கூடிய **இந்தியா** பத்திரிகையின் முதற் பக்கம் தனியே இந்நூலில் தரப்பட்டிருக்கிறது. அப் படத்திற்குக் கீழ்க்கண்ட விளக்கமும் வெளியாகியுள்ளது.

**சித்திர விளக்கம்**

"அரவிந்தர் என்ற ஞானச் சுடரை—அரவிந்தர் என்ற தர்ம சூரியனை 'அநீதியாகக் குற்றம் சுமத்துதல்' என்ற இராகு வந்து மறைத்திருந்தது. விழுங்கிவிடலாமென்பது அந்தப் போலீஸ் பாம்பின் எண்ணம். சூரியனை விழுங்கப் பாம்பால் முடியுமா? சிறிது காலம் மூடியிருந்து பின் தானே அகன்று போய்விட்டது. இதுவே இவ் வாரச் சித்திரத்தின் கருத்து."

மிதவாதிகளைக் கேலி செய்து பல சித்திரங்கள் வெளிவந்துள்ளன. அக்காலத்தில் காந்தியடிகள் தென் ஆப்பிரிக்காவில் நடத்திய சாத்விக இயக்கத்தைப் பாராட்டியும் சித்திரம் வந்துள்ளது.

பாரதியார் **விஜயா** என்ற தினசரிப் பத்திரிகை ஒன்றையும் நடத்தினரல்லவா? அப் பத்திரிகை முதலில் சென்னையில் 83, ஹைரோடு, திருவல்லிக்கேணி என்ற இடத்திலிருந்து வெளியாகியிருக்கிறது. அதைப்பற்றிய விளம்பரம் 1909 மார்ச்சு 27 **இந்தியா** இதழில் காணப்படுகிறது. அப்பொழுது அதற்கு யார் பத்திராதிபர் என்பது தெரியவில்லை. **இந்தியா** 1909 ஆகஸ்டு இதழில்தான் முதல் முதலில் **விஜயா** புதுச்சேரியிலிருந்து வெளிவருவது பற்றி விளம்பரம் வருகிறது. செப்டம்பர் 7-ஆம் தேதி கிருஷ்ண ஜயந்தி முதல் அதைத் தொடங்கப் போவதாக விளம்பரம் கூறுகிறது.

அநேகமாக **இந்தியா** வெளிவந்துகொண்டிருந்தவரையிலும் இப் பத்திரிகையும் நடந்து வந்திருக்கிறது.

**இந்தியா** 1909 அக்டோபர் 2 இதழில் **கர்மயோகி** என்ற பத்திரிகை வெளிவருவது பற்றிய விளம்பரம் வந்துள்ளது. ஸ்ரீ அரவிந்தர் நடத்திய **கர்மயோகின்** என்ற பத்திரிகையை ஒட்டித் தமிழில் பாரதியார் நடத்திய மாதப் பத்திரிகை இதுவாகும். 1909 டிசம்பர் 4–ஆம் தேதிக்கு முன்பே இப் பத்திரிகை வெளியாகிவிட்டதாகத் தெரிகிறது. இதன் காரியாலயம் புதுவை வெள்ளாளத் தெருவில் இருந்திருக்கிறது.

1909 டிசம்பர் 4–ஆம் தேதியில் வெளியான **இந்தியா** இதழிலேயே **சித்ராவளி** என்ற மற்றொரு புதிய மாதப் பத்திரிகை **இந்தியா** காரியாலயத்திலிருந்தே விரைவில் வெளியாகப் போவதைப் பற்றி விளம்பரம் காணப்படுகிறது. இப்பத்திரிகை வெளியாயிற்றா இல்லையா என்பது தெரியவில்லை. வெளி வந்ததாக அறிவிப்பு ஒன்றும் **இந்தியாவில்** நான் பார்த்த அளவில் தென்படவில்லை. பெரும்பாலும் சித்திரங்களாகவே இருக்குமாறு இதை நடத்த வேண்டுமென்பது பாரதியாரின் திட்டம். சித்திரங்களின் விளக்கம் தமிழிலும் ஆங்கிலத்திலும் இருக்குமாம்.

தமிழ் மக்களைத் தட்டி யெழுப்பப் பாரதியார் கொண்டிருந்த ஆர்வத்தை 1909 ஏப்ரல் 10-ல் வெளியான **இந்தியா** இதழிலுள்ள கீழ்க் கண்ட இரண்டு குறிப்புக்களிலிருந்தும் தெரிந்துகொள்ளலாம்.

தேச பக்தர் வ. உ. சிதம்பரம் பிள்ளையவர்கள் கப்பலோட்டிய வீர வரலாறு அனைவருக்கும் தெரியும். அவர் சிறைப்பட்ட பின்பும் தொடர்ந்து சுதேசியக் கப்பல் விடுவதற்கான பெரு முயற்சி நடந்தது. அது பற்றி **தூத்துக்குடி சுதேசியக் கப்பல்** என்ற தலைப்பில் **இந்தியாவில்** வெளியாகியுள்ள குறிப்பாவது:—

" தூத்துக்குடி சுதேசியக் கப்பலுக்கு இருநூறு ரூபாய் வந்ததற்குப் பிறகு வரவு நின்றுவிட்டது. 'கப்பல் நிதி'

என்ற பெயரால் 150 ரூபாய் தூத்துக்குடிக்கு அனுப்பி விட்டோம். ஆறு பங்காயிற்று. என்ன வெட்கம்! என்ன வெட்கம்!! தமிழ் நாட்டு ஜனங்களிடம் அவர்கள் சொந்தக் காரியத்திற்காக இரண்டு லக்ஷம் ரூபாய் கேட்டதற்கு இரு நூறு வசூலாகியிருக்கிறது. கப்பலுக்கு ஓரிரண்டு உப காரிகள் உதவி செய்ய முன் வந்திருப்பதாகவும், இன்னும் இரண்டு வாரங்களிலே கப்பல் முன்போல நடக்குமென்றும் கேட்டு சந்தோஷமடைகிறோம். நமது பத்திரிகையைப் பார்த்துக் காசியில் ஒரு தேசாபிமானி இவ்விஷயத்தில் முயற்சி எடுத்து வருவதாய்த் தெரிவதும் திருப்திக்கிடமான சமாச்சாரம். ஆனால் தமிழ்நாட்டுப் பொது ஜனங்கள் உறங்கிக் கிடக்கும் அற்புதந்தான் வருத்த முண்டாக்கு கிறது. இவர்களை எப்படி விழிக்கச் செய்வது?"

அதே இதழில் '**தேச பக்தி** என்ற தலைப்புடன் மற்று மோர் குறிப்பு:—

"துருவன், பிரஹ்லாதன் முதலியோர் விஷ்ணுவிடத் திலே செலுத்திய பக்தியை நாம் ஸ்வதேசத்தினிடத்திலே செலுத்த வேண்டுமென்று நமது பத்திரிகையில் பல முறை எழுதியிருக்கிறோம். பக்திப் பெருமை தெரியாத ஐரோப்பில் கூட ஐர்லாந்து தேசத்தார் நமது தேசத்தில் சுதேசியத்தின் விருத்தியைப் பார்த்துவிட்டுத் தாமும் சுதேசியத்தை ஓர் பெரும் தர்மம் (மதம்) ஆக்கி நடத்த வேண்டுமென்று முயற்சி செய்கிறார்கள். சுவாமி விவேகா னந்தர், 'எனது பாரத புத்திரர்களே, இன்னும் ஒரு நூற் றாண்டுக்கு நீங்கள் வணங்க வேண்டிய தெய்வங்கள் யாதெனில் பாரத தேசத்து முப்பது கோடி ஜனங்களே. இவர்களெல்லாம் மஹா சக்தியின் ஆவிர் பாகங்கள். இவர் களையே நீங்கள் ஆராதனை செய்ய வேண்டும். இவர்களுக்கே நீங்கள் தொண்டு செய்ய வேண்டும். இதைக் காட்டிலும்

சிறந்த மதம் வேறு கிடையாது' என்று அருளிச் செய்திருக்கிறார்.

"பாரத நாடு முழுமையும் இம் மதத்தை முற்றிலும் அங்கிகாரம் செய்து கொண்டிருக்கத் தமிழர்கள் மட்டிலும் கொஞ்சம் பின்னடைந்திருக்கிறார்கள். இங்ஙனம் பின் பட்டிருப்பது பிழை. தமிழர்களே, இப் பிழையை நீங்கள் சீக்கிரம் நிவிருத்தி செய்து கொள்ளாத விஷயத்தில் ஸர்வ நாசமடைந்து போவீர்கள். அறிவுடன் வாழுங்கள்."

1909 ஏப்ரில் 17-ஆம் தேதி இதழிலே ஸௌமிய என்னும் புது வருஷம் பிறந்ததை ஒட்டி **இந்தியா** கீழ்க் கண்ட தலையங்கம் எழுதியுள்ளது:

### புது வருஷம்

"பாரத வாஸிகளுக்குப் புதிய வருஷம் பிறந்திருக்கிறது. இவ்வருஷத்தில் நமது நாட்டிற்குப் பல நன்மைகள் விளையுமென்று சில சோதிட சாஸ்திரிகள் சொல்லுகிறார்கள். ஆனால் சோதிட சாஸ்திரம் என்ன செய்யும்? ஒருவன் கண்மூடித்தனமாக அந்நிய தேச வஸ்திரம் வாங்கும்போது குறுக்கே வந்து நிற்குமா? நன்மையும் தீமையும் மனிதர்கள் தமக்குத் தாமே விளைவித்துக் கொள்ளுகிறார்களல்லாது அவை வெளியிலிருந்து வருவன அல்ல. தத்தம் கரும பலன்களையே எல்லா ஜீவராசிகளும் அநுபவிக்க வேண்டும். நமக்கு நன்மை வரவேண்டுமானால் நாம் செய்ய வேண்டிய விஷயங்கள் பின் வருவன:—

1. நமது தேசப் பொருள்களையே வாங்குதல்; அந்நிய சாமான்களை விலக்குதல்.

2. நாமாகப் பாடசாலைகள் வைத்துக் கொண்டு நமது குழந்தைகளுக்கு ஆரிய தருமங்களைப் போதிப்பித்தல், அந்நியருடைய கல்வியிலே யிருக்கும் நன்மைகளைக் கிரஹித்

துக்கொண்டு, தீயதை விலக்குவதற்குக் கூட்டு முயற்சிகள் செய்தல்.

3. நமது தேசத்தார் இப்போது மிகவும் ஹீனமான சரீர நிலை கொண்டிருப்பதை நீக்கும் பொருட்டாக சரீரப் பயிற்சிக்கூடங்கள் அத்யாவசியமாக ஏற்படுத்துதல்.

4. ஜாதீய பஞ்சாயத்துக்கள் வைத்தல்.

5. கிராமந்தோறும் பாரதமாதா கோயில் என்று ஓர் ஆலயம் ஏற்படுத்தி அநுதினம் பூஜை முதலிய கைங்கர்யங்களுக்கு ஏற்பாடு செய்தல்.

"மேலே கூறப்பட்டிருக்கும் தர்மங்களை நாம் சிரத்தையுடன் நடத்தி வருவோமானால் நமது ஜாதிக்கு க்ஷேமமுண்டு ; இல்லாவிடின், இல்லை."

1910 ஜனவரி 22-ஆம் தேதி **இந்தியாவில் பால பாரத** என்ற ஆங்கில மாதப் பத்திரிகை வெளியிடுவது பற்றிய விளம்பரம் வந்துள்ளது. இதற்கும் பாரதியாரே ஆசிரியர்.

அதே இதழில் **விஜயா, இந்தியா** பத்திரிகைகளை அச்சிடும் ஸ்ரீ ஸரஸ்வதி அச்சியந்திரசாலையின் விலாச மாறுதல் தரப்பட்டுள்ளது. இனிமேல் அச்சகம் புதுவை வழுதாவூர் வீதி 10 நெ. வீடு என்ற இடத்தில் இருக்குமென்றும், பத்திரிகைகளின் அலுவலகங்களும் அங்குதானிருக்குமென்றும் அதில் தெரிகின்றன.

1909 நவம்பர் 20-ஆம் தேதி இதழிலிருந்து அதாவது புதுச்சேரியிலிருந்து வெளியாகும் **இந்தியாவின்** இரண்டாம் தொகுதி 5-ஆம் இதழிலிருந்து மறுபடியும் அது தினசரிப் பத்திரிகை அளவிலும் அதிகப் பக்கங்களுடனும் படங்களுடனும் வெளிவரத் தொடங்குகிறது. இவ்வாறு பத்திரிகை பெரிதாகியும் சந்தா மாறவில்லை. சந்தாவை உயர்த்துவது நியாயமென்றும், பத்திராதிபர் தமது தேச பக்தியால்

அவவாறு செய்யாதிருப்பினும் **இந்தியா** அபிமானிகள் சந்தாவைக் கூட்டிக் கொடுக்க வேண்டுமென்றும் சிலர் கடிதமெழுதுகிறார்கள். சந்தாவை உயர்த்துவதோடு பத்திரிகையை வாரம் இருமுறை வெளியிட வேண்டுமென்று சிலர் அபிப்பிராயம் தெரிவிக்கிறார்கள். குறைந்தது 1500 பேர் இதற்குச் சம்மதம் தெரிவித்தால் வாரம் இருமுறையாக்கத் தாம் உடன்படுவதாகப் பாரதியார் எழுதுகிறார்.

அவ்வாறு விருப்பம் தெரிவிக்கப்பட்டதோ என்னவோ, **இந்தியா** அடுத்த யுகாதியிலிருந்து வாரம் இருமுறையாக வெளியாகுமென்று 1910 ஜனவரி 24—ஆம் தேதி இதழில் அறிவிக்கப்பட்டுள்ளது.

ஆனால் **இந்தியா** வாரம் இருமுறைப் பத்திரிகையாக வரவேயில்லை. இந்திய சர்க்கார் பிறப்பித்த பத்திரிகைச் சட்டம் பாரதியாரின் முயற்சிகளை யெல்லாம் ஒரேயடியில் வீழ்த்திவிட்டது. இந்தச் சட்டத்தைப்பற்றி 1910 பிப்ரவரி 12-ஆம் தேதி **இந்தியா** இதழில் விவரமும், தலையங்கமும் வெளியாகி யிருக்கின்றன. 1910 மார்ச் 5-ஆம் தேதி இதழில் 'சிற்பமும் கவிதையும்' என்ற பொருள் பற்றித் தலையங்கம் காணப்படுகிறது. அத்தலையங்கம் "இதைக் குறித்து எழுதினால் பத்திரிகைச் சட்டம் நம்மை அண்டாது. ஆகையால் இதையாவது நம் ஜனங்களுக்குச் சொல்வோம்" என்று ஆரம்பத்தில் கூறுகிறது. இதிலிருந்து அந்தச் சட்டத்தின் பிடிப்பு எவ்வளவு வலிமையாக இருந்திருக்குமென்று தெரிந்து கொள்ளலாம்.

**இந்தியா**வின் அடுத்த இதழையும் நான் பார்த்தேன். அதற்கு மேலே எத்தனை இதழ்கள் வந்தனவோ தெரியாது. அதிகம் வந்திருக்க முடியாது.

வாரம் இரு முறையாக **இந்தியா**வை வெளியிடத் திட்டமிட்ட பாரதியார் அதை ஒருமுறையாகக்கூட வெளியிட

முடியாது போயிற்று. பத்திரிகைச் சட்டத்தின்படி அவர் நடத்தும் பத்திரிகைகளை பிரிட்டிஷ் இந்தியாவிற்குள் நுழையவிடாமல் தடுத்து விட்டனர். அதனால் பாரதியாரின் பத்திரிகைப் பெருமுயற்சி ஒடுங்கியது.

அவருடைய பத்திரிகைகளை அடக்க முயன்றதோடு அவரையே கைது செய்யப் பல சூழ்ச்சிகள் நடந்திருக்கின்றன. 1910 பிப்ரவரி 26-ஆம் தேதி **இந்தியா** இதழில் 'எப்படி நம்புவது' என்ற தலைப்புடன் ஒரு சிறு கட்டுரை வெளியாகியுள்ளது. அதிலே ஒரு சி. ஐ. டி. பாரதியாரை ஆங்கிலேயரிடம் பிடித்துக் கொடுக்கச் செய்த தந்திரம் பற்றிய விவரம் வெளியாகின்றது. சென்னையிலே யிருந்த காலத்தில் ஏற்பட்ட பழக்கத்தைப் பயன்படுத்திக்கொண்டு அவன் பாரதியாரிடம் அடிக்கடி வந்து கொண்டிருந்தான். **இந்தியா**வுக்கு விஷயம் திரட்டியளிக்கும் செயலிலும் ஈடுபட்டான். அவன் செய்த சூழ்ச்சி வெளியானபோது அவனைப் பக்கத்தில் அணுகவிடக் கூடாது என்று கூறிய நண்பர் ஒருவரிடம் பாரதியார், "நாம் அதற்கு தர்ம தேவதையின் ஸகாயமும் பாரதமாதாவின் அருளும் உள்ள வரை நமக்குத் தீங்கு வராதென்றும், நாம் யாருக்கும் கனவிலும்கூடத் தீங்கை எண்ணவில்லை என்றும் சொல்லி முடித்தோம்" என்று கூறியதாக அக்கட்டுரை கூறுகிறது.

பாரதமாதாவின் அருள் பாரதியாருக்கு நிச்சயமாக இருந்ததென்றுதான் கூறவேண்டும். இல்லாவிட்டால் அவருடைய பத்திரிகை முயற்சிகள் ஒடுக்கப்பட்டு அவர் மனம் குன்றியிருந்த சமயத்தில் அவருக்குப் புதிய உற்சாகத்தையும் ஊக்கத்தையும் அளிக்க வ. வெ. சு. ஐயரும், ஸ்ரீ அரவிந்தரும் தக்க சமயத்தில் புதுச்சேரி வந்து சேர்ந்திருக்க முடியுமா? ஐயர் 1910 அக்டோபர் இறுதியிலும் ஸ்ரீ அரவிந்தர் 1911 ஏப்ரல் தொடக்கத்திலும் புதுச்சேரியை அடைந்தனர்.

பத்திரிகை முயற்சிகள் ஓய்ந்த பிறகு பாஞ்சாலி சபதம், கண்ணன் பாட்டு, குயில் பாட்டு முதலிய சிறந்த இலக்கியங்களை உண்டாக்குவதில் பாரதியார் முக்கியமாக ஈடுபடுகிறார்.

குறிப்பு:—**பாரதியார் நடத்திய பத்திரிகைகள்** என்று இந்நூலில் காணப்பெறும் பகுதியை அச்சிட்ட பிறகே **இந்தியா** பத்திரிகையின் இதழ்கள் மிகப் பலவற்றைக் காணும் வாய்ப்புக் கிடைத்தது. அங்ஙனம் பார்த்த இதழ்களிலிருந்து இந்தியாவைப் பற்றியும் பாரதியார் நடத்திய வேறு பத்திரிகைகளைப் பற்றியும் சில ரசமான புதிய செய்திகள் கிடைத்தன. அவற்றையும் எழுதினால் பத்திரிகைகள் நடத்தப் பாரதியார் மேற்கொண்ட முயற்சிகள் நன்கு வெளிப்படுமென்று இக் கட்டுரையை எழுதியுள்ளேன். இரண்டு கட்டுரைகளையும் சேர்த்துப் பார்த்துக் கொள்ள வேண்டும்.

மேலே கூறியவாறு இந்தியா இதழ்களைப் பார்வையிட எனக்கு உதவியவர் திரு. ரா. அ. பத்மநாபன் அவர்கள். பாரதியாரிடத்திலே அளவுகடந்த பக்தி கொண்டவர்களில் அவரும் ஒருவர். பாரதியாரைப் பற்றிய பல குறிப்புக்களும், படங்களும், அவர் நடத்திய இந்தியா இதழ்கள் பலவற்றையும், பாரதியார் எழுதிய கடிதங்கள் இரண்டையும் மிகவும் முயன்று அவர் சேகரித்து வைத்திருக்கிறார். ஆர்வத்தோடு அவற்றையெல்லாம் எனக்குக் காட்டி உதவியதோடு இந்நூலை நல்ல முறையிலே வெளிக்கொணர முயலவேண்டுமென்று அவர் எனக்கு உற்சாகம் கொடுத்தார். அவருடைய அன்பை நான் ஒருநாளும் மறக்க முடியாது. அவருக்கு எனது மனமார்ந்த நன்றி உரியது.

# பாரதி தமிழ்

---

## வங்கமே வாழிய

### வங்க வாழ்த்துக் கவிகள்

15 *செப்டம்பர்* 1905 *விசுவாவசு ஆவணி* 31

நேற்று மாலை நடந்த கடற்கரைப் பெருங் கூட்டத்தில்
மிஸ்டர் சி. சுப்பிரமணிய பாரதியார் சொல்லியவை

அங்கமே தளர் வெய்திய காலையும்
அங்கோர் புன்னரி தந்திடு மூனுணுச்
சிங்கமே யென வாழ்தல் சிறப்பெனுச்
செம்மை கூறிநந் தாய்ப் பெருந் தேயத்தைப்
பங்கமே பெறு மிந்நிலை நின்றுயர்
பண்டை மாண்பிடைக் கொண்டினி துய்த்திடும்
வங்கமே யென வந்தனை வாழிநீ
வங்கமே நனி வாழிய வாழிய 1

கற்பகத் தருப் போலெது கேட்பினும்
கடிது நல்கிடும் பாரத நாட்டினிற்
பொற்புறப் பிறந்தேம், நமக்கோர் விதப்
பொருளு மன்னிய ரீதல் பொறுக்கிலேம்
அற்பர் போலப் பிறர்கர நோக்கியா
மவனி வாழ்தலா காதென நன்கிதை

வற்புறுத்திடத் தோன்றிய தெய்வமே
வங்கமே நனி வாழிய வாழிய 2

கண்ணினீர் துடைப்பாய் புன்னகை கொள்வாய்
கவினுறும் பரதப்பெருந் தேவியே
உண்ணிகழ்ந்திடுந் துன்பங் களைதியால்
உன்றன் மைந்தர்கள் மேனெறி யுற்றனர்
பெண்ணி னெஞ்சிற் கிதமென லாவது
பெற்ற பிள்ளைகள் பீடுறவே யன்றோ?
மண்ணினீ புகழ் மேவிடவாழ்த்திய
வங்கமே நனி வாழிய வாழிய 3

வங்கம்—தோணி

(இது சுதேசிய மாணவர் கடற்கரைக் கூட்டத்தில் பாடியது)

குறிப்பு : —1. திரு. எஸ். ஜி. இராமாநுஜலு நாயுடு அவர்கள் தமது பத்திரிகையாகிய அமிர்த குண போதினியில் **சென்று போன நாட்கள்** என்ற தலைப்பின் கீழ் பாரதியாரைப் பற்றிச் சில குறிப்புக்கள் தொடர்ச்சியாக எழுதியுள்ளார். அதிலே, "மித்திரனில் **எனது தாய் நாட்டின் முன்னாட் பெருமையும் இந்நாட் சிறுமையும்** என்று தொடர்ச்சியாக (பாரதியார்) பாடல்கள் எழுதத் தொடங்கினர். மித்திரனில் இதுதான் அவரது முதற் பாடலாகும். இது இப்போது வெளிவந்துள்ள அவரது நூல்களில் சேர்க்கப் படவில்லை" என்று அவர் குறிப்பிடுகிறர். அவர் குறிப்பிடும் பாட்டு இந்நூலில் ஏற்ற இடத்தில் சேர்க்கப்பட்டுள்ளது. அதை எழுதுவதற்கு முன்பே **வங்கமே வாழிய** என்ற இப்பாடல் சுதேசமித்திரனில் வெளியாகியிருக்கிறது. அதேபோல இன்னும் நான்கு பாடல்கள் முன்னதாகவே வெளியாகியுள்ளன. நான் ஆராய்ந்த அளவில் **வங்கமே வாழிய** என்ற பாடலே சுதேசமித்திரனில் வெளியான முதற் பாடலாகக் காண்கிறது. இப்பாடல் வெளிவந்தபோது பாரதியாருக்கு வயது இருபத்துமூன்று. பாரதியார் 15 செப்டம்பர் 1905க்கு முன்பே பல பாடல்கள் இயற்றியுள்ளதாக அவரது வாழ்க்கை

வரலாற்றை எழுதியோர் குறிப்பிட்டிருக்கிறார்கள். சிறு வயதி லேயே எட்டையபுரம் சம்ஸ்தானத்தில் இருந்தபோது இவர் மடல் களும் உலாக்களும் பாடியதாகவும் அவற்றோடு தனிப் பாடல்கள் பல பாடியதாகவும் அவை யனைத்தும் மறைந்துபோய் விட்டதாக வும் திரு. வ. ரா. எழுதி யிருக்கிறார். (மகாகவி பாரதியார் பக். 12). அந்தக் காலத்திலேயே இவருக்குப் பாரதியார் என்ற பட்டமளிக் கப்பட்டிருப்பதிலிருந்தும் இவர் இளமையிலேயே பல பாடல்கள் பாடி யிருக்கலாம் என்று அறியலாம். ஆனால் அப்பொழுது பாடிய பாடல்களில் ஏதாவது அவரது கவிதைத்தொகுப்பில் இடம் பெற்றுள்ளதா என்று நிச்சயிக்க முடியவில்லை. "அண்ணாமலை ரெட்டியாரைப் போல அழகாக யாராவது இக்காலத்தில் காவடிச் சிந்து பாட முடியுமா?" என்று எட்டையபுரம் சம்ஸ் தானப் புலவர்கள் ஒரு சமயம் கேட்டதாகவும், அவர்களுக்குப் பதில் கூறும் வகையில் பாரதியார் முருகக் கடவுளின்மேல் ஒரு காவடிச் சிந்தைப் பாடினாரென்றும் சொல்லக் கேள்விப் பட்டிருக் கிறேன். அதில் ஒரு சரணம் மட்டும் கிடைத்துள்ளதாக வெளி யாகியுள்ளது. அது வருமாறு:—

பச்சைத் திருமயில் வீரன்,
அலங் காரன், கௌமாரன் - ஒளிர்
பன்னிரு திண்புயப் பாரன் - அடி
பணி சுப்பிர மணியர்க் கருள்,
அணி மிக்குயிர் தமிழைத் தரு
பக்தர்க் கெளியசிங் காரன் - எழில்
பண்ணு மணசலத் தூரன்

வங்கமே வாழிய என்ற பாடலே முதல் முதலாகச் சுதேசமித் திரனில் வெளிவந்த பாரதியார் பாடல் என்று கொள்வது மட்டும் பொருத்தமாகத் தோன்றுகிறது.

அக்காலத்திலே வங்காளத்தில் பொங்கி எழுந்த தேசிய உணர்ச்சிஎல்லோருடையஉள்ளத்தையும் கவர்ந்திருக்கிறது.மாண வர்களுடைய உள்ளத்தையும் அது கவர்ந்தது வியப்பில்லை. தேசிய உணர்ச்சி மிக்க மாணவர் கூட்டத்திலே வங்காளத்தை வாழ்த்திப்

பாரதியார் இப்பாடலைப் பாடி யிருக்கிறார்- சுதந்திரப் போரில் முன்னணியில் நின்று பாரதநாட்டின் விடுதலைக்கு அடிகோலுவ தோடு இந்நாடு மறுபடியும் பழம் பெருமையை அடையக் கொண்டு செல்லும் தோணியைப் போல வங்காளம் திகழ்கின்ற தென அவர் பாராட்டிப் பாடுகின்றார். வங்காளப் பிரிவினை சம்பந்தமான சட்டம் 1905 செப்டம்பர் 29-ல் ஏற்பட்டது; 1905 அக்டோபர் 16-ல் பிரிவினை செய்யப்பட்டது. ஆதலால் செப்டம்பர் 15-க்கு முன்பே அது பற்றிய பேச்சும் எதிர்ப்புக் கிளர்ச்சியும் தோன்றி யிருக்க வேண்டும்.

**குறிப்பு :—2.** தலைப்புடன் கொடுக்கப்பட்டிருக்கும் கிறிஸ்துவ சகாப்தத்தை ஒட்டிய தேதியும் அதற்குச் சரியான தமிழ்த் தேதியும் ஒரு கவிதை, கட்டுரை அல்லது கதை முதல் முதலில் சுதேசமித்திரனில் வெளியான காலத்தைக் குறிக்கும். வேறு பத்திரிகை அல்லது நூலில் வெளியாகி யிருந்தால் அது அங்கேயே குறிக்கப்படும்.

## வேல்ஸ் இளவரசருக்குப் பரத கண்டத் தாய்

# நல்வரவு கூறுதல்

## (பாரத மாது தானே பணித்தன்று)

29 *ஜனவரி* 1906 *விசுவாவசு* **தை 17**

மிஸ்டர் சி. சுப்பிரமணிய பாரதி இயற்றிய

### ஆசிரியப்பா

வருக செல்வ வாழ்கமன் னீயே !
வடமேற் றிசைக்கண் மாப்பெருந் தொலையினோர்
பொற்சிறு தீவகப் புரவலன் பயந்த
நற்றவப் புதல்வ நல்வர வுனதே.
மேதக நீயுநின் காதலங் கிளியும்
என்றனைக் காணுமா றித்தனை காதம்
வந்தனிர் வாழ்திரென் மனமகிழ்ந் ததுவே.
செல்வகேள் ! என்னருஞ் சேய்களை நின்னுடை
முன்னோ ராட்சி தொடங்குறாஉ முன்னர்
நெஞ்செலாம் புண்ணாய் நின்றனன் யாஅன்.
ஆயிர வருட மன்பிலா வந்நியர்
ஆட்சியின் விளைந்த அல்லல்க ளெண்ணில
போனதை யெண்ணிப் புலம்பியிங் கென்பயன் ?
மற்றுன் நாட்டினோர் வந்ததன் பின்னர்
அகத்தினிற் சிலபுண் ஆறுத லெய்தின.
போர்த்தொகை யடங்கியென் னேழைப் புத்திரர்
அமைதிபெற் றுய்வ ராயினர். எனவே
பாரதி தேவி பழமைபோற் றிருவருள்

பொழிதரு லாற்றனன். பொருள்செயற் குரிய
தொழிற்கணம் பலப்பல தோன்றின பின்னும்
கொடுமதப் பாவிகள் குறும்பெலா மகன்றன.
யாற்றினிற் பெண்களை யெறிவதூஉம், இரதத்
துருளையிற் பாலரை உயிருடன் மாய்த்தலும்
பெண்டிரைக் கணவர்தம் பிணத்துட னெரித்தலும்,
எனப்பல திமைக ளிறந்துபட் டனவால்,
மேற்றிசை யிருளினை வெருட்டிய ஞான
ஒண்பெருங் கதிரின் ஒளிகு கிரணமென்
பாலரின் மீது படுதலுற் றனவே.
ஆயினு மென்னை ? ஆயிரங் கோடி
தொல்லைகள் இன்னும் தொலைந்தன வில்லை.
நல்குர வாதி நவமாந் தொல்லைகள்
ஆயிர மெனவந் தடைந்துள நுமரால்.
எனினுமிங் கிவையெலா மிறையவ னருளால்
தீங்குவ வன்றி நிலைப்பன வல்ல.
நோயெலாந் தவிர்ப்பான் நுமரே யெனக்கு
மருத்துவ ராக வந்தன ரென்பதூஉம்
பொய்யிலை. ஆதலிற் புகழ்பெறும் ஆங்கில
நாட்டின ரென்றும் நலமுற வாழ்கவே.
என்னருஞ் சேய்களு மிவருநட் பெய்தி
இருபான் மையர்க்கு மின்னலொன் றின்றி
ஒருவரை யொருவர் ஒறுத்திட லிலாது
செவ்விதின் வாழ்க ! அச் சீர்மிகு சாதியின்
இறைவனு முந்தை இன்பொடு வாழ்க !
வாழ்க நீ ! வாழ்கநின் மனமெனு மினிய
வேரிமென் மலர்வாழ் மேரிநல் லன்னம்.
மற்றென் சேய்கள் வாழிய ! வாழிய !

குறிப்பு :—1901 முதல், 1911 வரை ஏழாம் எட்வர்டு சக்கரவர்த்தியாக இருந்தார். அவருக்குப் பின் ஐந்தாம் ஜார்ஜ் சக்கர

வர்த்தியாகப் பட்டம் சூடியவர் அவர் காலத்தில் வேல்ஸ் இளவரச ராக இருந்தார். அவரை வரவேற்றே இப்பாடல் பாடப் பெற்றுள்ளது. இணையற்ற உணர்ச்சி மிக்க தேச பக்திப் பாடல்களைப் பாடித் தமிழ் மக்களைத் தட்டி எழுப்பிய பாரதியார் வேல்ஸ் இளவரசருக்கு நல்வரவு கூறிப் பாட்டியற்றி யிருப்பது ஆச்சரியமாகவே தோன்றும். முழு மனத்தோடு இதைப் பாரதியார் இயற்றினாரா என்பது சந்தேகந்தான். தாம் ஏற்றுக் கொண்டிருந்த வேலையினால் ஏற்பட்ட கடமையை நிறைவேற்றவே இதை அவர் செய்திருக்கலாம். என்றாலும் இப்பாடலிலும் பாரதியாரது தேச பக்தி ஒளிவிடுவதை நாம் காணலாம். ஆங்கிலேயரால் புதிய தொல்லைகள் பல நம் நாட்டிற்கு நேர்ந்துள்ளன என்பதைக் குறிப்பிட பாரதியார் தவறவில்லை. மேலும் இப்பாடல் "என் சேய்கள் வாழிய வாழிய" என்ற மொழிகளோடு முடிவதையும் கவனிக்க வேண்டும்.

# வந்தேமாதரம்

28 டிசம்பர் 1905 — விசுவாவசு மார்கழி 14

**திருவல்லிக்கேணியில் பிரசுரமாகும் சக்ரவர்த்தினி என்ற மாதாந்தரப் பத்திரிகையில் அதன் ஆசிரியர் மிஸ்டர் சி. சுப்பிரமணிய பாரதியாரால் வரையப்பட்டிருப்பது.**

இப்போது பெங்காள மாகாணத்திலிருக்கும் ஒவ்வொரு ஹிந்துவாலும் ஸாம கீதத்தைப் போல அத்தனை பக்தியுடன் பாடப்பட்டு வருகின்ற வந்தே மாதரம் என்ற திவ்ய கீதத்தை நான் மொழி பெயர்க்கத் துணிந்தமை, கர்வங்கொண்ட செய்கை யென்று பலர் கருதக்கூடும். ஷை கீதமெழுதிய பெங்காளி வித்வானாகிய பங்கிம் சந்திர பாபுவின் தைவிகச் சொற்களைத் தமிழ்ப்படுத்த எனக்குப் போதிய வன்மை யில்லாவிடினும் தமிழ்நாட்டா ருக்கு அச் செய்யுளின் பொருளுணர்த்த வேண்டு மென்ற ஆசைப் பெருக்காலேயே யான் இதனைத் துணிந்திருக்கிறேன். இவ் வந்தேமாதரம் என்ற கீதம் பங்கிம் சந்திர சாடர்ஜியின் நூல்களிலே மிகச் சிறப்புக் கொண்டதாகிய ஆனந்த மடம் என்ற நாவல் கதையினிடையே அமைக்கப்பட்டிருக் கின்றது.

ஆனந்த மடம் என்ற கதையானது உண்மை யாகவே நடந்த சரித்திரத்தைத் தழுவியது. வாரன் ஹேஸ்டிங்ஸ் கவர்னர் ஜெனரலாயிருந்த காலத்தில்

சந்நியாசிகள் சேர்ந்து நடத்திய ஓர் பெருங் கலகத்தைப் பற்றியே ஷை நூல் விரித்துக் கூறுகின்றது. பெங்காளத்தில் 1774—5 வருஷத்தில் பெரும் பஞ்சம் உண்டாயிற்று. அதற்கப்பால் அனேக ஆயிரம் சந்நியாசிகள் ஒன்றாய்க் கூடி அந்நியர்களைத் தமது தாய்ப் பூமியிலிருந்து ஒழித்துவிட வேண்டுமென்னும் ஒரே நோக்கத்துடன் கலகஞ் செய்யத் தொடங்கினார்கள்.

இவர்கள் ரகசியமாகச் சந்திக்கும் பொருட்டு ஆள் நுழையக் கூடாத கருங்காட்டில் ஆனந்த மடம் என்பதோர் இடம் வைத்திருந்தார்கள். இவர்கள் மகமதியப் படைகளைப் பல இடங்களில் தோல்வி செய்ததுமன்றி ஓர் ஆங்கிலேயப் பட்டாளத்தையும் முறியடித்தார்கள். எனினும் பிரிட்டிஷார் விடாமல் தாக்கியதன்பேரில் இந்த வீர சந்நியாசிக் கூட்டத்தார் கடைசியாகப் பிரிந்து போயினர். இந்த வீரத் துறவிகளில் ஒருவராகிய பவாநந்தர் வந்தேமாதரம் என்ற ஆரம்பங் கொண்ட அரிய கீதத்தைப் பாடியதாக பங்கிம் புலவர் தமது நூலில் அமைத்திருக்கிறார்.

25 வருஷங்களுக்கு முன் இவர் இந்தப் பெரு நூலைப் பிரசுரித்தபோது அந்தக் கீதத்தின் கண்ணே பெரும் பகுதி சம்ஸ்கிருதமாகவே யிருந்தபடியால் அவருடைய நேயர்கள் பலர் அதைக் குறை கூறினார்கள். ஆனால் அம்மகான் அவர்களுடைய அபிப்பிராயத்தைப் பொருட்டாக்கவில்லை. எழுதி 25 வருஷங்களுக்குள்ளாக மேற்படி திவ்ய கீதம் பெங்காளத்து ஜனங்கள் எல்லோருடைய நாவிலு

மிருக்கு மென்பதை அந்தக் கவியரசர் அறிந்திருந் தார் போலும். அதிலிருக்கும் சம்ஸ்கிருதம் வெகு எளிதாயிருப்பதால் எந்தப் பெங்காளிக்கும் வெகு சுலபமாகப் பொருள் விளங்கி விடும். அதுவுமின்றி அந்தக் கீதமானது பழமையில் முன்னோர்களால் வழங்கப்பட்டு வந்ததும் ஒப்பற்றதுமான சம்ஸ்கிருத பாஷையோடு தற்காலப் பாஷை கலப்புற்று அமைக் கப் பெற்றிருப்பதால் பூர்வ காலத்துடன் தற் காலத்தை இணைப்பதாக இருக்கின்றது. தாய்த் தேசத்தை அந்தப் பாடலில் தாயென்று வழங்கி யிருப்பது மிகவும் பொருத்தமுடைத்தே.

பலரால் இக்கீதத்திற்கு எழுதப்பட்டிருக்கும் இங்கிலீஷ் மொழிபெயர்ப்பானது பெங்காளி கீதத் திலிருந்து சில இடங்களில் மாறுபடுகின்றது. அவ்வாறு மாறுபட்ட இடங்களில் என்னால் கூடிய அளவு பெங்காளிச் சொற்களை அநுசரித்தே தமிழ் மொழிபெயர்ப் பெழுதி யிருக்கிறேன். எனது தமிழ் எத்தனை குறைவுபட்டிருந்த போதிலும் தெய்வப் புலவராகிய பங்கிம்பாபுவின் மதிப்பைக் கருதித் தமிழுலகத்தார் இதனை நன்கு ஆதரிப்பார் களென்று நம்புகிறேன்.

வந்தே மாதரம்

(முதல் மொழிபெயர்ப்பு—பார்க்க :
பாரதி நூல்கள் முதல் தொகுதி)

முப்பதுகோடிவாய் நின்னிசை முழங்கவும்—
பெங்காளிப் பாஷையிலே 7 கோடி யென்றே கூறி

யிருக்கின்றது. ஆனல் அது பெங்காள மாகாணத்தை மட்டிலுமே குறிப்பிட்டது. 30 கோடி இந்தியா முழுமையின் ஜனத் தொகை.

(நவம்பர் இதழ் சக்ரவர்த்தினியில் வந்தது)

குறிப்பு :—வந்தே மாதர கீதத்தின் மொழி பெயர்ப்பை ஒட்டிய ரஸமான ஒரு சம்பவத்தைச் சமீபத்தில் திரு. வீ. கே. ராமனுஜ ஐயர் அவர்கள் என்னிடம் கூறினர்கள். இவர் மயிலாப்பூரிலே வக்கீலாக இருக்கிறர். இவர் மஹேச குமார சர்மாவுக்கு நெருங்கிய உறவினர். மஹேச குமார சர்மா ஆனந்த மடம் என்ற நூலைத் தமிழிலே பெயர்த்து அழகாக எழுதி யிருக்கிறர். அதிலே வெளியிடுவதற்காக வந்தேமாதர கீதத்தை மொழி பெயர்த்துத் தரும்படி பாரதியாரைக் கேட்டுக் கொண்டாராம். இரண்டு மூன்று மாதங்கள் அவருடைய வேண்டுகோள் நிறைவேறவில்லை. பிறகு ஒரு நாள் இரவு சுமார் பத்து மணிக்கு பாரதியார் மஹேச குமார சர்மாவின் வீட்டுக் கதவைத் தட்டினர். அவர் அப்பொழுது சென்னை ஜார்ஜ டவுனில் வசித்து வந்தார். பாரதியார் திருவல்லிக் கேணியிலிருந்தார். அந்நேரத்தில் பாரதியார் வந்தது சர்மாவுக்குச் சற்று ஆச்சரியத்தை விளைவித்தது. "சர்மா, பாட்டு வந்து விட்டது—எழுதிக் கொள். கடற்கரையிலே உட்கார்ந்திருந்தேன். நீ கேட்ட பாட்டு திடீரென்று உதயமாயிற்று. கடற்கரையோர மாகவே நேராக இங்கு வந்து விட்டேன்" என்று பாரதியார் கூறினராம்.

பாரதியார் இரண்டு விதமாக இக் கீதத்தை மொழிபெயர்த் திருக்கிறர். இங்குள்ள கட்டுரை அப்பாடலுக்கு நல்ல முன்னுரை யாக அமைந்துள்ளது.

இக் கட்டுரையிலிருந்து வேறொரு முக்கிய விஷயமும் தெளி வாகிறது. பாரதியார் சுதேசமித்திரனில் வேலை பார்த்துக் கொண்டே அக்காலத்தில் **சக்ரவர்த்தினி** என்ற மாதப் பத்திரிகை ஒன்றை நடத்தி யிருக்கிறர். அதன் ஒரு இதழ் 1905 நவம்பரில் வெளியாகியுள்ளது.

# விண்ணப்பம்

13 பிப்ரவரி 1906 விசுவாவசு மாசி 2

எமது தாய் நாடாகிய பாரதாம்பிகையின் பெருமையை வருணித்து ஆங்கிலத்திலும் தமிழிலும் பல்வேறு காலத்துப் பல்வேறு புலவர்களால் பாடப் பெற்ற செய்யுள்மணிகளை ஓர் மாலையாகப் புனைந்து பதிப்பிக்கக் கருதியிருக்கின்றேனாதலின் பண்டைத் தமிழ் நூல்களில் பாரத நாடு முழுதினையும் ஒருங்கே புகழ்ந்து கூறப்பட்டிருக்கும் பாடல்களை அறிஞர் தெரிந்தனுப்புவார்களாயின் அவர்மாட்டு மிக்க கடப்பாடுடையவனாவேன். தமிழ்ப் புராணங்களிலும் இதிகாசங்களிலும் நாட்டுப் படலங்களில் நிடதம் கோசலம் முதலிய பகுதிகளைப் பற்றி எழுதப் பட்டிருக்கும் வருணனைகள் பயன்படமாட்டா. தற்காலத்தே தமிழ்ப் புலமையிற் சான்று விளங்கும் பெருமக்கள் புதியனவாக 'தேச பக்தி'ப் பாக்கள் புனைந்தனுப்புவாராயின் அவையும் நன்றியறிவுடன் ஏற்றுக்கொள்ளப்படும்.

சிறிய ஆற்றலுடையேனாகிய யான் இப்பெரிய தொழிலை நிறைவேற்றுவதன் கண்ணே எவ்வாற்றானும் துணைபுரிய விரும்புவோர் கால பரியயம் செய்யலாகாதென்று பிரார்த்திக்கின்றேன்.

இங்ஙனம்,

சி. சுப்ரமணிய பாரதி

விலாசம் :— சுதேசமித்திரன் ஆபீஸ், சென்னை.

**குறிப்பு:**—இவ்விண்ணப்பம் மறுமுறையும் 28 பிப்ரவரி 1906-ல் 'ஓர் சுதேசிய விண்ணப்பம்' என்ற தலைப்புடன் வெளியாகியுள்ளது. தேச பக்திப் பாடல்கள் வேண்டும் என்கிற ஆவலை இது வெளிப்படுத்துகிறது. பிறரிடம் சிறந்த தேசிய கீதங்களை எதிர் பார்த்துப் பாரதியார் ஏமாற்றமடைந்திருக்க வேண்டும். இத்துறையில் சிறந்த பாடல்கள் இல்லாத குறையை அவர் அடுத்த ஒன்றிரண்டு ஆண்டுகளிலேயே தமது பாடல்களால் முற்றிலும் களைந்து விட்டார். பாரதியார் இயற்றிய **சுதேச கீதங்கள்** என்ற நூல் 1908-ல் வெளியாகியது. வங்க வாழ்த்துக் கவியின் மூலமும் அடுத்து வரும் வந்தேமாதரம் முதலிய பாடல்கள் மூலமும் பாரதியார் இப்பணியை 1905 லிருந்தே தொடங்கி விட்டார் என்பதை நாம் அறிகிறோம்.

# வந்தேமாதரம்

24 *பிப்ரவரி* 1906 — *விசுவாவசு மாசி* 13

ஆரியமென்ற பெரும்பெயர் கொண்டவெ
மன்னையின் மீதுதிகழ்
அன்பெனு மென்கொடி வாடிய காலை
யதற்குயிர் தந்திடுவான்
மாரியெ னும்படி வந்து சிறந்தது
வந்தே மாதரமே
மானுயர் பாரத தேவியின் மந்திரம்
வந்தேமாதரமே
வீரிய ஞான மரும்புகழ் மங்கிட
மேவி தலாரியரை
மிஞ்சி வளைந்திடு புன்மை யிருட்கணம்
வீவுற வங்கமகா
வாரிதி மீதி லெழுந்த இளங்கதிர்
வந்தே மாதரமே
வாழித லாரிய தேவியின் மந்திரம்
வந்தே மாதரமே 1
காரடர் பொன்முடி வானி மயத்தரு
கங்கை வரம்பினிலும்
கன்னியை வந்தொரு தென்றிசை யார்கவி
காதல் செயா யிடையும்
வீரர்கள் மிஞ்சி விளங்கு புனாமுதல்
வேறுள ஊர்களிலும்

விஞ்சை யெனும்படி யன்புடன் யாரும்
வியந்திடு மந்திரமும்
பாரத தேச விரோதிகள் நெஞ்சு
பதைத்திடு மந்திரமும்
பாதக ரோதினு மேதக வுற்றிடு
பண்புயர் மந்திரமும்
வார முறுஞ் சுவை யின்னற வுண்கனி,
வான மருந்தெனவே
மானுயர் பாரத தேவி விரும்பிடும்
வந்தே மாதரமே 2

—சி. சுப்ரமணிய பாரதி

கன்னி - கன்னியா குமரி.

குறிப்பு:— இப்பாடலின் இரண்டாவது செய்யுள் சுதேச மித்திரனில் 27 பிப்ரவரி 1906-ல் வெளி வந்துள்ளது. பங்கிம் சந்திரர் எழுதிய வந்தேமாதா கீதத்தைப் போற்றி மொழி பெயர்த்த பாரதியார் இப் பாடலில் வந்தே மாதரம் என்னும் மந்திரத்தின் பெருமையை எடுத்தோதுகிருர்.

# என்னே கொடுமை!

4 ஏப்ரல் 1906 *விசுவாவசு பங்குனி 22*

பூர்வ காலத்தில் அர்ஜுனாதிகள் செய்ததாகப் புராணங்களிலே கூறப்படும் அம்புத் தொழில் முறைகளைப் பின்பற்றி இரண்டு ரஜபுத்திரர்கள் செய்த அற்புதமான துப்பாக்கி வித்தைகளை நோக்கும் போது உள்ளத்திலெழுந்த சில எண்ணங்கள்.

மல்லார் திண்டோட் பாஞ்சாலன்
மகள் பொற்கரத்தின் மாலுற்ற
வில்லால் விஜயன் அன்றிழைத்த
விந்தைத்தொழிலை மறந்திலிரால்
பொல்லா விதியால் தீவிரவன்
போர்முன்னிழைத்த பெருந்தொழில்கள்
எல்லா மறந்தீ ரெம்மவர்காள்
என்னே கொடுமை யிங்கிதுவே! 1

வீமன் திறலு மவற்கிளைய
விஜயன் திறலும் விளங்கிநின்ற
சேமமணிப்பூந் தடநாட்டில்
சிறிய புழுக்கள் தோன்றி வெறுங்
காம நுகர்தல் இரந்துண்டல்
கடையாம் வாழ்க்கை வாழ்ந்து பினர்
ஈமம் புகுத லிவைபுரிவார்
என்னே கொடுமை யிங்கிதுவே! 2

—சி. சுப்ரமணிய பாரதி

# எனது தாய் நாட்டின் முன்னாட் பெருமையும் இந்நாட் சிறுமையும்

11 *ஏப்ரல்* 1906 *விசுவாவசு பங்குனி* 29

**கண்ணிகள்**

புன்னகையு மின்னிசையு மெங்கொளித்துப் போயினவோ
இன்னலொடு கண்ணீ ரிருப்பாகி விட்டனவே!
ஆணெலாம் பெண்ணாய் அரிவையரெலாம் விலங்காய்
மாணெலாம் பாழாகி மங்கிவிட்டதிந் நாடே!
ஆரியர்கள் வாழ்ந்துவரும் அற்புதநா டென்பதுபோய்ப்
பூரியர்கள் வாழும் புலைத்தேச மாயினதே!
வீமாதி வீரர் விளிந்தெங்கு போயினரோ!
ஏமாறி நிற்கு மிழிஞர்களிங் குள்ளாரே!
வேதவுப நிடதமெய்ந் நூல்க ளெல்லாம்போய்
பேதைக் கதைகள் பிதற்றுவரிந் நாட்டினிலே!
ஆதி மறைக்கீதம் அரிவையர்கள் சொன்னதுபோய்
வீதி பெருக்கும் விலையடிமை யாயினரே!
செந்தேனும் பாலும் தெவிட்டி நின்ற நாட்டினிலே
வந்தே தீப்பஞ்ச மரபாகி விட்டதுவே!
மாமுனிவர் தோன்றி மணமுயர்ந்த நாட்டினிலே
காமுகரும் பொய்யடிமைக் கள்வர்களும் சூழ்ந்தனரே!
பொன்னு மணியுமிகப் பொங்கிநின்ற வித்நாட்டில்
அன்னமின்றி நாளு மழிவார்க ளெத்தனைபேர்?

—சி. சுப்பிரமணிய பாரதி

குறிப்பு:— இன்னும் வரும் என்று இப்பாடலின் இறுதியில் குறிப்பிடப்பட்டிருக்கிறது. திரு எஸ். ஜி. ராமானுஜலு நாயுடு அவர்களும் தமது சென்று போன நாட்கள் என்ற கட்டுரையிலே பாரதியார் இத்தலைப்பைக் கொண்டு தொடர்ச்சியாகப் பாடல்கள் எழுதினாரென்று கூறுகிறார். ஆனால் மற்றப் பகுதிகளைக் கண்டு பிடிக்க முடியவில்லை.

# ஸ்வாமி அபேதானந்தர்

21 ஜூலை 1906

### (இந்தியா பத்திரிகைக் கட்டுரை)

இந்த வாரத்தில் சென்னையிலே நடந்த சமாசாரங்களுக்குள் வெகு முக்கியமானது ஸ்வாமி அபேதானந்தரின் வரவேயாகும். பாரத நாட்டு மகரிஷிகளில் ஒருவரும் ஜகத் பிரசித்தருமாகிய ஸ்வாமி விவேகானந்த பரமஹம்ஸரது ஸகபாடியும் ஸ்ரீமத் ராமகிருஷ்ண பரப்ரஹ்மத்தின் சிஷ்யருமான அபேதானந்தர் பல வருஷ காலமாக ஐரோப்பா, அமெரிக்கா முதலிய இடங்களில் மண்ணாசையிலும் பொன்னாசையிலும் அமிழ்ந்து கிடக்கும் மனிதர்களிடம் வேதாந்த மார்க்கம் உபதேசித்து அவர்களுடைய இரும்பு நெஞ்சுகூட ஞானத் தீயில் இளகுமாறு செய்வித்துப் பெருங் கீர்த்தி பெற்று விட்டு, இப்போது தமது தாய் நாட்டிற்கு மீண்டு வந்திருக்கிறார்.

இவருக்குச் சென்னையிலே நடந்த உபசரணைகளையும், இவர் சென்னையிலே செய்த உபந்நியாசக் கருத்துக்களையும் பற்றி மற்றோரிடத்திலே பிரஸ்தாபம் செய்திருக்கிறோம். இவரும் இவரது கூட்டாளிகளும் கடல் மீது எத்தனையோ ஆயிரம் காதம் கடந்து போய் இத்தேசத்தின் பெயர் கேட்டவுடனே அந்நியர்கள் முடி வணங்குமாறு செய்யும்

நன்மைக்கு நம்மவர்களால் என்ன கைம்மாறு செய்ய முடியும்? இந்த மகான்கள் தாம் என்ன கைம்மாறை எதிர் பார்க்கிறார்கள்? யாதொரு பற்று மில்லாமல், இரந்து உண்பவர்களாய் உலகத்தாரின் ஞான விழிக்கு ஏற்பட்டிருக்கும் மாயையாகிய குருட்டுத் தன்மையை நீக்கி, ஒளியளிக்க வேண்டுவதே கடமையாகக் கொண்டு நாள் கழித்து வரும் இப்பெரியார்களுக்கு உலகம் அளக்கத் தகாதவாறு கடமைப்பட்டிருக்கிறது. ஆத்மாவே உண்மை யென்றும் அதனை மறைத்து நிற்கும் மற்றத் தோற்றங்களெல்லாம் வெறும் மயக்கமே என்றும் போதனை செய்யத் தலைப்பட்டிருக்கும் அபேதாநந்த ஸ்வாமிகள், அந்தப் பராமார்த்திக நிலைமை அறியாமல் வியாவஹாரிக நிலையிலே உழலும் நம்மவர்களுக்குக் கூட மிகவும் பயன்படத் தக்க சில ஹிதோபதேசங்கள் தந்திருக்கின்றார். ஞாயிற்றுக் கிழமை மாலை டவுன்ஹால் வெளி மைதானத்திலே இவர் உபந்நியாசம் புரிந்த காலத்தில் நம்மவர்களின் பேடித் தன்மையையும் பயங்காளித் தன்மையையும் பற்றிப் பேசியது கொஞ்சமில்லை. "ஆண்மை இழந்து பள்ளத்தில் விழுந்து கிடக்கிறீர்களே! எழுந்து நின்று உங்களது புருஷத் தன்மையை நிரூபித்துக் கொள்ளுங்கள்" என்று இத்தேசத்தாரை நோக்கிக் கூறுவதில் விவேகாநந்தர் எம்மட்டு ஆத்திரம் கொண்டிருந்தாரோ அம்மட்டு அபேதாநந்தரும் கொண்டிருப்பதைக் காண்கிறோம். தீர புத்திரர்களாகிய ஆரியர்கள் ஏதோ ஒருவிதமான மதி மயக்கத்தால் குழந்தைகளைப் போலவும்

பெண்களைப் போலவும் நடந்து கொள்வதைப்பார்த்தால் அனைத்தையும் துறந்த ஞானிக்குக்கூட ஒரு விதமான பரிதாபம் ஜனிக்குமல்லவா?

அபேதாநந்தருக்கும் அவர் போன்ற ஞானிகளுக்கும் நாம் பெரிய உபசரணைகள் நடத்துவதால் மட்டும் அவர்களது பிரீதிக்கு உள்ளாய் விடமாட்டோம். பல்லக்குகள், புஷ்பஹாரங்கள், வாத்தியங்கள் என்பவற்றைக் கொண்டு ஒரு ஞானியின் கிருபையைச் சம்பாத்தியம் செய்து விடுவதென்றால் அது எளிதான காரியமா? அவர்களது உபதேசத்தின் உண்மையைக் கிரகித்து நம்மால் இயன்ற மட்டும் அதன்படி நடக்க முயல்வதே நாம் அவர்களுக்குச் செய்யக்கூடிய கடமையாகும்.

தீரத் தன்மையைப்பற்றி மட்டிலு மல்லாமல் ஐக்கியம் முதலிய மற்ற விஷயங்களைப் பற்றியும் அபேதாநந்தர் பேசி யிருக்கிறார். இந்தியாவில் 30 கோடி ஜனங்கள் இருக்கிறார்கள் ஆனால் ஒருவனுக் கொருவன் சம்பந்த மில்லாமல் ஒவ்வொருவன் ஒவ்வொரு மாதிரி எண்ணங் கொண்டிருக்கிறான். ஆதலால் வெவ்வேறு வகைப்பட்ட 30 கோடி எண்ணங்கள் ஏற்பட்டுப் போய் விடுகின்றன. எனவே ஒரு காரியமும் எளிதாகச் சாதிக்க முடியாமல் போய் விடுகிறது. பிரிட்டிஷ் தேசத்தில் 4 கோடி ஜனங்கள் மாத்திரமே இருந்த போதிலும் அவர்களனைவரும் ஒரே விதமான எண்ணங் கொண்டிருப்பதனால் அவர்கள் காரியங்கள் மிகவும் எளிதாகக் கை கூடிவிடுகின்றன. இதனை விவேகாநந்தர் வெகு தெளிவாக எடுத்துக் கூறி இருக்கிறார்.

இது நிற்க. அபேதாநந்தர் சென்னை மாகாணத்திலும், நகரத்திலும் பெற்ற உபசரணைகள் அவருக்கு இத்தேசம் முழுவதிலும் நடைபெறும் என்பதில் ஆக்ஷேபமில்லை. ஆனல் அத்துடன் இவர் சென்ற இடமெல்லாம் ஜனங்கள் இவரது போதனைகளைப் பக்தியுடன் கேட்டுப் பயன் பெறுவார்களென்று நம்புகிறோம். இத்தகைய மஹான்கள் இந்நாட்டிலே தோன்றி வருவார்களானல் ஆரிய பூமியானது மறுபடியும் புராதன காலத்துப் பெருமையைக் காட்டிலும் மேற்பட்ட பெருமைக்கு வந்துவிடும்.

குறிப்பு:— ஸ்வாமி அபேதாநந்தர் 15 ஜூலை 1906-ல் சென்னைக்கு விஜயம் செய்தார்.

**அபேதாநந்த ஸ்வாமிகள்மீது ஸ்தோத்திரக் கவிகள்** என்ற பாடலும் இது சமயம் எழுதப்பட்டிருக்கும் என்று ஊகிக்கலாம்.

# ஆலயங்கள்

ஆகஸ்டு 1906.

(இந்தியா பத்திரிகைக் கட்டுரை)

நம்முடைய ஆலயங்களின் மிகுதி, இதர தேசங்களின் உலக சம்பந்தங்களால் (மெட்டீரியலிஸம்) உண்டான சுகத்தையே பிரதானமாகக் கொண்டு அதில் உழன்றுடுகையில் இந்தியாவானது ஆரியர் இப் பரத கண்டத்தில் குடியேறினது முதல் எப்போதும் ஆத்ம சுத்திக்காகவே பாடுபட்டதென்பதற்கும் பரம புருஷார்த்தங்களையே நாடினதாய் இருக்கிறதென்பதற்கும் திருஷ்டாந்தம். அவ்வாலயங்களில் அனேகம் பூர்விகமாய் ஏற்பட்டவைகளாகவும், ஆழ்வார்கள் நாயன்மார்கள் என்று உலக உஜ்ஜீவர்த்தமாக ஏற்பட்ட பக்த சிரோமணிகளால் வைணவ சைவ நூல்களில் பாடல் பெற்றவைகளாகவும் இருக்கின்றன. பூர்விகக் கிரந்தங்களில் இவ்வாலயங்களின் மகிமைகளைப்பற்றி எழுதி யிருக்கப்பட்டவைகளே அநேகம் உள. இவ்வாலயங்களில் மகோற்சவங்கள் நடக்கிற காலங்களில் வெகு தூரங்களிலிருந்து விசேஷத் திரவியம் செலவு செய்து கொண்டு சுவாமி தரிசனத்தின் பொருட்டு ஜனங்கள் வருவது உலகப் பிரசித்தமான விஷயம்.

கவர்ன்மெண்டாரும் இவ்வாலயங்களின் மகிமையை உத்தேசித்தும், ஜனங்கள் அவைகளின்

மேல் வைத்திருக்கும் பக்தி விசேஷத்தைக் கருதியும் அநேக முக்கியமான ஸ்தலங்களுக்கு வருஷாந்திரப் பணமும் கொடுக்கிறார்கள். மேலும் இவைகளின் மகிமை எவ்விதத்திலும் குறைவுபடக்கூடாது என்ற எண்ணத்துடன், ஒரு சட்டமும் ஏற்படுத்தியிருக்கிறார்கள். அதற்கு தேவஸ்தான சட்டமென்று பெயர் ('ரிலிஜியஸ் எண்டோமெண்ட் சட்டம்'). அதன்றியும், இவ்வாலயங்களில் அநேகம் விசேஷ ஐசுவரியம் உடையவைகளாகவும் கோவில்களுக்கென்று கவர்ன்மெண்டாரால் கிஸ்தியில்லாமல் அளிக்கப்பட்ட கிராமங்களிலிருந்து வருஷாந்தர வரும்படி உடையவைகளாகவும் இருக்கின்றன. இவ் வரும்படியோடு கூடத் தரிசனம் செய்ய வரும் பிரயாணிகளால் பிரார்த்தனைக்காகக் கொடுக்கும் பணமும் சில ஸ்தலங்களில் விசேஷமாயிருக்கிறது.

இவ்வித வருமானங்களோடு ஏற்பட்ட இந்து ஆலயங்கள், எம்மாதிரியாக நிர்வகிக்கப்படுகின்றன வென்று பார்ப்போம். சாதாரணமாய்க் கோயில் தின பூஜை முதலான காரியங்களுக்கு வேண்டிய செலவுகள் கொஞ்சந்தான். வேலைக்காரர்களுக்காகக் கொடுக்க வேண்டிய சம்பளங்களும் ஒரு சிறு அளவாகத்தான் ஏற்படும். ஆனால், பெரிய உற்சவாதிகளுக்காகச் செலவு செய்யும் பணம் உபயம் செய்வோர்களால் ஒத்தாசை செய்யப்பட்டபோதிலும், விசேஷமாகத்தான் இருக்கும். இச் செலவுகளெல்லாம் போக மிகுதியாக இருக்கும் சில பெரிய ஆலயங்களின் பணத்தைப்பற்றி யோசிப்போமாகில், சாதாரணமாய் வீணாகச் செலவு செய்யப்படு

கிறதென்று ஏற்படும். மத விஷயமான சண்டை சச்சரவுகளிலும், இன்னும் இதர துர் வியாச்சியங் களிலும் விசேஷப் பணம் விரயம் செய்யப்படுகிறது.

இவ்விடத்தில் நம்முடைய ஆலயங்களோடு ஆங்கிலேய சர்ச்சுகள் எப்படி வித்தியாசப்படுகின் றன என்று பார்ப்போம். அவைகளுக்கும் நம்மு டைய ஆலயங்களுக்கு இருப்பதுபோல் வரவு செலவு கள் உண்டு. ஆனல் சர்ச்சுகளில் ஊழியம் செய் வோர்கள் படித்தவர்களாயும் பல விஷயங்களையும் தெரிந்தவர்களாயும் இருக்கிறார்கள். ஆங்கிலேயர் களில் கவர்ன்மெண்டு உத்தியோகம், வக்கீல், வியா பாரம் முதலான தொழில்களைப்போலச் சர்ச்சில் வேலைக்காரனுதல் ஒரு தொழிலாக ஏற்பட்டிருக் கிறது. கல்வி கற்றவர்களுக்கு வேறு வேலைகள் சரிப்படாத பட்சத்தில் சர்ச்சில் பிஷப்பாக ஏற்படு தல் ஒரு கௌரவமான தொழிலாக ஏற்பட்டிருக் கிறது. முற்காலத்தில் இங்கிலாந்தில் சர்ச்சுகள் கல்விக்கிடமாகவும் இருந்தது.

இந்தியாவில் அம்மாதிரியான வழக்கம் கிடை யாது. முன் இந்து ராஜாக்கள் காலத்தில் பல கோவில்களில் பாடசாலைகள் ஏற்படுத்தித் தர்ம மாகக் கல்வி கற்றுக் கொடுத்துக்கொண்டிருந்தார் கள். அந்த வழக்கம் இன்னும் சில ஆலயங்களில் வேதம் ஓதுதலிலும் சம்ஸ்கிருதம், தமிழ் முதலான சுதேச பாஷைகளைக் கற்றுக்கொடுத்தலிலும் விளங்குகிறது. ஆனல் அநேக பெரிய விசேஷ வரும்படியையுடைய ஆலயங்களில் மிகுந்த பணம் இதர வீண் செலவிற்கு உபயோகப் படுகிறதே

ஒழிய, கல்வி விருத்திக்கு உபயோகப்படுகிறதில்லை. கோவில்களில் ஊழியக்காரர்கள், படித்தவர்களாகச் சர்ச்சுகளில் இருப்பதைப்போல ஏற்படலாகுமோ வெனில், கல்வி விருத்தியால் ஜனங்கள் ஆலயங்கள் ஏற்பட்டதற்குக் காரணம் பக்தி விருத்திக்காகவே என்றும், கல்வியை விருத்தி செய்தால் பக்தி விருத்திப்படும் என்றும் உணருவார்களாகில், ஆலயங்களில் படித்தவர்களை ஊழியக்காரர்களாக ஏற்படுத்துவதற்கு ஆக்ஷேபணை என்ன?

பக்தியும் கல்வியும் ஒருவாறு புணர்ந்திருக்கப் பட்டனவென்பதை விளக்குவதற்காகக் கிறிஸ்தவப் பாதிரிகளைத் திருஷ்டாந்தமாகக் காண்பிக்கலாகும். அவர்கள் மதத்தை விருத்தி செய்வதற்[illegible]க வந்ருந்த போதிலும் பல இடங்களில் பெரிய பாடசாலைகளை ஏற்படுத்திக் கல்வி விருத்தியைச் செய்கிறார்கள். ஆதலால் நம்முடைய ஆலயங்களில் மிகுந்த பணத்தை வீண் செலவு செய்யாமல் கல்விக்காக உபயோகப்படுத்தினால் ஜனங்களுக்கு அபரிமிதமான திருப்தியை உண்டாக்கும். திருப்பதியில் கோவில் பணத்தின் கொஞ்சம் பாகத்தை மகாந்து பள்ளிக்கூடத்திற்காக செலவழிக்கிறார்கள். அதைப்போல் பெரிய ஸ்தலங்களில் ஸம்ஸ்கிருதம், தமிழ் முதலிய பாஷைகளைக் கற்றுக் கொடுக்கப் பெரிய பாடசாலைகளை ஏற்படுத்திச் சம்பளம் கொடுக்கச் சக்தியற்றவர்களுக்குச் சம்பளம் இல்லாமல் கல்வி கொடுப்பாராகில் ஜனங்களை நாகரிகத்திலும் புத்தியிலும் விருத்தி செய்ய எவ்வளவு உபயோகமாயிருக்கும்.

ஆலயங்களில் அன்னம் அளிப்பது அதிக மூடத்தனமென்பது சிலருடைய வாதம். ஒரு விதத்தில் அது புத்தியீனமாகத்தான் இருக்கிறது. ஏனெனில் அநேக ஸ்தலங்களில் சோம்பேறிகளாய்க் கண்ட இடத்தில் சாப்பிட்டுக் காலம் போக்குகிறவர்களுக்குத்தான் அன்னம் அளிக்கிறார்கள். அப்படிச் செய்வதால் சில வேளைகளில் புதிதாகச் சுவாமி தரிசன காரணமாய் வந்தவர்களுக்குச் சாப்பாடு அகப்படாமல் போய்விடுகிறது. இது எவ்வளவு விகாரமாக இருக்கிறது? ஆலயங்களில் வெளி ஊரிலிருந்து உதவியற்றுச் சுவாமி தரிசனத்திற்காக வந்தவர்களுக்கு அன்னம் அளிக்கும் பொருட்டு ஏற்பாடு செய்திருக்கிறது. அப்படிக் கன்றி, சோம்பேறிகளை விருத்தி செய்யக் கோவில் பணம் உபயோகிக்கப்பட்டால் எவ்வளவு விகாரமாயிருக்கிறது? ஆனால் கோவில்களில் அன்னமே அளிக்கக்கூடாது என்று சொல்வதும் அதர்மம். பிரயாணிகளாய்ச் சுவாமி தரிசனத்தின் பொருட்டு வருபவர்களுக்கு அன்னமளிப்பது நியாயமே.

# யான்

17 செப்டம்பர் 1906 பராபவ புரட்டாசி 2

அருளா லெவையும் பார் என்றான் — அதை
அறியாதே சுட்டியென் அறிவாலே பார்த்தேன்
இருளான பொருள்கண்ட தல்லால் — கண்ட
என்னையுங் கண்டிலே னென்னடி தோழி!

—தாயுமானவர்

ஆயிரங் கோடி அறிஞர்கள் பற்பல
ஆயிர யுகங்க ளாராய்ந் தறிகிலா
'யான்' உடை யியற்கை யானோ அறிவன்!
மீனுணர்ந் திடுங்கொல் வியன்கடற் பெருமை?
அருள்வழிக் காண்கென் றருளினர் பெரியோர்:
மருள்வழி யல்லான் மற்றொன் றுணர்கிலேன்!
அகிலமும் 'யான்' என ஆன்றோ ரிசைப்பர்
மகிதலத் திருளின் மண்டிய மனத்தேன்
யானதை யொரோவழிக் கண்டுளேன்; எனினும்
மானத ஒளியது மங்குமோர் கணத்தே
யானெனும் பொருள்தான் என்னைகொல்? அதனையிவ்
வூனெனக்கொள்வ ருயிரிலார் சிலரே.
*பிரமமே யானெனப் பேசுவர் பேசுக!
†பிரமமே யானெனப் பேசினர் பெரியோர்.

—சி. சுப்பிரமணிய பாரதி

---

* ப்ரம்மம் அல்லது ப்ரமை. 'நானெ'ன்னும் உணர்ச்சியே தப்புணர்ச்சி.

† ப்ரம்மம் அல்லது மூதற் பொருள்.

குறிப்பு :—பாரதியார் இப்பாடலை சானெட் (Sonnet) என்று தலைப்பில் கூறுகிறார். இதுவும் அடுத்த பாடலும் Sonnet I, II என்று ஆங்கிலத்திலேயே குறிப்பிடப்பட்டுள்ளன. சானெட் என்பது நம் நாட்டு யாப்புவகை யல்ல. அது மேல்நாட்டு யாப்பு வகை. இது முதலில் இத்தாலி மொழியில் தோன்றிப் பிறகு இதன் சிறப்பின் காரணமாக ஐரோப்பிய மொழிகள் பலவற்றிலும் ஏற்றுக் கொள்ளப்பட்டது என்று கூறுவார்கள்.

சானெட் பதினான்கு வரிகள் கொண்டது. இந்த யாப்பின் அமைப்பிற்குத் தனிப்பட்ட இலக்கணம் கூறப்பட்டிருக்கிறது. பாரதியார் எழுதி யிருக்கும் இப்பாடலில் பதினான்கு வரிகள் உள்ளன. சந்திரிகை என்ற பாடலில் பதினான்கு வரிகளோடு தனிச் சொற்கள் இரண்டிடங்களில் வருகின்றன. வரிக் கணக்கைத் தவிர வேறு வகையில் மேல் நாட்டு இலக்கணம் தமிழ்ப் பாடலில் இல்லை. ஏனெனில் அந்நாட்டு யாப்பு முறையும் தமிழ் யாப்பு முறையும் வேறானவை.

ஆங்கிலத்திலே ஷேக்ஸ்பியர் முதலிய பல சிறந்த கவிஞர்கள் அமரத்துவம் பெற்ற சிறந்த சானெட்டுக்களை இயற்றி யுள்ளார்கள். அவற்றைப் படித்துப் பாரதியார் பெரிதும் மகிழ்ந்திருக்க வேண்டும். அதனாலே இந்த யாப்பு முறையைத் தமிழில் புகுத்த அவர் விரும்பி யிருக்கிறார்.

# சந்திரிகை

25 *செப்டம்பர்* 1906 — *பராபவ புரட்டாசி* 10

யாணர்க் குறையுளா மித்து நாடதனிற்
காணற் கினிய காட்சிகள் பலவினு
மாணப் பெரிய வனப்பமைத் தின்கவி
வாணர்க் கமுதா வயங்கிடும் பொருளிதென்
றூணப் புலவோ னுரைத்துளன் முன்னாள்

அஃதுதான் :—
கருமையிற் படர்ந்த வானமாங் கடலிடை
ஒருமையிற் றிகழு மொண்மதித் தீவினின்
றெல்லாத் திசையினு மெழில்பெற வூற்றுஞ்
சொல்லா வினிமைகொள் சோதியென் றோதினன்.
ஓர்முறை
கடற்புற மணன்மிசைத் தனியே கண்ணயர்த்
திடைப்படு மிரவி லினிதுகண் விழித்துயான்
வானக நோக்கினேன் மற்றதன் மாண்பினை
யூனமா நாவினி லுரைத்தலும் படுமோ?
நினைவறுந் தெய்விகக் கனவிடைக் குளித்தேன்

வாழிமதி !

—சி. சுப்பிரமணிய பாரதி

யாணர்—அழகு. ஊணப்புலவன்—ஆங்கிலப் புலவன்.

குறிப்பு:—இதுவரை வந்துள்ள பாடல்களைப் படிக்கும்போது கவிதைத் தொழிலிலே பாரதியாரின் ஆரம்ப நிலை மனத்திலே

தெளிவாகப் புலனாகும். இப் பாடல்களில் புகுந்துள்ள சில சொற்களுக்குப் பொருள் எழுத வேண்டியது அவசியமென்று கருதிப் பாரதியாரே பாடலின் கீழ் அவற்றை விளக்கி யிருக்கிறார். இவ்வாறு தொடங்கிய கவிதை ஒன்றிரண்டு ஆண்டுகளிலே ஆச்சரியமான முறையிலே முழு மலர்ச்சி பெறுகின்றது. அவ்வாறு மலரும் பாரதியாரின் கவிதா சக்தி இப்பாடல்களிலும் மின்ன விடுவதைக் கண்டு ரஸிக்கலாம்.

ஸ்ரீ சுப்பராம தீக்ஷிதர் காலஞ்சென்றதைப் பற்றிய

# இரங்கற் பாக்கள்

26 நவம்பர் 1906 பராபவ கார்த்திகை 11

பார்க்க: பாரதி நூல்கள் – முதல் தொகுதி – ஸ்வசரிதையும் பிற பாடல்களும்.

யாரையும் வணங்கிப் பிழைக்கும் சுபாவம் பாரதியாருக்கு இல்லை. ஆனால் அவர் சங்கீதத்திற்குத் தலை தாழ்த்து வந்ததை இப்பாடலில் அறியலாம்.

"மன்னரையும் பொய்ஞ் ஞான மதக்குறவர்
தங்களையும் வணங்கலாதேன்
தன்னனைய புகழுடையாய், நினைக்கண்ட
பொழுதுதலை தாழ்த்து வந்தேன்;
உன்னருமைச் சொற்களையே தெய்விகமா
மெனக் கருதி வந்தேன்"

என அவர் சுப்பராம தீக்ஷிதரைக் குறித்துப் பாடுவதிலிருந்து அவருக்கு இசையிலே உள்ள ஆர்வம் வெளியாகின்றது.

ஸங்கீத விஷயம், பாட்டு முதலிய அவர் எழுதிய கட்டுரைகளிலிருந்தும் இசை சம்பந்தமான அவருடைய கருத்துக்களை அறியலாம்.

சுப்பராம தீக்ஷிதர் அவர்களைப் பற்றிப் பின்வரும் குறிப்பு சுதேசமித்திரனில் காணப்பட்டது.

சங்கீத வித்தையிலே தேவாம்சம் பெற்று விளங்கிய முத்துசாமி தீக்ஷிதரின் சகோதரரான பாலசாமி தீக்ஷிதரின் குமாரர். இராகமாலிகை, தான வர்ணம் முதலிய சிறந்த உருப்படிகள் செய்திருக்கிறார். ஆந்திர பாஷையில் மஹா தேர்ச்சி. சங்கீதத்திலும் அப்படியே. சங்கீத சம்பிரதாய பிரதர்சினி என்ற நூல் வெளியிட்டார். காலமாகும்போது அவருக்கு 68 வயது.

ஸ்ரீ சுப்பராம தீக்ஷிதர் எட்டயபுரம் சமஸ்தான வித்வானக இருந்தார். இவரை முத்துசாமி தீக்ஷிதரின் புதல்வர் என்பது தவறு. முத்துசாமி தீக்ஷிதருக்கு மக்கட்பேறு வாய்க்கவில்லை.

# கலை

8 டிசம்பர் 1906

(இந்தியா பத்திரிகைத் தலையங்கம்)

கலையென்னும் சொல் தமிழிலே மிகவும் பரந்த பொருளுடையது. எனினும் இங்கே மேற்படி சொல்லை ஆங்கிலேயர்கள் "ஆர்ட்" (Art) என்ற மொழியை உபயோகிக்கும் அர்த்தத்திலே பயன் படுத்துகின்றோம். அழகு, சுவை, ரம்மியம் என்பவற்றுக்கிடமாகி மனிதர்கள் புளகமுறும்படி செய்யும் தொழில்களையெல்லாம் ஆங்கிலேயர்கள் "மதுர கலைகள்" (Fine Arts) என்று கூறுகிறார்கள். இதனைப் பொதுப்படையாக, "கலை" என்று சுருங்கச் சொல்வதுமுண்டு. சங்கீதம், கவிதை, சிற்பம், சித்திரம் என்பவை இவ்வினத்தைச் சேர்ந்தவை. இக்கலைகள் ஒவ்வொன்றும் வெவ்வேறு விதமான பழக்கத்தின் மேலும், பயிற்சியின் மேலும் ஏற்படக் கூடியதென்றாலும், பொதுவாக இவை ஆழ்ந்த மனக் கிளர்ச்சியுடையோரும், வரப் பிரசாதிகளென்று கருதப் படுவோருமாகிய பெரியோர்களுக்கே இனிது சாத்தியமாகின்றபடியால், ஆங்கிலேயர்கள் இவற்றை ஒரு வர்க்கத்திலே சேர்த்திருக்கிறார்கள்.

இம் மதுரகலைகளின் நிலைமை தற்காலத்திலே தமிழ் நாட்டிலே எவ்வாறு இருக்கிறதென்பதைப்

பற்றியும், அதன் காரணத்தைப் பற்றியும் இங்கே ஆராயப் புகுந்திருக்கின்றோம். தமிழ் நாட்டைப் பற்றிக் கூறுவது இந்தியாவின் மற்றப் பகுதிகளுக்கும் பெரும்பான்மையும் பொருத்தமுடையதே யாகும். பெங்காளத்திலும் மஹாராஷ்டிர தேசத்திலும் மேற்படி கலைகளிலே சில, சிறிது சிறிது தளிர்த்து வருகின்றன வென்றாலும், இந்தியாவிலுள்ள மற்ற நாடுகளிலெல்லாம் அவை உயிரின்றி நிற்கின்றன.

இப்போது திருஷ்டாந்தமாகத் தமிழ் நாட்டை எடுத்துக் கொள்வோம். இங்கே கம்பனைப்போன்ற கவிஞர்கள் இக்காலத்தில் யார் இருக்கின்றார்கள்? கம்பனைப் போன்ற கவிஞர் அடிக்கடி தோன்றுவதில்லையென்பதைச் சிலர் ஆக்ஷேபமாகக் கொண்டு வரலாம். கம்பனுடைய பெருமையில் நூற்றில் ஒரு பங்குகொண்டோர் யாவர் இருக்கிறார்கள்? பாண்டித்தியம் உடையோர்களும், பாண்டித்தியம் இருப்பதாக நினைத்துக் கொள்வோர்களும் கவிகள் கூறத் தொடங்கி விடுகின்றார்கள். கவித்திறமை இருப்பதற்குப் பாண்டித்தியம் ஒருவாறு அவசியமென்றாலும், பாண்டித்தியம் இருப்போர்களுக்கெல்லாம் கவிதா சக்தி இருப்பதில்லை யென்பதை நம்மவர்கள் மறந்து விட்டார்கள். இலக்கண வித்துவான்கள்கூடத் தாம் கவி பாடாமல் இருந்தால் அது மதிப்புக் குறை வென்று நினைத்துக் கொள்ளுகிறார்கள். இங்ஙனமாக, உண்மையான கவிதை இந்நாட்டிலே மறைந்து போய்விட்டது.

இது போலவே மற்ற மதுரகலைகளும் மழுங்கிப் போய்விட்டன. சிற்பக் கலையிலே அரிய "வரப் பிரசாதம்" கொண்டோர் இப்பொழுது காணப்பட வில்லை. சித்திர லேகனத்திலே ரவிவர்மா ஒருவர் தன்னந்தனிச் சுடராக இருந்து மறைந்துவிட்டார். சங்கீதத்திலே கடல் போன்ற ஆழங்கொண்ட கீர்த் தன கர்த்தர்களைக் காணோம். தியாகையர், தீக்ஷிதர் என்போரைப் போன்ற இசைவல்லார்கூட இந்தச் சமயத்தில் கிடையாது. டம்பக்காரர்களும் வேஷக் காரர்களும் ஆயிரக்கணக்காக இருக்கிறார்கள்.

இவ்வாறு கலைப் பஞ்சம் தோன்றியிருப்பதன் முகாந்திரம் என்ன என்பதைப் பற்றிச் சிறிது ஆராய்ச்சி புரிவோம். உண்மையான கலை தோன்ற வேண்டுமானால் அது இருவகையாகத் தோன்று மென்பதாக மெஸீனி (Mazzini) என்னும் இத்தா லிய ஞானி கூறுகிறார். அதாவது, "ஒரு வகைப் பட்ட காலசகம் முடிவு பெற்ற போதிலும், ஒரு வகைப்பட்ட காலசகம் வருந்தறுவாயிலும் உண்மை யான கலைத்திகழ்ச்சி ஏற்படுகின்றது" என்றார். இதை ஒருவிதமாக உண்மையெனக் கொள்ளலாம். பொதுவாகக் கூறுவோமாயின், ஒரு தேசத்து ஜனங்கள் மெய்யான உற்சாகமும் வீரத் தன்மை யும் புகழும் கொண்டிருக்கும்போது அங்கே பெரிய கலையெழுச்சி ஏற்படுகின்றது. அழிவுக் காலங்களி லேயும், தாழ்ச்சிக் காலங்களிலேயும் இடையிடையே ஜனங்கள் தாழ் நிலையைச் சபிக்கும் பொருட்டு மஹான்கள் தோன்றுவார்களே யல்லாமல் கலையின் வளர்ச்சி ஏற்படமாட்டாது.

தமிழர்களாகிய நமக்குள்ளே ஆண்மை போய் விட்டது. வீரியம் போய்விட்டது. நமக்குத் தேசம் கிடையாது; ராஜ்யம் கிடையாது; சுயாதீனம் கிடையாது. இந்த நிலைமையில் "ஸரஸ்வதி" இந்நாட்டிலே வந்து அவதரிப்பாளா?

# பாரதியார் நடத்திய பத்திரிகைகள்

பாரதியார் 1905-ல் சுதேசமித்திரனில் உதவி யாசிரியராக இருந்துகொண்டே **சக்கரவர்த்தினி** என்ற மாதப் பத்திரிகை ஒன்றை நடத்தி வந்தார். 1905 நவம்பர் மாதத்தில் வெளியான அதன் இதழி லிருந்து **வந்தேமாதரம்** என்ற கட்டுரை 28—12—1905 சுதேசமித்திரன் இதழில் வெளியிடப்பட்டிருக்கிறது. இப்பத்திரிகை எவ்வளவு காலம் நடைபெற்ற தென்று தெரியவில்லை. இதில் பாரதியாரால் எழுதப்பட்ட "வியாசங்களும் பாடல்களும் புது மணம் கமழ்ந்து யாவராலும் விரும்பப்பட்டன" என்று திரு எஸ். ஜி. இராமாநுஜலு நாயுடு **சென்று போன நாட்கள்** என்ற கட்டுரையில் குறிப்பிடுகிறார்.

1906-ல் **இந்தியா** என்ற வாரப் பத்திரிகை வரத் தொடங்கிவிட்டது. **இந்தியா** பத்திரிகையைப் பற்றி திரு இராமாநுஜலு நாயுடு கூறுவதாவது: "அந்தக் காலத்தில் பாரதியார் தீவிர தேச பக்தராயிருந்தார். எதிலும் நிதானத்தையே அனுசரித்து நின்ற ஸ்ரீமான் ஜீ. சுப்பிரமண்ய ஐயரின் கொள்கைகளில் பாரதியார் வேறுபட்டுப் பிரிந்து, **இந்தியா** என்ற தமிழ் வாரப் பத்திரிகையைத் தொடங்கி அதற்கு ஆசிரியராய் அமர்ந்தார். அந்தப் பத்திரிகையின் சொந்தக்காரர் வேறொருவராவர். பாரதியாரின்

தமிழ் நடை அது முதற்கொண்டு ஒரு புது வழியில் மாறியது. அதற்கு முன்னர் எவரும் அவ்வழியில் பத்திரிகை நடத்தவில்லை என்று சொல்லும் வாருக வெகு சிறப்புடனும் திறமையுடனும் எழுதிவரத் தொடங்கினர். சிறு சிறு பதங்களுடன் கூடிய ஒரு நவீன கம்பீர நடை. இந்தியா பத்திரிகை சனிக் கிழமை தோறும் வெளியாகி வந்தது. நாலாயிரம் பிரதிகள் வரை போய்க்கொண்டிருந்தது. ஒவ்வொரு பத்திரிகையிலும் அவ்வார வர்த்தமானத்தின் சார்பாய் ஒரு பெரிய சித்திரம் கண்ணுக்கினிய காட்சியாய் மிக்க அழகுடன் பிரசுரிக்கப்பட்டு வந்தது. அந்தப் படம் இன்னின்னவாறு இருக்க வேண்டுமென்று சித்ரீகருக்குப் பாரதியார் சொல்லுங்காலையில் அப்படத்தின் அம்சங்களை யெல்லாம் தமது முகத்திலும் அபிநயங்களிலும் காண்பித்து விடுவார். சித்திரீகரின் மனத்தில் அந்தப் பாவனைகள் நன்கு பதிந்து விடும். அவ் விதமே சித்திரமும் தயாராகும்.

"இந்தியா பத்திரிகை பிரபலப்பட்டபொழுது அது மிகவும் உக்கிர வாசகமுள்ளதாயிருந்தது. சிறிதும் அச்சமின்றி எழுதப்படலானது. அந்த அம்சம்தான் கடைசியில் அப்பத்திரிகைக்கு ஆபத் தாய் முடிந்தது. பத்திரிகை என்றைக்கும் நடக்கும் படியான ரீதியில் சாந்தமாய் சட்ட வரம்புக்கு உட் பட்டு நடக்கும்படி பல நண்பர்கள் கூறியும் பாரதி யாரின் எழுதுகோல் பழையபடியே இருந்தது. பத்திரிகைக்கு ஆபத்து நிச்சயமென்று பலர் கூறினர். ஒரு சமயம் பாரதியார் டிராம் வண்டியில்

செல்லுகையில் இந்தியா பத்திரிகையைப் படித்த ஒரு உத்தியோகஸ்தர் மிக்க கோபாவேசமாய் இப் பத்திரிகையின் ஆசிரியரை அவசியம் தண்டிக்க வேண்டுமென்று பாரதியாரிடம் கூறினர். பாரதியார், 'அப்படியா ?' என்றார். இந்த சம்பவத்திற்குப் பிறகு இந்தியா பத்திரிகை தனக்கென்று ஒரு புதுக் காரியாலயமும் அச்சுக் கூடமும் அமைத்துக் கொண்டு வேறாய் விட்டது. பத்திரிகையே வேறு கை மாறினும் அதன் கொள்கை எப்போதும் போல் இருக்கும் என்று ஒரு தனிக் குறிப்பும் வெளியிடப் பட்டது.

இந்தியா பத்திரிகை வர வரக் 'கார'மாகி விட்டது. **சிவாஜி தன் சைநியத்தாருக்குக் கூறியது** என்று அகவல் ரூபமாய் **பாஞ்சாலி சபதம்** போல் பெருங் காவியமாகத் தொடர்ச்சியாய்ப் பத்திரிகையில் எழுதி வந்தார். அது முற்றும் வீர ரஸமாய் இருந்தது. அதனைத் தனிப் புத்தக உருவமாய் வெளியிடுவதற்குப் பாரதியார் விரும்பினர். அது ஆபத்தென நண்பர்களால் தடுக்கப்பட்டது. **இந்தியா** பத்திரிகைக்குப் பாரதியார் அந்தரங்கத்தில் ஆசிரியராக இருந்தாரே யன்றி வெளிப்படையாய் அன்று. ஸ்ரீ. ஸ்ரீனிவாசன் என்பவர் ஆசிரியரும் பிரசுரிப்பவருமென்று பத்திரிகைகளில் வெளி வந்து கொண்டிருந்தது. பாரதியார் ஒரு நிருப நேயர் போன்று இந்தியா பத்திரிகையில் பாடல்களை மட்டும் தமது பெயருடன் வெளியிட்டு வந்தார்.

" அவ்வப்போது நடந்தேறிய சம்பவங்களுக் கெல்லாம் சிறு சிறு பாடல்களை இந்தியா பத்திரிகை

யில் தமது பெயருடன் வெளியிடுவதானர். வந்தே மாதர கீதத்திற்கு, 'இனிய நீர்ப் பெருக்கினை இன் கனி வளத்தினை' என்று தமிழ் மொழி பெயர்ப்பு ஒன்றும் வெளியிட்டார். அப்பாடல்களின் மூலமாக மட்டும் அவர் பெயரைத் தமிழ் நாட்டினர் அறிந்து வந்தனர்.

"இந்தியா பத்திரிகைக்குப் பாரதி ஆசிரிய ரென்று எவருமே அறியார். பாரதியாருக்குத் தமிழ் நாட்டிலிருந்த பெயர் இவ்வளவுதான். சென்னையி லுள்ளார் மட்டும், அதிலும் சில முக்கியஸ்தர்கள் மட்டும் உண்மையை உணர்ந்திருந்தனர். தமது பாடல்களை யெல்லாம் ஒன்று சேர்த்து **ஸ்வதேச கீதங்கள்** என்று இரண்டணா விலையில் ஒரு புத்தக மாக வெளியிட்டார். அதைக் குறித்து இந்தியா பத்திரிகையில், 'சுப்பிரமணிய பாரதியாரின் பாடல் கள் அடங்கிய **ஸ்வதேச கீதங்கள்** வரப் பெற்றோம்' என்று தம்மை அந்நியர் போலக் கொண்டு அதற்கு ஒரு மதிப்புரையும் வரைந்தார்.

"பாரதியின் இந்தியா பத்திரிகை சட்ட வரம்பை மீறி நெருப்பு மழை பொழியத் தொடங் கிற்று. இது பாரதியாரைப் பிடித்த கெட்ட காலம் தான். இந்தியா பத்திரிகையின் ஆசிரியரைக் கைது செய்ய வாரண்டும் பிறந்தது. போலீசார் இந்தியா பத்திரிகையின் காரியாலயத்துள் பிரவேசித்து பாரதியாருக்கு வாரண்டைக் காண்பித்தனர். தாம் ஆசிரியரல்ல வென்றும், தமது பெயர் வாரண்டில் இல்லை யென்றும் கூறிக்கொண்டிருக்கையில் இந்தியா பத்திரிகையை வெளியிடுபவரான ஸ்ரீனி

வாசன் என்பவர் அங்குற்று, 'என்ன' என்றார். போலீசார் அவரே ஆசிரியராகப் பதிவு செய்யப் பெற்றவரென்று அறிந்து அவரைக் கைது செய்த னர் விசாரணைக் காலத்தில் ஸ்ரீநிவாசன் தாம் ஆசிரியரல்லவென்றும், பாரதியாரே உண்மை ஆசிரியரென்றும், தாம் ஒரு குமாஸ்தா போலவே இருந்து வந்ததாயும், தமக்கு வியாசம் எழுதச் சக்தி கூடக் கிடையாதென்றும் தெரிவித்துக்கொண்டார். ஆயினும் அவருக்கு ஐந்து வருஷ கடின காவல் விதிக்கப்பட்டது. பாரதியாருக்கும் வாரண்டு பிறந் தது. அதற்குத் தப்பிப் பாரதியார் புதுச்சேரி போய்ச் சேர்ந்தார்.

"இது சம்பந்தமாகச் சுதேசமித்திரன் 16–11—1908-ல் துணை யங்கத்தில் பின் வருமாறு குறிப்பிடப்பட்டிருந்தது. 'சென்னையிற் பிரசுரமாய் வந்த **இந்தியா** என்ற வாராந்தரத் தமிழ்ப் பத்திரிகை யில் சென்ற மார்ச்சு மாதம் முதல் ராஜத் துவேஷ மான வியாசங்கள் தோன்றி வருவதாக அதன் பேரில் ராஜத் துவேஷக் குற்றஞ்சாட்டி அதை அச்சிட்டுப் பிரசுரப்படுத்துவோரான ஸ்ரீநிவாசய் யங்காரைக் கைதிப்படுத்தி விசாரணை செய்ததில், ஐகோர்ட்டில் அவருக்கு ஐந்து வருஷ தீபாந்திர சிக்ஷை விதிக்கப்பட்டது. இப்படி விதிக்கப்படு மென்றே பொதுவாக எதிர்பார்க்கப் பட்டிருந்தது. ராஜத் துவேஷக் குற்றம் செய்ததாகக் கவர்மெண் டார் யாரை நினைக்கிறார்களோ அவர்களைப் பிடித்து விசாரணைக்குக் கொண்டு வருவதும், ஜட்ஜுகள் கொடுந் தண்டனை விதிப்பதும் இப்போது சாதாரண

மாய் விட்டது. குற்றஞ் செய்தவர்களைத் தண்டித்தல் அவசியம் என்று எல்லோரும் ஒப்புக்கொள்ளுவார்கள்; ஆனல் ராஜத் துவேஷக் குற்றஞ் செய்கிறவர்கள் படித்தவர்களாயும், கௌரவமான நிலைமையில் இருப்பவர்களாயும் இருப்பதால், அவர்களிடத்தில் கவர்ன்மெண்டாரும், ஜட்ஜிகளும் அவ்வளவு கொடுமை காட்டாமல் இருக்கக் கூடும். ஸ்ரீநிவாசையங்கார் குற்றமுள்ள வியாசங்களை எழுதினவரல்ல; எழுதினவரும், அந்தப் பேப்பருக்குச் சொந்தக்காரரும் அகப்படாமல் மறைந்துபோனர்கள். ஸ்ரீநிவாசையங்கார் பெயர் போலீஸ் கமிஷனர் ஆபீசில் பதிவு செய்யப்பட்டிருந்ததால் அவர் அகப்பட்டுக் கொண்டாரேயன்றி குற்றத்துக்கு முதல் உத்தரவாதம் அவர் பேரில் தங்கியதல்ல. இந்த ஒரு காரணத்தினலேயே அவருக்குக் கொடுந் தண்டனை விதிக்காமல் இலகுவான தண்டனை விதித்திருக்கக் கூடும். அல்லது இந்தியா பத்திரிகையில் ராஜத்துவேஷக் குற்றமுள்ள வியாசங்கள் தோன்றின துவக்கத்திலேயே கவர்ன்மெண்டார் எச்சரித்திருந்தார்களானல் இப்போது ஓடிப்போயிருக்கிற எடிடரும் புரொப்ரைட்டரும் அப்படிப்பட்ட வியாசங்கள் தோன்ற இடங் கொடுத்திருக்க மாட்டார்கள். அவைகளால் விளையும் தீங்கும் குறைந்திருக்கும்.

"தண்டனை யடைந்த ஸ்ரீநிவாசன் என்பவர் சிறையில் நன்னடக்கையுடன் நடந்து கொண்டாரென்று ஒரு வருஷத்திற்குப் பிறகு விடுவிக்கப் பட்டதாக வதந்தி. பாரதியார் சென்னையை விட்டுப்

போனதற்குப் பிறகு இந்தியா பத்திரிகையும் சென்னையில் நின்று விட்டது.”

திரு. எஸ். ஜி. இராமநுஜலு நாயுடு மேலும் தரும் விவரங்களாவன: “இந்தியா பத்திரிகையுடன் பால பாரதம் என்ற ஆங்கில வாரப் பத்திரிகையும் வெகு திறமையுடன் நடத்தினர்.”

புதுச்சேரியிலும் இந்தியா பத்திரிகை நின்று விட்ட பிறகு, “ஸ்ரீ அரவிந்தர் கர்மயோகின் என்ற பத்திரிகை நடத்துவதைப் பார்த்து அதன் கருத்துக் களைத் தமிழில் தெரிவிக்க கர்மயோகி என்ற மாதப் பத்திரிகையைப் பாரதியார் ஆரம்பித்தார். மிக்க நன்ருக நடந்தது. அதன் பின் விஜயா என்ற தினசரித் தமிழ்ப் பத்திரிகையைத் தொடங்கினர். அப் பத்திரிகை முற்றும் சித்திரங்கள் நிறைந் திருந்தன. அதுவும் எங்கும் வியாபகமாயிற்று. அதன் பின் படங்களைப் பிரசுரித்து அதன் விளக் கம் வரைந்து அவ்விதமாக ஒரு மாத சஞ்சிகையை வெளியிடுவதென்று ஏற்பாடு செய்தார். அந்தச் சமயத்தில் இந்தியா பத்திரிகை பறிமுதலாகி விடவே அவரது பத்திரிகா முயற்சிகளும் அத்துடன் நின்று விட்டன.”

சென்னையில் இந்தியா பத்திரிகை 34, பிராட்வே என்ற காரியாலயத்திலிருந்து வெளி வந்தது. ஸ்வதேச கீதங்கள் என்ற தமது நூலைப்பற்றி 9 செப்டம் பர் 1908 வரையில் சுதேசமித்திரனில் விளம்பரம் செய்திருக்கிருர். அதிலே அந்நூல் இந்தியா பத்திரிகை யின் மேலே குறிப்பிட்ட காரியாலயத்தில் கிடைக்கு மெனக் குறிப்பிட்டுள்ளார்.

இந்த விளம்பரத்திலிருந்து இந்தியா பத்திரிகை சென்னையில் எதுவரை நடந்தது என்பதை ஊகிக்க முடியும். 16 நவம்பர் 1908-ல் ஸ்ரீநிவாசய்யங்காருக்குத் தண்டனை கிடைத்த விவரம் வெளியாகியுள்ளது. ஆதலால் இந்த இரண்டு தேதிகளுக்கு இடையே ஒரு நாள் வரை இந்தியா பத்திரிகை சென்னையிலிருந்து தனது வீர முழக்கத்தைச் செய்து கொண்டிருந்தது.

இந்தியா பத்திரிகையின் சொந்தக்காரர் திரு. ந. திருமலாச்சாரியார். பாரதியார் புதுச்சேரி சேர்ந்த ஒரு மாத காலத்திற்குள் இவரும் அங்கு வந்து சேர்ந்தார். பத்திரிகையைப் புதுவையிலிருந்தே வெளியிடுவதென்று இருவரும் ஏற்பாடுகள் செய்தனர். "பிரெஞ்சுச் சட்டப்படி புதுவையில் ஒரு பத்திரிகை நடத்த வேண்டுமானால், அதற்குப் பொறுப்பாளியாகப் பிரெஞ்சு இந்தியக் குடி ஒருவர் இருந்தாக வேண்டும். வில்வநல்லூரில் வசித்து வந்த ஸ்ரீ எஸ். லக்ஷ்மிநாராயணையர் என்பவர் அந்தப் பொறுப்பை ஏற்க ஒப்புக் கொண்டார். ஸ்ரீ திருமலாச்சாரியார் சென்னையில் வைத்திருந்த அதே அச்சுக்கூடத்தின் சாமான்கள் புதுவை போய்ச் சேர்ந்தன. இந்தியா முன்னைவிட அருமையாய், நிர்ப்பயமாய், புதுவையிலிருந்து வெளிவரலாயிற்று" (தி. ஜ. ர., புதுமைக் கவி பாரதியார்)

"1908-ம் ஆண்டில் பாரதியார் இந்தியா பத்திரிகையைப் புதுவை மிஸியோம் எத்திரான் ழேர் வீதியிலிருந்து நடத்தி வந்தார். 1910-ம் ஆண்டில் அச்சுக்கூடத்தை டூப்ளே வீதிக்கு மாற்றிக்கொண்டார்"

(பாரதியாரின் புதுவை வாழ்வு என்ற கட்டுரையில் திரு ரா. கனகலிங்கம்)

ஆனல் இந்தியா நீண்ட நாள் தொடர்ந்து நடைபெறவில்லை. மக்களின் ஆதரவு புதுவைக்கு எட்டுவதில் உள்ள சிரமம், அதன் விளைவான பொருளாதார நெருக்கடி, அரசாங்கத்தாரின் கோபம் இவையெல்லாம் இதன் ஆயுளைக் குறைத்து விட்டன. பிரிட்டிஷ் இந்தியாவிற்குள் இப்பத்திரிகை வரக்கூடாதென்று 1909-ஆம் ஆண்டில் ஆங்கில அரசாங்கம் செய்த தடையே இதன் முடிவுக்கு முக்கிய காரணமாகும்.

# சென்னை வாசிகளின் நிதானமும் விபின சந்திரபாலரின் சந்நிதானமும்

18 மே 1907 *பிலவங்க வைகாசி 5*

சென்னை வாசிகளின் நிதானமெல்லாம் சந்திர பாலரின் சந்நிதானத்திலே பறந்து காற்றாய்ப் போய்விட்டது. நேற்று மாலை விக்டோரியா நகர மண்டபத்தில் லாலா லஜபதிராய் தீபாந்தரத்திற் கேற்றி அனுப்பப்பட்ட விஷயமாக மஹாஜன சபையாரால் கூட்டப்பெற்ற பெருங் கூட்டத்தில் நடந்த செய்திகளை நேரே வந்து கண்டவர்களெல் லாம் இனி மயிலாப்பூர் வக்கீல்கள் ஜனத் தலைவர்க ளென்று மூச்சுவிடக்கூட இடமில்லை யென்பதை நன்றாக அறிந்திருப்பார்கள்.

நேற்று மாலை மீட்டிங்கிலே முக்கியமாகக் கவனிக்க வேண்டிய விஷயங்கள் பின் வருவன வாகும் :—

1. இதுவரை பழைய கட்சிக்காரருக்கு முக்கிய தர்மமாக இருந்த விண்ணப்ப முறைமையை நேற்று அவர்கள் தாமாகவே பேதமையாகுமென்று நிறுத்தி விட்டனர்.

2. அப்படி அவர்கள் விண்ணப்பம் செய்ய விரும்பாதபோதிலும் வெறுமே இந்தியா மந்திரிக்கு

மீட்டிங்கைப்பற்றித் தகவல் கொடுக்க வேண்டு மென்று மிஸ்டர் பி. ஆர். சுந்தரய்யர் சொன்னதைக்கூட ஜனங்கள் அங்கீகரிக்காமல் கோபமடைந்தார்கள்.

3. மயிலாப்பூர் வக்கீல்கள் தாம் ஜனத் தலைவர்கள் என்று கனவு கண்டு கொண்டிருந்தது பொய்க் கனவென்பதை அறிந்து கொண்டார்கள்.

4. ஸர்க்காரிலே ஸர் என்றும் உர் என்றும் பட்டம் பெற்றுத் திரிந்தவர்களையெல்லாம் ஜனங்கள் மதிப்புடன் நடத்திய காலம் போய் இப்போது அவர்களைப் பகிரங்க ஸ்தானங்களிலே பேசவொட்டாத நிலைமைக்குக் கொண்டுவந்து விட்டார்கள்.

5. இங்கிலீஷிலே பேசக் கூடாது. தமிழ் நாட்டிலே ஜனத் தலைவர்கள் என்று பெயர் வைத்துக்கொண்டு வருவோர் பொது விஷயங்களைப் பற்றித் தமிழிலேயே பேசவேண்டுமென்று ஜனங்கள் வற்புறுத்தினார்கள்.

6. ஸர். வி. சி. தேசிகாச்சாரியாருக்கும் மிஸ்டர் பி. ஆர். சுந்தரய்யருக்கும் ஜனங்கள் சரியான பாடம் சொல்லிக் கொடுத்தார்கள். சென்னை மாணுக்கர்களிலே பெரும்பாலார் வெளியூருக்குச் சென்றிருந்தபடியால் பழைய கட்சியார் இம்மட்டோடு பிழைத்தார்கள். ஒரு வாரத்திற்குமுன் இந்தப் பொதுக் கூட்டம் நடந்திருக்குமானால் நமது மயிலாப்பூர் நண்பர்களின் ஸ்திதி இன்னும் வேடிக்கையாக முடிந்திருக்கும். லாலா லஜபதிராய் தீபாந்திரத்துக்குப் போனதைப்பற்றி ஜனங்கள் மனது கொதித்துக்கொண்டிருக்கும்போதுகூட இவர்கள்

சர்க்காராரை ஸஹஸ்ரநாமம் சொல்லி அர்ச்சனை செய்வதுதான் சரியான பாதை யென்று நினைப்பது விநோதமாயிருக்கிறது.

இவர்கள் என்ன நினைத்தாலும் சரியே. இனி அதைப் பகிரங்கமாக வெளியிட்டுக் கூறத் துணிய மாட்டார்கள் என்று நேற்றே தெளிவாய்விட்டது.

சி. சுப்ரமணிய பாரதி

குறிப்பு :— 1. விபின சந்திரபாலர் வங்காளத்து தேசிய வீரர் களில் ஒருவர். சிறந்த பேச்சாளர். இந்தியாவின் ஒரு கோடியி லிருந்து மற்றொரு கோடி வரையில் அந்தக் காலத்தில் அவரது பேச்சு ஒலித்தது. மக்கள் அதைக் கேட்டுப் புது உணர்ச்சி பெற்றனர். பகிஷ்காரம், சுதேசி, தேசியக் கல்வி என்ற விஷயங் களை அவர் உணர்ச்சியோடு மக்களுக்குப் போதித்தார். 1907-ல் அவர் சென்னையில் பேசிய பேச்சு மக்கள் மனத்தில் தேசிய நெருப்பை ஓங்கி வளர்த்தது. அதனல் சென்னை மாகாணத்தை விட்டு வெளியேறும்படி சர்க்கார் அவரை வலுக்கட்டாயப் படுத்தியது.

அவருடைய பேச்சும், நியூஇந்தியா, வந்தேமாதரம் என்ற பத்திரிகைகளில் அவர் எழுதிய கட்டுரைகளும் இளைஞர்களின் உள்ளத்தைப் பெரிதும் கவர்ந்தன. இதையே பாரதியார் இக்கட்டுரையில் குறிப்பாக எடுத்துக் கூறுகிறர்.

2. பஞ்சாப்சிங்கம் என்று போற்றப்பட்ட லாலா லஜபதி ராய் 1907 மே 9 ஆம் தேதி பர்மாவுக்கு நாடுகடத்தப்பட்டார். ஸர்தார் அஜித் சிங்கும் அவரோடு நாடு கடத்தப்பட்டவர். லாலா லஜபதியை நாடு கடத்தியதை ஒட்டியே விக்டோரியா நகர மண்ட பத்தில் கூட்டம் கூடியிருக்கிறது.

லாஜபத்ராய்துதி, லாஜபத்ராய் பிரலாபம் என்று பாரதியார் பாடியுள்ள இரண்டு அழகிய கவிதைகளும் இந்தத் தேசப் பிரஷ்டத்தைக் குறித்தே எழுந்தவை.

1907 டிசம்பர் 27ஆம் தேதி தொடங்கிய சூரத் காங்கிரசுக்குச் சற்று முன்பே லஜபதிராய் விடுதலையடைந்து நாடு திரும்பினர். அவரை அந்தக் காங்கிரசுக்குத் தலைவராக்க வேண்டுமென்று தேசியவாதிகள் விரும்பினர். ஆனால் அடங்கிய சுபாவமுள்ள லஜபதிராய் அந்தப் பெருமையை ஏற்றுக்கொள்ள இசையவில்லை. மிதவாதிகளும் தேசியவாதிகளும் மாறுபட்டு நின்ற சமயத்தில் தலைமை வகிக்க அவர் விரும்பவில்லை.

லஜபதி விடுதலையாகியிருந்தாலும் இரகசியப் போலீஸின் (சி. ஐ. டி.) கண்காணிப்பிலேயே இருந்து வந்தார். அதன் தொந்தரவு பொறுக்க முடியாமல் அவர் வெளி நாடுகளிலேயே இருக்க விரும்பினர். முதல் உலக யுத்தத்தின்போது அவர் எத்தனையோ இன்னல்களுக்கிடையில் மனம் சோராமல் அமெரிக்காவில் காலம் தள்ளினர். இந்தியாவுக்காக அவ்விடத்திலும் சேவை செய்வதையே அவர் நோக்கமாகக் கொண்டார். கடைசியில் பிரிட்டிஷ் ஆட்சியாளர் மனம் இளகி அனுமதி தந்ததன் பிறகு லஜபதி 1920 பிப்ரவரி 20-ஆம் தேதி இந்தியா திரும்பினர். அதே ஆண்டு செப்டம்பரில் கல்கத்தாவில் நடந்த விசேஷ காங்கிரசுக்கு அவர் தலைமை வகித்தார்.

லஜபதிக்குக் காந்தியடிகளின் ஒத்துழையாமை இபக்கத்தில் அவ்வளவு பற்றுதல் இல்லை. இருந்தாலும் அடிகள் போர் தொடங்கியவுடன் அதில் முக்கிய பங்கு கொள்ள அவர் தயங்கியதில்லை. இப் போரின் காரணமாக அவருக்கு ஒன்றரை

வருஷம் சிறைத் தண்டனை கிடைத்தது. சிறையிலே அவருக்குக் காச நோய் பற்றியது.

சைமன் கமிஷன் 1927-ல் ஏற்பட்டதும், அதைப் பகிஷ்கரிப்பதெனக் காங்கிரசு முடிவு செய்தது. 1928 அக்டோபர் 30-ஆம் தேதி இக் கமிஷன் லாகூருக்கு வந்தபோது அதை வரவேற்கப் பொது மக்கள் யாருமே இல்லை. "சைமனே திரும்பிப் போ" என்ற கோஷமிடவும், கறுப்புக் கொடி பிடிக்கவுமே அவர்கள் பல்லாயிரக் கணக்கில் திரண்டார்கள். பஞ்சாப் சிங்கம் காந்தியடிகளின் சாந்த மொழியைக் கடைப் பிடித்து அமைதியாய்க் கூட்டத்தின் முன்னணியிலே காட்சி அளித்தார். போலீசார் தடிகொண்டு தாக்கத் தொடங்கினர். அந்தச் சிங்கத்தையும் அடித்தார்கள். போலீஸ் சூபரின்டென்டெண்டு ஸ்காட் இரண்டு அடி அடித்தான். மேலும் எங்கிருந்தோ இரண்டடி; ஒன்று நெஞ்சின் மேலே. அந்த அடிகளின் காரணமாகவே அவர் அகால மரணமடைந்தார். போலீஸ் தடி கொண்டு தாக்கியபோது அவர் வீராவேசத்துடன், "தேசத் தொண்டர்களை அடிக்கும் ஒவ்வொரு அடியும் இந்தியாவில் பிரிட்டிஷ் ஏகாதிபத்தியத்தின் சவப் பெட்டியை மூடுவதற்கு அடிக்கப் படும் ஓர் ஆணியாகும்" என்று முழங்கினர்.

# திருவல்லிக்கேணி சுதேசிய கிருஹியம்

17 டிசம்பர் 1907 *பிலவங்க மார்கழி 2*

சூரத்தில் நடக்கிற காங்கிரசுக்கு நாங்கள் எல்லோரும் இவ்விடமிருந்து நாளது டிசம்பர் மாதம் 20-ஆந் தேதி வெள்ளிக் கிழமை மாலையில் ரிசர்வ் வண்டிகள் மூலமாய்ச் செல்லுகிறபடியால் இந்த ராஜதானியிலிருந்து காங்கிரசுக்குச் செல்லும் பிரதிநிதி (டெலிகேட்ஸ்)களும் பார்ப்பவர்களும் (விசிட்டர்ஸ்) இது பார்த்தவுடன் அவர்கள் புறப் படும் விவரத்தைத் திருவல்லிக்கேணி துளசிங்கப் பெருமாள் கோயில் தெரு 87-வது நம்பர் சுதேசிய கிருஹத்தாருக்குத் தெரிவிக்கும்படிக்கும் நாளது மாதம் 20-ஆம் தேதி காலையில் மேற்படி கிருஹத் திற்கு வந்து சேரும்படிக்கும் கேட்டுக்கொள்ளு கிறோம்.

சி. சுப்பிரமணிய பாரதி

# காங்கிரஸ் நாஷனலிஸ்டு டெலி கேட்டுகளுக்கு நோட்டீஸ்

19 டிசம்பர் 1907 *பிலவங்க மார்கழி 4*

இதற்கு முந்திய நோட்டீஸ் 17ந் தேதி மித்திரனில் போட்டதிலிருந்து அனேக நாஷனலிஸ்டு டெலி கேட்டுகள் சென்னைக்கு சனிக்கிழமையன்று வந்து அன்று சாயந்திரமே சூரத்துக்குப் புறப்பட்டுப் போகக்கூடுமென்று தெரிவித்திருக்கிறார்கள். ஆகையால் இந்த மாகாணத்திலிருந்து போகும் நாஷனலிஸ்டு டெலிகேட்டுகளுக்கு நாம் தெரிவிக்கிறதென்னவென்றால் நாம் காங்கிரசுக்கு இரண்டு பிரிவாகப் போகவேண்டியிருக்கிறது. அதாவது நாளை 20-ம் தேதி சாயந்திரம் போகிறவர்கள் ஒரு பிரிவு, 21ம் தேதி சாயந்திரம் போகிறவர்கள் மற்றொரு பிரிவு. டெலிகேட்டுகளோ விஸிட்டர்களோ தங்களுடைய விருப்பத்தை 87, துளசிங்கப் பெருமாள் கோவில் தெரு, திருவல்லிக்கேணி, சென்னை சுதேச கிருஹத்திற்குத் தெரிவித்தால் எந்தப் பிரிவோரும் போகலாம்.

சி. சுப்பிரமணிய பாரதி.
சுதேசக்கிருஹம்

குறிப்பு :—இந்த இரண்டு அறிக்கைகளிலிருந்து சூரத் காங்கிரசுக்குத் தமிழ்நாட்டு டெலிகேட்டுகளை அழைத்துச் செல்வதில் பாரதி

யார் உற்சாகமாக முனைந்து நின்றிருக்கிறார் என அறியலாம். தேச விடுதலைப் போரிலே சூரத் காங்கிரஸ் குறிப்பிடத்தக்க ஒரு கட்டம். காங்கிரசிற்குள்ளேயே மிதவாதிகள் என்றும் தேசிய வாதிகள் என்றும் இரண்டு கட்சிக்காரர்கள் தோன்றினர். மித வாதிகள் பழைய விண்ணப்பமுறை, வேண்டுகோள் முறையையே பின்பற்ற விரும்பினார்கள். இவர்களைத்தான் பாரதியார் பழைய கட்சியார் என்று அழைக்கிறார். இவர்களுக்குக் கோகலே போன் றோர் தலைவர்கள். தேசியவாதிகள் தீவிரமான கொள்கைகளை அனுசரிக்கவேண்டுமென்று விரும்பியவர்கள். இவர்களுக்கு லோகமான்ய பாலகங்காதர திலகர் தலைவர். 1896 முதற் கொண்டே அவர் காங்கிரசில் கண்டிப்பான முறைகளைப் புகுத்த முயன்றுவந்தார். 1906 ல் நடந்த கல்கத்தா காங்கிரசிலேயே மிதவாதிகளுக்கும் தேசியவாதிகளுக்குமிடையே கருத்து வேறு பாடுகள் வெளிப்படையாகத் தோன்றலாயின. ஆனால் அதில் தலைமை வகித்த தாதாபாய் நௌரோஜியின் திறமையால் அவை ஒருவாறு சமாளிக்கப்பட்டன. 1907 ல் இவ்வேறுபாடுகள் இன் னும் வலுவடையவே நாகபுரியில் நடைபெறவேண்டிய காங்கிரசை மிதவாதிகள் சூரத்திற்கு மாற்றினர். சூரத்திற்கு மாற்றுவதால் தங்கள் விருப்பம்போல் காரியங்களைச் சாதித்துக்கொள்ளலாம் என்று மிதவாதிகள் கருதியிருப்பதாகத் தேசியவாதிகள் அவர் கள் மேல் குற்றம் சாட்டினர்.

ஆனால் 1907 டிசம்பர் 27 க் தேதி தொடங்கிய சூரத் காங்கிர சில் மிதவாதிகளின் விருப்பம்போல் எல்லாம் நடைபெறவில்லை. ராஷ்பிகாரிகோஷைத் தலைவராகப் பிரேரேபணை செய்தது முதல் காங்கிரசில் ஒரே குழப்பம்தான். அதனால் மேற்கொண்டு அன்று ஒன்றும் செய்யமுடியாமல் அடுத்தநாள்வரை நடவடிக்கைகளைத் தள்ளிவைத்தார்கள். அடுத்தநாள் நிலைமை இன்னும் மோசமாகி விட்டது. தலைவர் அனுமதி கொடுக்காவிட்டாலும் தமக்குப் பேச உரிமையுண்டென்று திலகர் மேடைமீதேறினர். கூச்சலும் குழப் பமும் ஓங்கின. மிதவாதிகளின் தலைவர்களில் ஒருவரான சுரேந் திரநாத் பானர்ஜியை நோக்கி யாரோ செருப்பை வீசினார்கள். நாற்காலிகள் தாராளமாகப் பறந்தன. தடியெடுத்தார்கள் சிலர். இவ்வாறு அன்றும் காங்கிரசு கலகத்தில் முடிவாயிற்று.

தேசபக்தி உணர்ச்சி மிகுந்த பாரதியாரின் உள்ளப்போக்கை இந்தக் காங்கிரசு மிகவும் மாறுதலடையச் செய்திருக்கவேண்டும். திலகரின் தரிசனமும், அவருடைய வீரக்கனலும் நமது கவிஞரை முற்றிலும் கவர்ந்துவிட்டன என்று துணிந்து கூறலாம். விபின சந்திரபாலரின் வீராவேசப் பேச்சுக்களும் பாரதியாரை ஒரு தேசியக் கவியாக மாற்ற உதவியிருக்கின்றன.

"ஸ்வராஜ்யம் எனது பிறப்புரிமை; நான் அதைப்பெற்றே தீருவேன்" என்று கர்ஜனை செய்த திலகரிடம் பாரதியாருக்கிருந்த மிகுந்த பக்தியை அவர் இயற்றிய, **வாழ்க திலகன் நாமம், லோகமான்ய பாலகங்காதர திலகர்** என்ற இரு பாடல்களிலிருந்தும் அறிந்துகொள்ளலாம். பின்னைய பாட்டு திரு. எம். வி. ஈசுவர ஐயர் 1908 ல் வெளியிட்ட **ஸ்ரீ திலகரின் ஜீவிய சரிதம்** என்ற நூலில் வந்தது.

அதேபோல மிதவாதிகளின் கொள்கை பாரதியாருக்குச் சம்மதமில்லை என்பதை **கோக்கலே சாமியார் பாடல், மேத்தார் திலகருக்குச் சொல்லுவது, நிதானக்கட்சியார் சுதேசியத்தைப் பழித்தல்** முதலிய பாடல்களிலிருந்து தெரியலாம்.

## ஸ்வதேச கீதங்கள்

இத்தலைப்புடன் வெளி வந்த நூலை பாரதியாரின் முதல் நூலாகக் கொள்ளலாம். பலரும் எழுதிய தேசபக்திப் பாடல்களைத் தொகுத்து வெளியிட விரும்பி அது குறித்து 13-2-1906-ல் சுதேசமித்திரனில் விண்ணப்பம் விடுத்து அநேகமாக ஏமாற்றமடைந்த பாரதியார் தாமே இயற்றிய சிறந்த தேசபக்திப் பாடல்கள் அடங்கிய இந்நூலை 1908ஆம் ஆண்டின் தொடக்கத்திலேயே வெளியிட்டிருக்கிறார். இந்நூலின் முகவுரை பாரதியாரால் 10 ஜனவரி 1908-ல் எழுதப் பெற்றிருக்கிறது. இது பற்றி முதல் விளம்பரம் 22-1-1908-ல் மித்திரனில் வெளி வந்ததிலிருந்து இப் பாடல்களெல்லாம் 1907ஆம் அதற்கு முன்பும் எழுதப்பட்டவை என்று தெரியலாம். இந்நூலின் விலை இரண்டணுவாக இருந்தது.

இந்நூலில் இடம் பெற்றிருந்த பாடல்களாவன :—

1. வந்தே மாதரம்
2. வந்தே மாதரம்
3. நாட்டு வணக்கம்
4. எங்கள் நாடு
5. நடிப்புச் சுதேசிகள்
6. தொண்டு செய்யும் அடிமை
7. மேத்தா திலகருக்குச் சொல்வது
8. லாஜபத்ராய் துதி
9. லாஜ பத்ராய் பிரலாபம்

10. தாதா:பாய் நவுரோஜி
11. பூபேந்திர விஜயம்
12. சுதந்திரப் பெருமை
13. மாஜினியின் பிரதிக்கினே
14. புது வருஷம்

1907-1908-ல் பாரதியார் எழுதி வெளியிட்ட வேறு நூல்களாவன. "ஸ்ரீதிலகர் 1907-ம் வருஷத்தில் புதிய கக்ஷியைத் தழுவிப் பிரசங்கங்கள் செய்ய, அதில் முதல் பிரசங்கத்தைப் **புதிய கட்சியின் கோட்பாடுகள்** என்ற பெயருடன் நூல்வடிவமாக ஆங்கிலமும் தமிழுமாய் ஒரு அணு விலையில் வெளியிட்டார்............சூரத்தில் நடந்த காங்கிரசுக்குப் பாரதியாரும் சென்றிருந்தார். சூரத்தில் காங்கிரஸ் பிளவுபட்டது. பாரதியார் தாம் சென்னையிலிருந்து பிரயாணப்பட்டது முதல் மறுபடியும் சென்னை வந்து சேர்ந்த வரையில் நடந்த விஷயங்களைக் கோவையாகத் தொகுத்து இந்தியா பத்திரிகையில் வெளியிட்டு **எங்கள் காங்கிரஸ் யாத்திரை** என்று ஒரு புத்தகமாகவும் இரண்டணு விலையில் பிரசுரம் செய்தார். ஒவ்வொன்றும் புதுச்சுவை, புது நடை, புதிய அழகு கொண்டு இலங்கின" (திரு. எஸ். ஜி. இராமநுஜலு நாயுடு-சென்று போன நாட்கள்.)

# ஜன்ம பூமி

1909-ல் ஸ்வதேச கீதங்களின் இரண்டாம்பாக மாக **ஜன்மபூமி** என்ற நூல் வெளியாயிற்று. அதன் முகவுரையிலே பாரதியார் தேசபக்தி என்னும் புதிய மார்க்கத்தால் உள்ளக் கிளர்ச்சி பெற்றுத் தாம் அப்பாடல்களைப் பாடியதாகக் கூறுகிறார். மேலும் அவர் எழுதுவதாவது: "சென்ற வருஷம் சில கவிதை மலர் புனைந்து மாதாவின் திருவடிக்குப் புனைந்தேன். நான் எதிர் பாராத வண்ணமாக மெய்த் தொண்டர்கள் பலர் 'இம்மலர்கள் நல்லன' என்று பாராட்டி மகிழ்ச்சி யறிவித்தார்கள். மாதா வும் அதனை அங்கீகாரம் செய்து கொண்டாள். இத ஞல் துணிவு மிகுதியுறப் பெற்றேனாகி, மறுபடியும் தாயின் பத மலர்க்குச் சில புதிய மலர்கள் கொணர்ந்திருக்கிறேன். இவை மாதாவின் திருவுள் ளத்திற்கு மகிழ்ச்சி யளிக்கு மென்றே நினைக்கின் றேன். 'குழலினிது யாழினி தென்பர் தம் மக்கள் மழலைச் சொற் கேளாதவர்' என்பது வேத மாதலின்."

இந்நூலில் இடம் பெற்றிருந்த பாடல்களா வன:—

1. ஜாதீய கீதம் (வந்தே மாதர கீதத்தின் முதல் மொழி பெயர்ப்பு.)

2. ஜய பாரத!

3. பாரத தேவியின் திருத்தசாங்கம்

4. மாதாவின் துவஜம்
5. எங்கள் தாய்
6. தொண்டு செய்யும் அடிமை
7. நிதானக்கட்சியார் சுதேசியத்தைப் பழித்தல்
8. ஆங்கிலேயன் ஒரு தேச பக்தனுக்குக் கூறுவது
9. தேசபக்தன் ஆங்கிலேயனுக்குக் கூறும் மறுமொழி
10. பாரத தேவியின் அடிமை
11. அபேதாநந்த ஸ்வாமிகளின் மீது ஸ்தோத்திரக் கவிகள்
12. சுதந்திரப் பெருமை
13. சுதந்திர தாகம்
14. சுதந்திரப் பள்ளு
15. சுதந்திர தேவியின் துதி
16. ஸ்ரீ கிருஷ்ண ஸ்தோத்திரம்

"என்று தணியுமிந்த சுதந்திர தாகம்" என்று தொடங்கும் ஸ்ரீ கிருஷ்ண ஸ்தோத்திரம், இந்தியா பத்திரிகையில் வெளி வந்த போது அதுவும் பாரதியார் மீது அரசாங்கம் கோபம் கொள்ளக் காரணமாக இருந்தது என்று ஸ்ரீ வ. ரா. குறிப்பிடுகிறார். (மகாகவி பாரதியார் பக். 33.)

மேலே குறிக்கப்பட்டுள்ள பாடல்களில் சிலவற்றிற்கு ஜன்மபூமியில் வேறு தலைப்புக்கள் கொடுக்கப் பட்டிருந்தது குறிப்பிடத்தக்கது. ஏழாம் பாடலுக்கு 'நிதானக்கட்சியார் கூட்டம்' என்பது தலைப்பு.

எட்டாம் பாடலுக்கு கலெக்டர் வின்ச் ஸ்ரீ சிதம்பரம் பிள்ளைக்குச் சொல்லுதல் என்பது தலைப்பு. இத்தலைப்புடன் பின் வரும் குறிப்பும் இப்பாடலுக்கு எழுதப் பட்டுள்ளது.

நந்தன் சரித்திரத்திலே ஆண்டை நந்தனுடைய சிதம்பர வாஞ்சையை மற்றப் பறையர்கள் வந்து சொல்லக் கேட்டு மஹா கோபங் கொண்டு நந்தனை நோக்கி, "சேரி முற்றுஞ் சிவபக்தி பண்ணும்படி விட்டையாம் அடியிட்டையாம்" என்பது முதலான வார்த்தைகள் கூறிப் பயமுறுத்துகிறான். அதன் குறிப்பைத் தழுவித் திருநெல்வேலி ஜில்லா கலெக்டராகிய வின்ச், ஸ்ரீ சிதம்பரம் பிள்ளைக்குக் கூறிய தாகப் பின்வரும் கண்ணிகள் எழுதப்பட்டுள்ளன.

ஒன்பதாவது பாடலுக்கு, **கலெக்டர் வின்சுக்கு ஸ்ரீ சிதம்பரம்பிள்ளை சொல்லிய மறுமொழி** என்பது பழைய தலைப்பு.

# ஞான ரதம்

தமிழுக்கே புதிதான ஓர் அழகிய உரைநடை யில் மிக அற்புதமாக இந்நூலைப் பாரதியார் 1910 ஆம் ஆண்டில் வெளியிட்டிருக்கிறார். இதற்கு எழுதிய முகவுரையில் புதுச்சேரி, ஸௌம்ய, தை, 15 (1901 ஜனவரி 28) என்று தேதி குறிக்கப்பட்டுள்ளது. இந்நூலைப் பற்றி திரு. எஸ். ஜி. இராமாநுஜலு நாயுடு சென்றுபோன நாட்கள் என்ற கட்டுரையில் கூறுவ தாவது: "ஞானரதம் என்ற தலைப் பெயருடன் தமிழ் நாடு என்றும் கண்டிராத துள்ளிக் குதிக்கும் ஒரு புதிய கந்தர்வ நடையில் இயற்கையின் அழகுகளைப் பற்றியும், தேசச் செய்திகளைப் பற்றியும், நெருங்கிய நண்பர்களின் மன மாறுபாடுகளைப் பற்றியும் அற் புதமான கல்பனையுடன் வாரந்தோறும் இந்தியாவில் எழுதி வந்தார். அவற்றை ஒருங்கு சேர்த்து ஞானரதம் என்று புத்தகமாக வெளியிட்டார். அதற்கு இணை யான நூல் தமிழ் மொழியில் இல்லை. சொற் சுவை பொருட் சுவை நிரம்பியது. பாச்சுவை பரவிய நடையால் அமைந்தது."

இந்நூல் சென்னையிலே தொடங்கப் பெற்றிருக் கிறது. திருவல்லிக்கேணியிலே வீரராகவ முதலி தெருவில் ஒரு மாலை நேரத்தில் பாரதியார் சிரம பரிகாரத்தின் பொருட்டு ஒரு மஞ்சத்தில் படுத்திருப் பதாக நூலின் பீடிகை தொடங்குகிறது. ஞான

ரதத்திலேறிப் பல உலகங்களுக்குப் பறந்து சென்ற அவர் தர்மலோகத்திலிருந்து தவறி விழுந்து மூர்ச்சை போட்டுப் பழைய திருவல்லிக்கேணி இல்லத்திலேயே கண் விழித்ததாக நூல் முடிகிறது.

# மாதர் வாசகம்

1910 நவம்பரில் பாரதியார் பாடல்களின் மற்றொரு தொகுப்பு நூல் வெளியாயிற்று. அதன் பெயர் மாதா வாசகம் என்றும், அது பாரதியாரின் மூன்றாவது கீத நூல் என்றும் திரு. எஸ். ஜி. இராமாநுஜலு நாயுடு குறிப்பிடுகிறார்.

இந்நூலில் இடம் பெற்றிருந்த சில பாடல்களாவன:

1. மகாசக்தி
2. மகா சக்திக்கு விண்ணப்பம்
3. காளிக்கு ஸமர்ப்பணம்
4. மஹாசக்திக்கு ஸமர்ப்பணம்
5. நான்
6. மனத்திற்குக் கட்டளை
7. தெளிவு
8. ஸ்வ சரிதை
9. ஜாதீய கீதம் (புதிய மொழிபெயர்ப்பு)
10. பாரதமாதா திருப்பள்ளி யெழுச்சி
11. கிருஷ்ணன் மீது ஸ்துதி

ஸ்வ சரிதை என்ற பகுதிக்கு முக்கியமாக ஏற்பட்ட முகவுரையிலே பாரதியார் கீழ்க்கண்டவாறு எழுதியுள்ளார்:—

"இச் சிறிய செய்யுள் நூல் விநோதார்த்தமாக எழுதப்பட்டது. ஒரு சில பாட்டுக்கள் இன்பமளிக்

கக் கூடியனவானாலும் பதர் மிகுதியாகக் கலந்திருக் கக்கூடும். இதன் இயல்பு தற்கூற்றெனப்படும். அதாவது கதாநாயகன் தன் சரிதையைத் தான் நேராகவே சொல்லும் நடை."

இது விநோதார்த்தமாக எழுதிய பாட்டலா அல்லது உண்மையான வாழ்க்கை நிகழ்ச்சியை வெளியிடுகின்றதா என்பதை ஆராயவேண்டும்.

"என்னை யின்றெனக் கைந்து பிராயத்தில்
ஏங்கவிட்டு விண்ணெய்திய தாய்"

என்ற வரிகளும்,

"நெல்லை யூர்சென்றவ் வூணர் கலைத்திறன்
நேருமாறெனை எந்தை பணித்தனன்"

என்ற வரிகளும் உண்மையான வாழ்க்கைச் சம்பவங்களைக் கூறுகின்றன.

ஆங்கிலக் கல்வியின் மேலும் பால்ய விவாகத்தின் மேலும் பாரதியாருக்கிருந்த வெறுப்பினையும் இப் பாடல்கள் உண்மையாக எடுத்துரைக்கின்றன. ஆனால் பாரதியாருக்கு அவருடைய பதினைந்தாம் வயதில் கல்யாணமாயிற்றென்று அவருடைய சரித்திரமெழுதியோர் கூறுகின்றனர். ஆனால்,

"ஈங்கொர் கன்னியைப் பன்னிரண்டாண்டினுள்
எந்தை வந்து மணம்புரி வித்தனன்"

என்று ஸ்வ சரிதை கூறுகின்றது.

# பாஞ்சாலி சபதம்

1912-ல் **பாஞ்சாலி சபதம்** முதற் பாகம் புதுச்சேரியிலுள்ள வித்யாபிவிர்த்தினி அச்சுக் கூடத்தில் பதிப்பிக்கப் பெற்றுள்ளது.

இந்நூலின் முகவுரையில் காணப்படும் கருத்துக்கள் தமிழில் புதிய இலக்கியம் எவ்வாறு உருவாக வேண்டும் என்று பாரதியார் விரும்பினர் என்பதை நன்கு காட்டுகின்றன. "எளிய பதங்கள், எளிய நடை, எளிதில் அறிந்து கொள்ளக்கூடிய சந்தம், பொது ஜனங்கள் விரும்பும் மெட்டு இவற்றினையுடைய காவியமொன்று தற்காலத்திலே செய்து தருவோன் நமது தாய் மொழிக்குப் புதிய உயிர் தருவோனுகின்றான். ஓரிரண்டு வருஷத்து நூற்பழக்கமுள்ள தமிழ் மக்களெல்லோருக்கும் நன்கு பொருள் விளங்கும்படி எழுதுவதுடன், காவியத்துக்குள்ள நயங்கள் குறைவு படாமலும் நடத்தல் வேண்டும்."

"காரியம் மிகப் பெரிது; எனது திறமை சிறிது. 'ஆசையால்' இதனை எழுதி வெளியிடுகின்றேன். பிறருக்கு ஆதர்சமாக அன்று, வழிகாட்டியாக."

திறமை சிறிது என்று அவர் அடக்கத்தோடு கூறிக் கொண்டாலும் எடுத்த காரியத்தை அற்புதமாக, ஓர் அம்சத்திலும் குறைவு நேரிடாதபடி வெற்றியோடு செய்து முடித்திருக்கிரு‌ா.

இந் நூலைப்பற்றி திரு. எஸ். ஜி. இராமாநுஜலு நாயுடு கூறுவதாவது: "அதன் பின்னர் பாஞ்சாலி சபதம் என்ற அரிய நூலை வெளியிட்டார். அதிலுள்ள ரஸத்தை என்னென்று புகழ்வேம்! அதற்கு அதுவே நிகர். அதை முதற் பாகமாகத்தான் வெளியிட்டார். இரண்டாம் பாகம் பார்க்கத் தமிழ் நாட்டிற்குப் பாக்கியமில்லை."

1921-ஆம் ஆண்டு வரை இந் நூலின் இரண்டாம் பாகம் வெளியாகவில்லை என்று அவர் கூறுவதிலிருந்து தெரிகிறது. இப்பொழுது பாஞ்சாலி சபதம் முழுவதும் இரண்டு பாகங்களாக நமக்குக் கிடைத்துள்ளது.

## மாதா மணி வாசகம்

1914-இல் இப்பெயருடன் தென்னுப்பிரிக்காவில் பாரதியாரின் நூல் ஒன்று வெளியாயிற்று என்று பாரதி நூல்கள் முதல் தொகுதியில் குறிப்பிடப் பட்டுள்ளது.

அந்நூலில் அடியிற்கண்ட பாடல்கள் வந்துள்ளன:—

1. சரஸ்வதி தேவியின் புகழ்
2. ஸூர்ய தர்சனம்
3. வெண்ணிலா
4. ஹே காளி!
5. மகா காளியின் புகழ்
6. மகா சக்தி பஞ்சகம்
7. மகா சக்தி வாழ்த்து
8. வெற்றி
9. அச்சமில்லை
10. சங்கு
11. அறிவே தெய்வம்
12. பரசிவ வெள்ளம்

# எதிர் ஜாமீன்

அல்லது

# மாப்பிள்ளை விலை

15 ஜூன் 1915 நள ஆனி 22

இது பாரதி நூல்கள், மூன்றாம் தொகுதியில் வந்துள்ளது.

ஆனால் அநேகமாகப் பாதிக் கட்டுரையாகிய பின் பாகம் அதில் இல்லை. ஆதலால் அப்பகுதியைத் தருவதோடு தொடர்ச்சியை எளிதில் அறிந்து கொள்ளும் பொருட்டு முன் பகுதியின் சுருக்கத்தையும் இங்கு தருகிறோம்.

முன் பகுதிச் சுருக்கம்: நம் நாட்டிலே வறுமை அதிகம். இந்த நிலையிலே நமக்குள்ளே பலர் பல விதமான இழிந்த காரியங்கள் செய்வது வியப்பில்லை. பிராமணருக்குள் விவாக காலங்களிலே எதிர் ஜாமீன் கேட்கும் வழக்கம் இருந்து வருகிறது. மாப்பிள்ளைகளுக்கு விலைத் தரங்கள் போட்டு இத்தனை ரூபாய் கிரயம் என்று முடிவு செய்து விவாகம் நடத்தும் வழக்கம் மானமுள்ள நாடுகளிலே இல்லை.

மாப்பிள்ளைகள் உயர்ந்த கிரயம் கொடுத்தால் ஒழிய அகப்படுவதில்லை. நாலைந்து பெண்களைப் பெற்று விட்டால் ஏழைகள் என்ன செய்வார்? திருநெல்வேலி ஜில்லாவிலே ஒரு கிராமத்திலே ஒரு பெண்ணுக்கு விவாகம் நடந்தபோது அவளுடைய பெற்றோர் மாப்பிள்ளைக்குப் பணம் கொடுத்தார்

கள். பிறகு ருதுசாந்தியின்போது அந்த மாப்பிள்ளை, "ஐந்நூறு ரூபாய் கொடுத்தால்தான் ருது சாந்தி செய்து கொள்ளுவேன். இல்லாவிட்டால் பெண் உங்கள் வீட்டோடே இருக்கட்டும்" என்று சொல்லி ஐந்நூறு ரூபாய் தண்டம் வாங்கிக் கொண்டான்.

வெளியாகாத பகுதி:—

இதுபோலவே சீமந்தத்துக்கும் கிரயம் வாங்கிக் கொண்டான். பிறகு அந்தப் பெண்ணை விலக்கி வைத்து விட்டு, வேறொரு பெண்ணை விவாகம் செய்து கொண்டு புது மாமனாரிடத்திலும் முன்னைப் போலவே 'பண வசூல்கள்' செய்து வருகிறான். பணம் கொடுக்க வழியில்லாத குடும்பத்தாரும் அவர்களைப் பார்த்துப் பரிதவிக்கும் சிலரும், இந்த விஷயத்தில் ஏதேனும் சீர்திருத்தம் செய்ய வேண்டும் என்று விரும்புகிறார்கள். கல்யாணமாகாமல் காலேஜிகளில் படிக்கும் பிரமசாரிப் பிள்ளைகள் தமக்குள் சபை கூடி இனிமேல் மாமனாரிடம் தண்டம் வாங்குவதில்லை என்று பிரதிக்கினை செய்து கொள்ள வேண்டுமென்று சிலர் சொல்லுகிறார்கள். பிள்ளையின் தகப்பனன்றோ பணம் வாங்குகிறான்? அதற்குப் பிள்ளை சபதம் செய்து கொண்டால் என்ன பிரயோஜனம்? நியாயத்திலே கூடத் தகப்பன் வார்த்தையை மீறி நடக்கும் பிள்ளைகள் நமது நாட்டிலே பலரில்லை. இதுவெல்லாம் வீண் வார்த்தை. பெண்களுக்கு விடுதலை யுண்டானால் ஒழிய விவாக சம்பந்தமான ஆயிரத்தெட்டு ஊழல்கள் நீங்க வழியில்லை.

# சித்தக் கடல்

1 ஜூலை 1915

2 ஜூலை 1915

பார்க்க: பாரதி நூல்கள்—இரண்டாம் தொகுதி.

பாரதியாரின் உள்ளத்தையும் உள்ளத்தில் குமுறிய ஆர்வத்தையும், அவருடைய புதுச்சேரி வாழ்க்கைத் துன்பத்தையும் ஒரு க்ஷணம் இங்கே காண்கிறோம். பராசக்தியிடம் அவர் கொண்டிருந்த ஆழ்ந்த பக்தியையும் இதில் உணரலாம்.

# கிச்சடி

**காளிதாஸன்**

19 ஜனவரி 1916 ராக்ஷஸ தை 6

சமீபத்திலே, பம்பாயில் கூடிய காங்கிரஸ் சபை, முஸ்லீம் சங்கம், முதலியவற்றில் நடந்த உபந்நியாசங்களை வாசித்துப் பார்த்தேன். பெரும் பாலும் ரஸமாகத்தான் இருந்தது. இவை போன்ற பிரசங்கங்களை யெல்லாம் தமிழில் தெளிவாக மொழி பெயர்த்து அப்போதைக்கப்போது குட்டிப் புத்த கங்கள் போட்டால் நல்லது. இந்த விஷயத்தில் ஸ்ரத்தை யெடுத்தால், தமிழ் நாட்டுக்கும் உபகாரம்; அவர்களுக்கும் நல்ல லாபமேற்படும். சபைகளிலே இரண்டு விதமுண்டு. சபை முடிந்தவுடனே செய்கை தொடங்குவதற்கு ஆகவேண்டிய விஷயங்களை முடிவு செய்யும் சபை ஒரு வகை. பொதுப்படையாக நியாய நிர்ணயங்கள் செய்து விட்டுக் கலையும் சபை மற்றொரு வகை. முதல் வகுப்பில் சேர்ந்த சபை களில் மேற்கோள் எடுத்துக் காட்டுதல் குறைவாக இருக்கும். இரண்டாவது வகுப்பு சபைகளில், அந்தப் பண்டிதர் இப்படிச் சொன்னார்; இந்தப் பண்டிதர் அப்படி எழுதி யிருக்கிறார் என்று மேற் கோள் வசனங்கள் மிகவும் அதிகமாக நடைபெறும். பம்பாயில் நடந்த சபைகள் பெரும்பாலும் மேற்படி இரண்டு லக்ஷணங்களும் சேர்ந்தவையாதலால்

அங்கே பழையவரும் புதியவருமாகிய இங்கிலீஷ் பண்டிதரின் வசனங்களை அடிக்கடி மேற்கோள் காட்டிப் பேசினார்கள். திருஷ்டாந்தமாக:—

"ஸ்வதந்திரமே மனிதரை ஸ்வதந்திரத்திற்குத் தகுதியாக்குகிறது" (அதாவது நீரிலே இறங்கித் தான் ஒருவன் நீச்சுப் படிக்க முடியும்; இல்லா விட்டால் முடியாது என்பதுபோல).

இந்த வாக்கியம் மகா கீர்த்தியுடன் நெடுங்காலம் இங்கிலாந்தில் முதல் மந்திரியாக இருந்த க்ளாட்ஸ் டன் என்பவர் சொல்லியது. நல்ல ராஜ்யத்தைக் காட்டிலும் ஸ்வராஜ்யம் நல்லது; இது கூறிய பானர் மான் என்பவரும் இங்கிலீஷ் முதல் மந்திரி ஸ்தா னம் வகித்தவரேயாம். ஸம்ஸ்கிருதம் முதலிய புராதன பாஷைகள் படித்த வைதிகப் பண்டிதர் களைப் போலவே, நமது தேசத்தில் இங்கிலீஷ் படித்த வித்வான்களும் பெரும்பான்மையாகப் புத்த கப் பழக்கம் அதிகமாகவும் லௌகிகப் பழக்கம் குறைவாகவும் வைத்துக் கொண்டிருக்கிறார்கள். எல்லாம் நாளடைவில் சீர்படுமென்று நம்புகிறேன்.

ஒகோ! இந்த மேற்கோள் சங்கதி எடுத்ததி லிருந்து என்னையும் இன்று அந்தக் குணம் பல மாகப் பிடித்துக் கொண்டது.

லார்ட் ஹால்டேன் என்று ஒரு இங்கிலீஷ் மந்திரி இப்போது பென்ஷன் வாங்கிக் கொண்டி ருக்கிறார். இவர் நல்ல மேதாவி. இவர் சொல்லு கிறார்:—

"இந்த யுத்தம் முடிந்தவுடனே ஜனாதிகாரம் வந்து நம் முன்னே நிற்கும். (அதாவது பொது

ஜனங்கள் கையிலே அதிகாரம் வந்து தங்கும்) நம்முடைய யஜமான்கள் பொது ஜனங்கள் நம் மீது அதிகாரம் செலுத்த வருமுன்பாகவே அவர்களுக்குக் கல்வி கற்றுக் கொடுப்பதற்கு நம்மால் இயன்ற அளவு பாடுபட வேண்டும்.'' பள்ளிக்கூடம் என்ற வார்த்தை எடுத்ததிலிருந்து ஆஸ்திரேலியா தேசத்துப் பெண் பள்ளிக்கூடம் ஒன்றைப் பற்றிய கதை ஞாபகத்துக்கு வருகிறது. அதில் வாசித்துக் கொண்டிருந்த ஒரு ஆஸ்திரேலியப் பெண்ணை இன்ஸ்பெக்டர் வந்து பரீக்ஷை நடத்தியபோது பின்வரும் கேள்வி கேட்டாராம்:—

இந்தியா தேசத்து ஜனங்களின் சாதாரண போஜனம் எது?

அந்தப் பெண் சொல்லிய மறுமொழி:—''பஞ்சம்.'' வேடிக்கையான கதை.

கல்வி சம்பந்தமாக இன்னுமொரு மேற்கோள்: இன்று கிச்சடியே ''மேற்கோள் கிச்சடி'' தானே? மிஸ்டர் ஆர்ச்செர் என்ற ஒரு ஆங்கிலேயர் சில தினங்களின் முன்பு லண்டன் பத்திரிகை யொன்றில் கல்வியைப் பற்றி எழுதிக்கொண்டு வரும்போது, ''இங்கிலாந்திலே இப்போது கல்விக்கு மூலாதாரமாக வசன காவியங்களையும், செய்யுட் காவியங்களையும், வைத்திருப்பது சரியில்லை. ஸையன்ஸ் (இயற்கை நூல்) படிப்புத்தான் மூலாதாரமாக நிற்கவேண்டும்'' என்கிறார்.

இவருடைய கொள்கை பலவித ஆக்ஷேபங்களுக்கிடமானது. ஆனல், தனிப் பள்ளிக்கூடங்கள்

எந்த முறைமையை அனுசரித்த போதிலும், ராஜாங்கப் பள்ளிக்கூடத்தார் இவருடைய கொள்கையைத் தழுவியே படிப்பு நடத்த வேண்டுமென்று நான் நினைக்கிறேன். கற்பனையும் அலங்காரமும் எனக்குக்கூட மிகவும் பிரியந்தான். ஆனால், "நெல் எப்படி விளைகிறது?" என்பதைக் கற்றுக் கொடுக்காமல், "அன்மொழித் தொகையாவது யாது?" என்று படிப்புச் சொல்லிக் கொடுப்பதை நினைக்கும் போது கொஞ்சம் சிரிப்புண்டாகிறது. அன்மொழித் தொகை சிலரைக் காப்பாற்றும், ஊர் முழுதையும் காப்பாற்றாது. நெல்லுந் தான் ஊர் முழுதையும் காப்பாற்றும். அன்மொழித் தொகையைத் தள்ளி விடவேண்டுமென்று நான் சொல்லவில்லை. ஆனால் அன்மொழித் தொகையைப் பயிர் செய்து நெல்லை மறந்துவிடுவது சரியான படிப்பில்லை யென்று சொல்லுகிறேன்; அவ்வளவுதான்.

## ஜப்பான் தொழிற் கல்வி

### சக்திதாஸன்

12 பிப்ரவரி 1916 ராக்ஷஸ தை 30

### சக்தி வேண்டும்

தெளிந்த அறிவும் இடைவிடாத முயற்சியும் இருந்தால் சக்தியுண்டாகும். தெளிந்த அறிவென்பது இரண்டு வகைப்படும் - ஆத்ம ஞானம் லௌகிக ஞானம் என. ஆத்ம ஞானத்தில் நமது ஜாதி சிறந்தது. லௌகிக ஞானத்தில் நம்மைக் காட்டிலும் வேறு பல தேசத்தார் மேன்மை யடைந்திருக்கிறார்கள். அப்படிப்பட்ட தேசங்களில் ஜப்பான் ஒன்று. புத்தகங்களாலும், பத்திரிகைகளாலும், யாத்திரைகளாலும் நாம் ஜப்பான் விஷயங்களை நன்றாகத் தெரிந்து கொள்ளுதல் பயன்படும். கூடியவரை பிள்ளைகளை ஜப்பானுக்கு அனுப்பிப் பலவிதமான தொழில்களும் சாஸ்திரங்களும் கற்றுக் கொண்டு வரும்படி செய்வதே பிரதான உபாயமாகும். தொழிற் கல்வியிலும் லௌகிக சாஸ்திரப் பயிற்சியிலும் நாம் மற்ற ஜாதியாருக்கு ஸமானமாக முயலுதல் அவசரத்திலும் அவசரம்.

தஞ்சாவூர் ஜில்லாவிலிருந்து ஒரு தமிழ் வாலிபர் சில வருஷங்களாக ஜப்பானிலே போய் நூல் நூற்றல், துணி நெய்தல், சாய மேற்றுதல் முதலிய தொழில்கள் படித்துக் கொண்டிருக்கிறார்.

இங்கிருந்து புறப்படு முன்பாக அந்தப் பிள்ளை வெகு சாதாரணராக இருந்தார். அங்கே போய் மூன்று, நான்கு வருஷங்கள் வாசம் செய்ததிலிருந்து அவருக்கு ஏற்பட்டிருக்கும் அறிவுப் பயிற்சி, ஊக்கம், தைரியம், ஸ்வஜனாபிமானம் முதலிய குணங்கள் வியக்கும்படியாக இருக்கின்றன. திருஷ்டாந்தமாக, சில தினங்களின் முன்பு அவர் இங்குள்ள தமது தமையனுருக்கு ஒரு கடிதம் எழுதியிருந்தார். அந்தக் கடிதம் எனக்கு வாசித்துக் காட்டப்பட்டது. மிகவும் ரஸமாக யிருந்தபடியால் அதன் ஸாராம்சங்களை இந்தப் பத்திரிகை படிப்பவருக்குத் தெரிவிக்கிறேன்.

ஜப்பானில் தொழிற் கல்வி பழகும் ஒரு தமிழ் வாலிபர் தம்முடைய தமையனுருக்கு எழுதிய கடிதத்தின் ஸாரம்சங்கள் :—

அண்ணாவுக்கு நமஸ்காரம் :

சாயத்தொழில் விஷயமாக ஏற்கனவே கேட்ட பாடங்களை அனுபவத்தில் சோதனை செய்து வருகிறோம். மிகவும் துரிதமாக வேலை நடந்து வருகிறது. சாயமருந்துகள், மாதிரித் துணிகள் முதலிய சாமான்களெல்லாம் போதுமான அளவு சேகரஞ் செய்துவிட்டேன். ஆனால் இன்னும் செய்யவேண்டிய காரியம் எவ்வளவோ இருக்கிறது. துணி சம்பந்தமான பரிபூரண ஞானம் ஏற்பட வேண்டுமானால், சாயம், (துணியில்) அச்சடித்தல், இரண்டிலும் இன்னும் பல பல சோதனைகள் செய்து பார்க்க வேண்டும். ராஜாங்க சர்வகலா சங்கத்து விவசாயக் கலாசாலையில் போய்ப் பட்டுப் பூச்சி வளர்க்கும்

தொழில் படிக்கவேண்டும். டோக்கியோ (ஜப்பான் ராஜதானி) நகரத்திலும், பக்கங்களிலும் உள்ள தொழிற்சாலைகள் எல்லாம் பார்த்தாய் விட்டது. வெளி நகரங்களுக்கு சீக்கிரத்தில் போய் வருவேன்.

நெசவு சம்பந்தமான பலவகைத் தொழில் களிலே நான் பாரத தேசத்திற்குத் திரும்பி வந்த பிறகு அங்கே என்ன தொழில் தொடங்கலாமென் பதைக் குறித்து இங்கிருந்து எவ்விதமான தீர் மானமும் செய்ய முடியாது. அங்கு வந்தபிறகு தான் பார்க்கவேண்டும். நமது நாட்டு முதலாளிகள் கொடுக்கும் உதவிக்குத் தகுந்தபடிதான் தொழில் செய்ய முடியும்.

ஒரு ஜப்பானிய சாஸ்திரியின் உபதேசம். இந்த விஷயமாக எனது கலாசாலைத் தலைவரிடம் ஆலோசனை செய்தேன். அவர் சொல்லிய தென்ன வென்றால்:

"நூற்புத் தொழிலுக்கு நல்ல முதல் போட்டுப் பெரிதாக நடத்தினால் தான் லாப முண்டாகும். வேலையும் ஸௌகரியமாக நடக்கும். நெசவுத் தொழில் அப்படியில்லை. அதிலே, சரக்கு நயத் துக்குத் தக்கபடி தொழிற்சாலையைப் பெரிதாகவோ சிறிதாகவோ தொடங்கி விடலாம். இந்தியாவிலே தொழிற் பண்டிதரும் கை தேர்ந்த தொழிலாளி களும் கிடைப்பது அருமையாதலால், ஆரம்பத் திலேயே நீராவி, மின்சாரம் முதலிய சக்திகளைக் கொண்டு வேலை தொடங்குதல் ஸௌகரியப் படாது. சேதமும், உற்பத்திக் குறைவும் அதிக மாக உண்டாகும். விசேஷமாகப் பட்டுத் தறிகள்

வைப்போர் இவ்விஷயத்தில் ஜாக்ரதையாக இருக்க வேண்டும்.

ஆரம்பத்திலே உயர்ந்த கைத்தறிகள் வைத்து மெல்லிய, சாதாரண, அல்லது கனமான எந்த மாதிரி வேண்டுமென்றாலும்—துணிகள் செய்து கொள்ளலாம். ஒருவருஷத்துப் பழக்கத்திலே தொழிலாளிகளுக்குப் போதுமான தேர்ச்சி யுண்டாய்விடும். இரண்டாவது அல்லது மூன்றாவது வருஷத்தில் சக்தி யந்திரம் (பவர்) உபயோகப் படுத்திக் கொள்ளலாம். ஜப்பானில் வந்து நெசவுத் தொழில் படிக்கும் ஹிந்து வாலிபர்கள் எங்களுடைய ராஜாங்கத் தொழிற்சாலையைப் பார்வையிட்டு வருவதுடன் சாதாரணத் தொழிற்சாலை யொன்றில் சேர்ந்து ஒரு வருஷம் வேலை செய்து பழகவேண்டும். அப்போதுதான் தறிகளுடைய 'ஆக்கம், பயன், ஆட்சி இவை நன்றாக மனதில் படியும்."

இங்ஙனம் ஷெ ஜப்பானிய சாஸ்திரி நெசவுத் தொழில் விஷயமாக மாத்திரமேயன்றி சாயத் தொழில் சம்பந்தமாகவும் எனக்கு நல்ல போதனைகள் சொன்னார். சாயத்தொழில் சொல்லிக் கொடுக்கும் வகுப்புகளிலே அன்னிய தேசத்துப் பிள்ளைகள் வந்து சேர்தல் இன்னும் சிறிது காலத்திற்குள் சிரமமாகிவிடும். ஆகையால் சீக்கிரத்திலேயே பல தமிழ்ப் பிள்ளைகள் இங்குவந்து மிகப் பயனுள்ளதாகிய இத் தொழில் பழகிக் கொண்டு போகும்படி செய்ய வேண்டும்.

இத் தொழில்களில் ஏதேனும் ஒரு சாகையிலே மட்டும் விசேஷ பாண்டித்யம் ஏற்படுத்திக்

கொள்ள முயற்சி செய்கிறேன். நான் இருக்கும் இடத்திற்கும் பள்ளிக்கூடத்துக்கும் $2\frac{1}{2}$மைல் தூரம் இருக்கிறது. நடந்துதான் போகிறேன். வண்டி யேறுவதில்லை. இடைப்பகல் ஆஹாரம் கையிலேயே கொண்டு போய் விடுகிறேன். சந்தோஷத்தோடு தான் இருக்கிறேன். என்னைப் பற்றிக் குடும்பத் தாருக்கு எவ்விதமான கவலையும் வேண்டியதில்லை.

### பிறந்த நாடு

நமது ஜாதியாருக்கும் தேசத்தாருக்கும் என் னாலே ஆனவரை ஊழியம் செய்ய வேண்டு மென்று விரதம் கொண்டிருக்கிறேன். செட்டுக் குடித்தனம், ஆனால் திருந்திய ஜீவனம் நமது ஜனங்களுக்கு அவசிய மென்று நினைக் கிறேன். நல்ல காற்று, நல்ல நீர், சுத்தமான, பயனுடைய, ருசியான தகுந்த அளவுள்ள ஆஹாரம், சுத்தமான உடை இவையெல்லாம் திருந்திய ஜீவனத்திற்கு லக்ஷணங்கள். இதற் கெல்லாம் படிப்பு அவசியம்................சோறில்லாமல் சோர்ந்து கிடக்கும் ஜனக் கூட்டத் தாருக்கு தர்மோப தேசங் கள் பண்ணுவதிலே எனக்கு ஸந்தோஷமில்லை. அது பாவ மென்பதை நான் அறிவேன். ஆனாலும், என்ன செய்வது? மனதிலிருப்பதைச் சொல்லித் தானே ஆகவேண்டும்? ஜனகோடிகள் படித்தா லொழிய நாகரிகப் படுவதற்கு வேறுவழியில்லை. நமது காங்கிரஸ் சபை விஷயத்தில் எனக்கு அஸூயை கிடையாது. ஆனாலும், அந்த சபையா ரிடம் எனக்குச் சிறிது அதிருப்தியுண்டு. அவர்கள்

ஒரு சார்பையே கவனித்துக் கொண்டிருக்கிறார்கள். முதலாவது ஆஹாரத்திற்கு வழிதேட வேண்டும். அதிகாரம் வேண்டுமென்று கேட்கிறார்கள். நியாயந்தான். அது கிடைக்கும் வரை பிழைத்திருக்க வேண்டுமே? உண்டாலன்றோ உயிரோடிருக்கலாம்? படிப்பு, கைத்தொழில் இவற்றை காங்கிரஸ் சபையார் போதுமானபடி கவனிப்பதாகத் தோன்றவில்லை. நமது ஜனங்களிலே பெரும்பாலோர் ஏழ்மையிலும் அறியாமையிலும் மூழ்கிக் கிடப்பதைக் கல்வியாளர் சும்மா பார்த்துக் கொண்டு ஒன்றும் செய்யாமலிருப்பது மடமையிலும் மடமை. கைத்தொழில் வளர்ச்சிக்காக உழைப்போரும் உண்மையான தேசபக்தரே யாவர்.

---

விக்தோர் ஹியூகோ என்ற பிரெஞ்ச் ஞானியின்

# வசனங்கள்

சக்திதாஸன்

24 *பிப்ரவரி* 1916 *ராக்ஷஸ மாசி* 12

பார்க்க: பாரதி நூல்கள்—மூன்றாம் தொகுதி

# பலி

**காளிதாஸன்**

8 மார்ச் 1916 *ராக்ஷஸ மாசி* 25

பல துளி பெருவெள்ளம். பல உயிர் பெருந் தெய்வம். தேசத்தின் மேன்மைக்குப் பலர் பல விதங்களிலே தொழில் செய்து வருவதைக் கண்டு ஸந்தோஷமுண்டாகிறது.

### ஸ்ரீமான் காந்தி

நமது தேசத்தார் ஆப்பிரிக்கா முதலிய வெளி நாடுகளுக்கு "ஒப்பந்தக்கூலி" க்காரராகப் போவதை எந்த விதத்திலும் தடுத்துவிட வேண்டு மென்று ஸ்ரீ காந்தி பாடுபடுகிறார். "ஒப்பந்தக் கூலி" யென்பது விலையடிமையைத் தவிர வேறொன்று மில்லை. இந்த விஷயம் நமது தேசத்துப் பண்டிதர்களுக்கும், செல்வர்களுக்கும் நெடுங் காலமாகத் தெரியும். ஆனாலும் ஆத்ம சக்திக் குறைவினால் இது வரை தடுக்க முடியவில்லை. லார்டு ஹார்டிஞ்ச் வைஸ்ராய் வேலையை விட்டுப் போகுமுன்பு, இந்த "ஒப்பந்தக் கூலி" கூடாதென்று சட்டஞ் செய்து விடவேண்டு மென்பதாக ஸ்ரீ காந்தி மன்றாடுகிறார். நமது தேசத்து மானஸ்தரெல்லோரும் இந்த விஷயத்தில் தத்தமக்கு இயன்றவரை முயற்சி செய்யும்படி வேண்டுகிறேன்.

### ஸ்ரீமதி மங்களம்மாள்

சென்னப் பட்டணத்தில் ஹைகோர்ட் ஜட்ஜ் ஸ்ரீ சதாசிவய்யருடைய புத்திரியாகிய ஸ்ரீமதி மங்களம்மாள் திருவல்லிக்கேணி ஸம்ஸ்கிருதப் பெண் பள்ளிக்கூடத்திலே சில தினங்களின் முன்பு செய்த உபந்யாஸத்தில் நம்மவர்கள் கவனிக்க வேண்டிய விஷயங்கள் பல இருக்கின்றன.

ஹிந்துக்களுடைய நாகரிகத்துக்குத் தலைமைக் களஞ்சியம் ஸம்ஸ்கிருத பாஷையாதலால் நமது நாட்டில் பாண்டித்யம் பெற்று விளங்க வேண்டுமென்ற எண்ணமுடைய எல்லோரும்—பிராமணரும், சூத்திரரும், ஆணும், பெண்ணும்—ஸம்ஸ்கிருத பாஷையில் தேர்ச்சி பெற முயலவேண்டுமென்று ஸ்வாமி விவேகானந்தர் சொல்லியிருக்கிறார். ஸ்ரீமதி மங்களம்மாளும் அதே கொள்கையையுடையவரென்று புலப்படுகிறது.

பிராம்மணர்களிலே ஸ்திரீகளுக்கு வேத மந்திரம் படிக்க அதிகாரம் கிடையாதென்ற வார்த்தையை ஸ்ரீமதி மங்களம்மாள் ஒப்புக் கொள்ளவில்லை. அந்த வார்த்தை இடைக் காலத்திலே ஏற்பட்டது. வேத மந்திரங்களிலேயே பல பெண்களால் எழுதப்பட்டன.

மேலும் விவாகம் செய்யும்போது பெண்ணுடைய இஷ்டத்தை மீறிச் செய்வது அநாகரிக வழக்கமென்பதை இவர் நன்றாக எடுத்துச் சொல்லியிருக்கிறார். "பெண்களாகிய நாம் ஆப்பிரிக்கா அடிமைகளில்லை. குடும்பத்து யஜமானிகள்'

என்று ஸ்ரீ மங்களம்மாள் சொல்லியதை எங்கள் வீட்டுப் பெண் குழந்தைக்கு வாசித்துக் காட்டினேன். குழந்தைக்கு ஸந்தோஷம் பொறுக்க முடியவில்லை. தனக்குத் தெரிந்த வீடுகளுக்கெல்லாம் போய் இந்த வார்த்தையை எல்லோரிடத்திலும் முழங்கிவிட்டுவர வேண்டுமென்று குழந்தை தீர்மானம் செய்திருக்கிறது.

### தமிழ்

தமிழ் நாட்டில் உண்மையான கல்வி பரவ வேண்டுமானால், சகல சாஸ்திரங்களும் தமிழ் பாஷை மூலமாகவே கற்றுக் கொடுக்க வேண்டுமென்ற கொள்கையை நமக்குள்ளே அறிவுடையோ ரெல்லோரும் கொண்டிருக்கிறார்கள். ஆனால் இதை அநுஸரணைக்குக் கொண்டு வருவதற்குத் தக்கபடி நமக்குள்ளே சக்தி பிறக்கவில்லை. ஐரோப்பிய ஸ்திரீயாகிய மிஸ்ஸஸ் பெஸண்ட் கூடச் சில தினங்களின் முன்பு பெங்களூரில் செய்த பிரசங்கமொன்றிலே தமிழ் பாஷையை மிகவும் வியந்து கூறி, நாமெல்லோரும் தமிழ்ப் பயிற்சியில் தக்கபடி சிரத்தை செலுத்தாமல் இருப்பது பற்றி வருத்தப்பட்டதாகத் தெரிகிறது. இப்படி நம்மைப் பார்த்துப் பிறர் இரக்கப்படும்படியான அவமான நிலை விரைவில் நீங்கவேண்டுமென்று தேவர்களை வணங்குகிறோம்.

### ஹிந்து மகம்மதிய ஒற்றுமை

இந்த விஷயத்தைப் பற்றி ஓங்கோல் என்ற ஊரில் வக்கீல் வேலை பார்க்கும் ஸ்ரீ நாராயண

சாஸ்திரி என்பவர் 'ஹிந்து' பத்திரிகைக்கு ஒரு கடிதம் எழுதி யிருக்கிறார். ஹிந்து—மகம்மதியருக் கிடையே பரஸ்பர மதிப்பும் அன்பும் அதிகப்படும் படி செய்வதற்கு அவர் சில வழிகள் குறிப்பிடுகிறார்.

அவற்றுள் முக்கியமானவை பின் வருமாறு:—

1. ஹிந்துக்களிலே சிலர் மஹம்மதிய வேத சாஸ்திரங்களைப் படித்து அவற்றிலே தேர்ச்சி பெறவேண்டும்.

2. அங்ஙனமே, மஹம்மதியர்களில் சிலர் ஸம்ஸ்கிருதம் படித்து ஹிந்துக்களுடைய வேத சாஸ்திரங்களை அறிந்து கொள்ள வேண்டும்.

3. ஹிந்துக்களுடைய மனத்திலே மஹம்மதியர் நமது தேசத்தார் என்பதும், இஷ்ட தேவதை வேறாக இருப்பதைப் பற்றி அவர்களை மிலேச்ச ரென்று நினைப்பதுகூடப் பிழை யென்பதும் நன்றாக ஞாபகமிருக்க வேண்டும்.

4. மஹம்மதியரும் அங்ஙனமே ஹிந்துக்களை காபிர் (அவிசுவாஸிகள்) என்று நினைப்பது பெரிய தவறென்று தெரிந்து கொள்ள வேண்டும்.

5. விவாகம் முதலிய சோபன காலங்களில் ஹிந்துக்கள் மஹம்மதியரையும், மஹம்மதியர் ஹிந்துக்களையும் அழைத்து உபசாரங்கள் செய்து தனியாக விருந்துகள் செய்து வைக்க வேண்டும். ஹிந்துக்களுக்குள்ளே ஜாதிக் கட்டுகள் இருப்பதைப் பற்றி மஹம்மதியர் அருவருப்புக் கொள்ளக்கூடாது

இங்ஙனம் ஸ்ரீ நாராயண சாஸ்திரி சொல்வதை நாட்டிலுள்ள ஹிந்து மஹம்மதியத் தலைவர்கள் கவ

ணித்து அந்தந்த இடங்களிலேயே இயன்ற வரை இருதிறத்தாருக்குள்ளேயும் ஸஹோதர உணர்ச்சி மேன்மேலும் பெருகி வருவதற்கு வேலை செய்தால் தேசத்துக்கு அளவிறந்த நன்மை யுண்டாகும்.

### தமிழ் நாட்டில் நாடகம்

தமிழ் நாட்டில் நாடகப் பாட்டுக்கள் நாள் தோறும் நூற்றுக்கணக்காக அதிகப்பட்டு வருகின்றன. ஆனால், இவற்றிலே தெளிவு, அறிவு வளம், கல்விப் பயிற்சி, சொல் நயம், ரஸ வொளி முதலிய லக்ஷணங்கள் கொஞ்சமேனும் காணப்படவில்லை. வண்டிக்காரன் பாட்டு, பாம்புப் பிடாரன் பாட்டு, குறத்திப் பாட்டு முதலிய பாமரப் பாட்டுக்களிலே இலக்கணப் பிழைகள் இருந்தபோதிலும் கவிதா ரஸம் அமைந்திருப்பது காண்கிறோம். இந்த நாடகப் பாட்டுக்கள் வெறும் பாமரமாக இருப்பதுடன் கவிதா ருசி அணுகூடக் கலக்காமல் பெரிய பீடையாக ஏற்பட்டிருக்கின்றன. மேலும் தமிழ்ப் பாஷையின் இயல்புக்குப் பொருந்தாத மெட்டுக்களில் நாடகக் காரருக்கு எப்படியோ பிரியமுண்டாகி யிருக்கிறது. "இதற்கெல்லாம் விமோசனம் என்ன?" என்று ஒரு தமிழ்க் கவிஞரிடம் கேள்வி போடப்பட்டது. அதற்கு அவர் சொல்லிய மறு மொழியை இங் கெழுதுகிறேன்.

"இந்த விஷயத்தில் நாடகக்காரரைக் குற்றஞ் சொல்வது நியாயமில்லை. பெரும்பாலும் நமது நாட்டில் ஏழை வாலிபர்கள் ஸங்கீதத்திலும் உல்லாஸத் திலும் பிரியமுடையவர்களாக இருக்கும்போது

ஜீவனத்துக்காகவும், சில சமயங்களில் உல்லாஸத்தின் பொருட்டாகவும் நாடகங்களிலே சேர்கிறார்கள். இவர்களுக்கு ஏராளமான பாட்டு வேண்டியிருக்கிறது. பழைய மெட்டுக்களும், அர்த்தம் தெரியாத கடுஞ் சொற்களும் இவர்களுக்கு அவசியமில்லை. 'தமிழ்ப் புலவர்'களிடம் போனால் நிகண்டுக்குக்கூட அர்த்தம் தட்டும்படியான வார்த்தைகள் எழுதிக் கொடுப்பார்கள். ஸாமான்ய பாஷையில் எழுதும் தொழில் புலவர்களுக்குத் தெரியாது; பெரும்பாலும் இவர்களுக்கு ஸங்கீதமும் தெரியாது.

"தீவிரமான தாள கதியும், மதுரமான இசையும் உடையதாய் நர்த்தனத்திற்கு உதவக் கூடிய பாட்டுக்கள் நாடகக்காரர்களுக்கு வேண்டும்.

"தவிரவும், தமிழ் சங்கீதம் பல வருஷங்களாகப் புதுமையும் உல்லாஸமும் இழந்து சோர்ந்து கிடக்கிறபடியால், நாடகக்காரரும் நாடகம் பார்க்கும் பொது ஜனங்களும், ஹிந்துஸ்தானி, பார்ஸி மெட்டுக்களையே விரும்புகிறார்கள். ஆகவே இப்படிப் பட்ட மெட்டுக்களுக்குச் சரியான பதங்கள் சேர்த்துக் கொடுப்போர் எவ்வளவு மூடர்களாக இருந்த போதிலும், அவர்களை நாடகக்காரர் ஆவலுடன் ஏற்றுக் கொள்ளும்படி நேரிடுகிறது. கவிதா ரஸங்களைப் பற்றி யோசனை செய்து கொண்டிருந்தால் அன்றன்றைக்கு நாடகம் நடக்கவேண்டுமே அதற்கென்ன செய்வது?............புதிய கவிதை புலவர்களிடம் தோன்ற வேண்டும். புதிய மெட்டுக்கள், தமிழ்நாட்டு சங்கீத வித்வான்கள் ஏற்படுத்த வேண்டும். அப்போது தமிழ் நெறிக்கு இசையாத பார்ஸி

மெட்டுக்களும், காதைத் தொளைக்கும் பாமரமான பத வரிசைகளும் நாடகத்தை விட்டு நீங்கும்.''

குறிப்பு:— பல ஆழ்ந்த கருத்துக்கள் இக்கட்டுரையிலே இடம் பெற்றிருக்கின்றன. 1916-ல் பாரதியார் வெளியிட்ட இக்கருத்துக்களில் பலவற்றை இன்று நாம் நடைமுறைக்குக் கொண்டுவந்தாலும் அவற்ருல் பெரிதும் நன்மை எற்படும்.

காந்தியடிகளைப் பற்றி முதல் முதலாக இக்கட்டுரையில் தான் பாரதியார் குறிப்பிடுகிருர் என்று கொள்ளலாம் என்று தோன்றுகிறது. அவரைப் பற்றிப் பாடியுள்ள **மஹாத்மா காந்தி பஞ்சகம்** என்ற அழகிய பாடல் பிற்காலத்திலே பாடப்பெற்றது. அந்தக் காலத்திலே அவர் மஹாத்மா என்று போற்றப்படவில்லை; அன்று அவர் வெறும் ஸ்ரீமான் காந்திதான்.

தாய் மொழியின் மூலமாகவே சகல சாஸ்திரங்களையும் கற்றுக் கொடுக்க வேண்டும்; அதுதான் உண்மையான கல்வி பரவுவதற்கு வழி என்பதைப் பாரதியார் அன்றே கூறியிருப்பதை இன்றுகூட நம்மவர்களிற் பெரும்பாலோர் உணர்ந்து கொள்ளாமலிருக்கிருர்கள்.

நாடகப் பாட்டு விஷயமாக அன்றிருந்த பிரச்சினை இன்றும் இருக்கின்றது. ஆனல் பெயர் மட்டும் மாறிவிட்டது. அதை இன்று சினிமாப்பாட்டு என்று கூறுகிறோம். பிரச்சினை ஒன்றே தான். இதுபற்றிப் பாரதியாருடைய கருத்துக்களை எல்லோரும் ஆழ்ந்து சிந்தித்துப் பார்க்க வேண்டும். முக்கியமாக சங்கீத வித்வான்கள் இதை நன்கு மனத்திற்கொண்டு கச்சேரிகளிலேயும், ரேடியோவிலும், பிற இடங்களிலும் திருப்பித் திருப்பி ஒரு பத்துப் பன்னிரண்டு பாட்டுக்களையே பாடிக்கொண்டிருக்காமல் புதுப் பாடல்களைப் பாடவேண்டும்; மக்களுக்குப் புரியும்படியாகவும் அவர்களுடைய உள்ளத்திலே சுலபத்தில் உணர்ச்சிகளை எழுப்ப உதவும்படியான தாய் மொழியிலும் பாடவேண்டும்.

# புதிய உயிர்

17 மார்ச் 1916 ராக்ஷஸ பங்குனி 5

"இவ்வுலகத்தில் மனிதனுக்கு ஏற்படக் கூடிய வலிமைகளை யெல்லாம் நான் எனக்கு உண்டாக்கிக் கொள்வேன். மனிதனுக்கு வசப்படக் கூடிய செல்வங்களை யெல்லாம் எனக்கு வசமாக்கிக் கொள் வேன்; மனிதனுக்கு விளையக் கூடிய அறிவுகளை யெல்லாம் என்னிடம் விளைவித்துக் கொள்வேன். மனிதனுக்குக் கிடைக்கக் கூடிய இன்பங்களை யெல் லாம் நான் தேடி யனுபவிப்பேன்; ஸர்வ சக்தி பெறுவேன்"

என்று மனத்திலே ஒரு நிச்சயம் ஏற்படுத்திக் கொள்ள வேண்டும். மாக்ஷிமை பெறுவதற்குத் தீராத விருப்பமும் துணிவுமே வழி. வேறுவழி யில்லை. ஒருவன் தெய்வ பக்தியுள்ளவனக யிருந் தாலும் அல்லது நாஸ்திகனுக இருந்தாலும் இந்த வழியை அனுசரிக்கலாம். நாஸ்திகன் அறியக் கடவது யாதெனில்;

இவ்வுலகம் நமது தாய் என்பது.

"உலகம் என்னிடம் பகைமை யுடைய வஸ்து வில்லை. உலக வனத்தில் நான் ஒரு மலர்.......உலகம் என் அறிவுக்கு வசப்படுவதை அனுபவத்திலே கண்டிருக்கிறேன். உலகம் என்னிடம் அன்பு பூண்டது". இந்தச் செய்தியை ஸாமான்ய

மதியுடைய எவனும் தன் உள்ளத்திலே பதியச் செய்து கொள்ளுதல் சிரமமில்லை. உலகம் நமக்குப் பிரதிகூலமாக இருந்தால், இங்கே மூன்று க்ஷணங்கள் கூட உயிருடன் வாழ முடியாது; “ ஆனல், உலகம் நமக்கு நோய் உண்டாக்குகிறதே. இறுதியில் நம்மைக் கொன்றுவிடுகிறதே; இதை நம்மிடம் அன்பு பூண்டதாக எங்ஙனம் சொல்லலாம்?” என்று சிலர் ஆக்ஷேபிக்கலாம்.

உலகம் நம்முடைய தாய். அது நமக்குத் துன்பங்கள் விளைவிக்கும்போது நமக்குப் பாடங்கள் கற்றுக் கொடுக்கிறது. மூடக் குழந்தையைத் தாய் அடிப்பது போலவும், கட்டி புறப்பட்ட சதையை ரண வைத்தியன் அறுத்தெறிவது போலவும், உலகம் நம்மைத் துன்பப்படுத்துகிறது. பெருந் துன்பமடைந்து அதனல் பரிசுத்த நிலை பெற்ற மேதாவிகள் எல்லோரும் இவ்வுண்மையைக் கண்டு கூறியிருக்கிறார்கள். திருஷ்டாந்தமாக, ஏழைத் தனம் பெரிய துன்பங்களிலே ஒன்றென்பது மனித ஜாதியின் பொது அநுபவம். எனினும் இதைக் குறித்து விக்டர் ஹ்யூகோ என்ற பிரான்ஸ் தேசத்து ஞானி யொருவர் பேசும் போது, “வறுமைத்தீயிலே ஸத்தில்லாத மனிதர் அழிந்து போகிறார்கள். ஸத்துடையவர்கள் பத்தரை மாற்றுத் தங்கம் போல் தேறிச் சுடர் வீசி மாண்பு பெறுகிறார்கள்” என்று குறிப்பிடுகிறார்.

நோயிலே செத்தவன் போக, அதிலிருந்து நன்றாகத் தேறியெழுந்தவன் அறிவிருந்தால் முன்னைக் காட்டிலும் தான் அதிக சுகநிலையில் இருப்பதை

உணர்ந்து கொள்வான். வெளிப்படையாகத் தோன்றும் நோய்க் குறிகள் எல்லாம் உடலுக்குள் இருக்கும் விஷத்தை வெளியேற்றிச் சுகந்தரும் பொருட்டாக இயற்கையால் செய்யப்படும் உபாயங்களே யாகுமென்று சிறந்த வைத்தியர்கள் சொல்லியிருக்கிறார்கள்.

ஸூக்ஷ்ம ஞானத்திலே நாட்டமில்லாத ஐரோப்பிய 'ஸயன்ஸ்'காரர்கூட அடியிலே பூச்சி நிலையிலிருந்து உயிர் மேன் மேலும் படிப் படியாக ஏறி மனித நிலை பெற்றிருப்பதை நோக்கும் போது உயிர்களை மேன்மைப் படுத்த வேண்டும் என்பதே இயற்கையின் உட்கருத்தென்பது தெளிவாகிற தென்று சொல்லுகிறார்கள். ஜந்துக்கள் செய்யும் போராட்டங்களும், அவைபடும் துன்பங்களும் அவற்றின் உயர்வுக்காகவே ஏற்படுத்தப் படுகின்றன என்பதையும் அங்கீகாரம் செய்து கொள்கிறார்கள். இங்ஙனம் நம்மை உயர்வுறச் செய்ய வேண்டும் என்ற நோக்க முடைய இயற்கைக்கு நாமும் அறிவுத் துணிவினாலே உதவிபுரிவோ மானால், அவ்வுயர்வு விரைவிலே கைகூடும்.

வீணாக அஞ்சுவதிலே பயனில்லை. இவ்வுலகம் நம்மிடம் கருணையுடையது என்பதை நாஸ்திகரும் ஒப்புக் கொள்ள வேண்டும். ஒப்புக் கொண்டால் அவர்களுக்கு நல்லது.

### தெய்வ பக்தி யுடையோர்

இனி, தெய்வ பக்தி யிருப்பதாக வாயினாலே சொல்லிக் கொண்டு, வெள்ளிக் கிழமை தோறும்

கோயிலுக்கு அபிஷேகம் பண்ணி வைப்பவர் களிலேயும் பெரும் பான்மையோர் உண்மையான பக்தி கொண்டவரில்லை. தெய்வ பக்தி உண்மையா பொய்யா என்பதை அறிந்து கொள்ள ஒரு சுலப மான வழியிருக்கிறது. தீராத தைரியம் இருக்கிறதா இல்லையா என்பதைப் பார்க்க வேண்டும். எதற்கும் அஞ்சாத தைரியமே உண்மையான தெய்வ பக்திக்கு லக்ஷணம். அஃதில்லாத பக்தி தேங்காய்க்கும் சர்க்கரைப் பொங்கலுக்கும் வீண் செலவு.

### தெய்வம் உண்டா?

தெய்வம் உண்டென்று நீ நம்புகிறாயா? உண் டானல் அது சர்வ சக்தியுடையது. அது என்னைப் படைத்தது. நானாக என்னை உண்டாக்கிக் கொள்ள வில்லை. அது என்னைக் காக்கின்றது. எனது செய்கையாலே நான்உயிர் பிறக்கவில்லை. அதையே சரணடைவேன். இனி எதற்கும் பயமில்லை. அதை நான் பரிபூர்ணமாகச் சரணடைந்தால் அதன் சக்திகளெல்லாம் என்னிடத்திலே தோன்றும். 'மேருவைச் சார்ந்த காக்கையும் பொன்னிறமடை யும்.' அதனல் அமரத் தன்மை பெறுவேன். இவ்விதமாக ஒருவன் மனத்தை உறுதி செய்து கொண்ட பிறகு அவ்வுறுதிக்கு இணங்கும்படி தன் செய்கைகளை யெல்லாம் மாற்றிக் கொள்ள வேண்டும்.

### அடிப்படை

முதலாவது, நோய் தீர்த்துக் கொள்ள வேண்டும். நோயுள்ள உடம்பு பயனில்லை. நோயை ஒருவன்

தனது மனோ பலத்தாலே நீக்கி விடலாம். நல்ல காற்று, நல்ல நீர், ஒளி, வெயில், இவற்றிலே உடம்பு பழகவேண்டும். நாள்தோறும் ஏதேனும் ஓர் காரியத்திலே உடல் வெயர்க்கும்படி உழைக்க வேண்டும். இது புதிய உயிர் கட்டுவதற்கு அடிப் படை.

### உணவு

இரண்டாவது, நல்ல உணவு தேடி உண்ண வேண்டும். சுத்தமாகவும் ருசியாகவும் வயிறு நிறைய உணவு கொள்ள வேண்டும். "மிகினும் குறையினும் நோய் செய்யும்." நமது தேசத்து ஜனங்களுக்கு உணவைக் குறைக்கும்படி உபதேசஞ் செய்தல் அவசியமில்லை. உணவுமிகுதி யால் நோய்ப்படும் கூட்டத்தார் நமது தேசத்தி லில்லை. உணவுக்குறைதான் இங்கே யிருக்கும் ஸங்கடம். ஹெர்பர்ட் ஸ்பென்ஸர் என்ற ஆங்கில சாஸ்திரி கல்வியைப் பற்றி ஒரு நூல் எழுதியிருக் கிறார். அதிலே குழந்தைகளுக்கு ஊண் மிகுதியால் உண்டாகும் நோய்களைக் காட்டிலும் ஊண்குறை வால் உண்டாகும் நோய்களே மிகவும் கொடியன என்று சொல்லுகிறார். ஊண்மிகுதிக்கு இயற்கை யிலே மாற்றுண்டு. ஊண்குறைவுக்கு மரணந்தான் மாற்று. "உண்டவன் உரஞ்செய்வான்." பரிசுத்த மான உணவுகளை நிறைய உண்ணுதல் வேண்டும். இனிய பழங்கள் நாள்தோறும் உண்ணத்தக்கன. உணவுக்குப் பணம் எந்த உபாயத்தாலேனும் தேடிக் கொள்ளவேண்டும். தேகத்திலே உழைப்பும் மனத்திலே தைரியமும் இருந்தால் பணந்தேடுவது

கஷ்டமில்லை. சோம்பேறியாக ஒருவன் நிறையப் பணத்தைக் குவித்து வைத்துக் கொண்டு அக்கம் பக்கத்து ஜனங்கள் பட்டினி கிடந்து சாவதைப் பார்த்துக் கொண்டிருப்பது மிகவும் கொடிய பாவம்.

### செல்வர் கடமை

நமது நாட்டுச் செல்வர்கள் இவ்விஷயத்தைக் கவனிக்க வேண்டும். உன் சொத்தை எல்லாருக்கும் பங்கிட்டுக் கொடுத்து விட்டு, நீ ஏழையாக வேண்டு மென்று நான் சொல்லவில்லை. கைத்தொழில்களும் வியாபாரங்களும் ஏற்படுத்தி அக்கம் பக்கத்தாரிடம் சரியானபடி வேலை வாங்கிக் கொண்டு சரியானபடி கூலிகொடு. உனக்கும் நல்ல லாபம் கிடைக்கும். கூலி குறையக் கொடுக்கும் முதலாளி லக்ஷ்மிதேவி யைக் காலால் உதைக்கிறான். அவன் மகன் தரித் திரத்திலும் நோயிலும் வருந்துவான் ஸகல ஜனங் களுக்கும் வயிறு நிறைய உணவு கிடைக்காத ஊரில் வாழும் செல்வர்களெல்லாம் திருடர். அங்கே குருக்க ளெல்லாம் பொய்யர். பண்டிதரெல்லாம் மூடர். மேன்மை நிலைபெற வேண்டுமானால் கைத்தொழில் கள் பெருகும்படி செய்ய வேண்டும். சாத்தியமில்லை யென்று சொல்லி ஏங்குவதிலே பயனில்லை. எப் படியேனும், எப்படியேனும், எப்படியேனும் செல் வத்தை வளர்க்க வேண்டும். மிச்சம் மற்றொரு முறை சொல்லுகிறேன்.

# உல்லாஸ சபை

## காளிதாஸன்

29 *மார்ச்* 1916 *ராக்ஷஸ பங்குனி* 17

**[ராக்ஷஸ வருஷம் பங்குனி மாதம் 10-ந் தேதி புதன்கிழமை யன்று மாலை வேதபுரம் உல்லாஸ சபையில் நடந்த செய்தி.]**

சபைக்கு வந்திருந்த பேர்:—

(1) ஜிந்தாமியான் ஸேட் (2) வெங்கட்டராவ் (3) குண்டு ராயர் (4) குமாரசாமி வாத்தியார் (5) எலிக்குஞ்சு செட்டியார் (6) காளிதாஸன் (7) மணவாளன் செட்டியார்.

வராத பேர்:—கோமதி நாயகம் பிள்ளை, மாரப்ப முதலியார்.

**எலிக்குஞ்சு செட்டியார்:**—இன்று சபாநாயகராக இருக்கும்படி காளிதாஸரை வேண்டுகிறேன்.

**காளிதாஸன்:**—எனக்குச் சம்மதமில்லை. வெங்கட்ராவைப் போடுங்கள்.

**எலிக்குஞ்சு செட்டியார்:**—காளிதாஸரே சபாநாயகராக வேண்டுமென்று வற்புறுத்திக் கேட்டுக் கொள்ளுகிறேன்.

**ஜிந்தாமியான் சேட்:**—எனக்கு அதுவே சம்மதம்.

**குமாரசாமி வாத்தியார்:**—எனக்கும் அப்படியே.

சபையாரின் பொது வேண்டுகோளின்படி காளிதாஸன் அக்கிராசனம் வகித்தார்.

**எலிக்குஞ்சு செட்டியார்:**—சபாநாயகரே, விவகாரம் ஆரம்பிக்கலாமா?

**சபாநாயகர்:**—அப்படியே செய்யலாம்.

**எலிக்குஞ்சு செட்டியார்:**—இந்தக் காளிதாஸரை நமது சபையைவிட்டு நீக்கிவிடவேண்டு மென்று நான் விரும்புகிறேன். இதைச் சபையார் அங்கீகாரம் செய்ய வேண்டும்.

**குமாரசாமி வாத்தியார்:**—ஏன் காணும், செட்டியாரே என்ன காரணம்?

**ஜிந்தாமியான் சேட்:**—செட்டியார் மனத்தில் இந்தக் கருத்திருக்கும்போது அவர் காளிதாஸரை இன்று சபாநாயகராக இருக்கும்படி கேட்டது கேலிதானே? நமது சபையில் இப்படி நாணயக் குறைவான கேலிகள் 'செய்வதைப் பார்த்தால் எனக்கு அருவருப்புண்டாகிறது.

**எலிக்குஞ்சு செட்டியார்:**—நாணயக் குறைவா? யாருக்குக் காணும் நாணயக் குறைவு? சாஹப், உம்முடைய மஹம்மதிய குணங்களை நம்மிடம் காட்ட வேண்டாம் தெரியுமா?

**ஜிந்தாமியான் சேட்:**-செட்டியாரே, அதிக வார்த்தை பேசிவிட்டீர். ஒரு தரம் பொறுத்தேன். ஹோஷ்யார்! (ஜாக்ரதை!)

**எலிக்குஞ்சு செட்டியார்:**—என்ன ஸாஹப், தாடியை உருவுகிறீரே, அடித்துப் போடுவீரோ?

**ஜிந்தாமியான் சேட்:**—ஹோஷ்யார்!

**எலிக்குஞ்சு செட்டியார்:**—நம்முடைய கடையிலே உம்மைப் போலவே நாலு முரடர் வேலைக்கு வைத்திருக்கிறேன். ஞாபகமிருக்கட்டும்.

**ஜிந்தாமியான் சேட்**:—ஹோஷ்யார்! ஹோஷ்யார்!

**எலிக்குஞ்சு செட்டியார்**:—என்ன காணும், வெகு பய முறுத்துகிறீரே. யாரென்று நினைத்தீர் நம்மை? (என்று சொல்லிக் கொண்டு எலிக்குஞ்சு செட்டியார் எழுந்து நின்று கையை ஓங்கினர்.)

சபையார் கலீரென்று சிரித்தார்கள். ஏனென்றால், எலிக்குஞ்சு செட்டியார் 4¾ அடி உயரம். ஜிந்தாமியான் ஸேட் 6¾ அடி உயரம். செட்டியார் 1¼ அடி அகலம். ஸேட் 3¼ அடி அகலம். செட்டியாருக்கு வயது 55. ஸேட்டுக்கு வயது 33.

இந்தச் சமயத்தில் காளிதாஸன் எழுந்து "உல்லாஸத்திற்கு ஒரு அளவிருக்கவேணும். வரை கடந்து போகலாகாது. செட்டியாரே உட்காரும்,.... என்னைச் சபையிலிருந்து நீக்க வேண்டும் என்று பிரேரணை செய்தீர். முகாந்தரங்கள் சொல்லும்" என்றார்.

**குமாரசாமி வாத்தியார்**:—ஆமாம், காரணம் சொல்லும். காரணம்

**எலிக்குஞ்சு செட்டியார்**:—நமது சபையின் காரியங்களை வாரந்தோறும் சென்னைப்பட்டணத்துப் பத்திரிகையில் பிரசுரம் செய்யும்படி நாம் காளிதாஸரை நியமித்தோம். அதன்படியே அவர் முதலாவது கூட்டத்து விவஹாரங்களைச் சுதேசமித்திரன் பத்திரிகைக்கு எழுதினர். அதற்கப்பால், நடந்த கூட்டங்களில் ஒன்றைப்பற்றியேனும் எழுதவில்லை. இன்று நடப்பது ஆறாவது அல்லது ஏழாவது கூட்டமென்று நினைக்கிறேன். இவர் இத்தனை அஜாக்கிரதையுடன் நமது சபையாருக்கு வாக்குத் தவறியது பற்றி

இவரை நீக்கிவிட வேண்டுமென்று சொல்லு கிறேன்.

**காளிதாஸன்:**—சபையார் என்னை மன்னிக்கவேண் டும். நமது சபை விவகாரங்கள் ரஸமாக இருக்கும் சமயங்களில் பத்திரிகைக்கு எழுதலாம். அப்படி விசேஷமொன்றும் சென்ற கூட்டங்களில் நடக்க வில்லை. ஆகையால் எழுதவில்லை.

**எலிக்குஞ்சு செட்டியார்:**—ரஸம், ரஸமில்லை. அதெல் லாம் நீர் சொல்ல வேண்டிய அவசியமில்லை. சபை யில் நடக்கும் விஷயங்களை நீர் அப்படியே எழுதி விட வேண்டும். பத்திரிகைக்காரர் போடாவிட்டால் நீர் ஜவாப்தாரி இல்லை.

(இங்ஙனம் சிறிது நேரம் வாதங்கள் நடந்தபின் கடைசியாக சபையார் செய்த முடிவு:—காளிதா ஸரை நீக்கிவிட வேண்டுமென்று செட்டியார் சொல் லியது பிழை. சபையில் என்ன நடந்த போதிலும் அதை அப்படியே காளிதாஸர் பத்திரிகைக்கு எழுதி விடவேண்டும். கொஞ்சங்கூட ரசமில்லாத வார்த்தைகள் ஒரு கூட்டத்தில் பேசப்பட்டதாகக் காளிதாஸருக்குத் தோன்றுமானால் அவர் சபையா ரிடம் அனுமதி பெற்றுக்கொண்டு எழுதாமலிருக்க லாம்).

**குமாரசாமி வாத்தியார்:**—மேலே விசாரணைகள் செய் வோம்.

**குண்டு ராயர்:**—பெல்ஜியம் தேசத்திலே எமீல் வெர் ஹேரன் (Emile Verhaeren) என்று ஒரு கவி இருக்கிறார். அவருடைய கவிதை புது வழியாக

இருக்கிறதென்று ஒரு பத்திரிகையில் வாசித்தேன். எப்படியென்றால், இதுவரை உலகத்துக் கவிகள் நமது நவீன நகரங்களிலேயுள்ள யந்திர ஆலைகள், மோட்டார் வண்டிகள் முதலிய வஸ்துக்களைத் தமது கவிதையிலே சேர்ப்பதில்லை. இந்த வஸ்துக்களிலே அழகில்லையாதலால் கவிதையிலே சேர்க்கத் தகாதன என்று நினைத்துக் கொண்டிருந்தார்கள். வானம், காற்று, நீர், வனம், மலை, பெண், செல்வம், மது, தெய்வம், தவம், குழந்தை முதலிய அழகுடைய வஸ்துக்களையே கவிகள் வர்ணிப்பது வழக்கம். எமீல் வெர் ஹேரன் என்பவருடைய கொள்கையாதென்றால்:—"வலிமையே அழகு. ஒரு பொருளின் வெளியுருவத்தைப் பார்த்து அது அழகா இல்லையா என்று தீர்மானம் செய்யலாகாது. யந்திரங்களிலே வலிமை நிகழ்கின்றது. ஆதலால் அவை அழகுடையன. அவற்றைக் கவி புகழ்ச்சி செய்தல் தகும்.

**காளிதாஸன்:**—வலிமை ஓர் அழகு. அழகு ஒரு வலிமை. யந்திர ஆலை, நீராவி வண்டி, நீராவிக் கப்பல், வானத்தேர், பெரிய பீரங்கி எல்லாம் அழகு தான். உயர்ந்த கவிகள் வலிமையுடைய பொருள்களை அவ்வக் காலத்தில் வழங்கிய வரையிலே வர்ணனை செய்துதான் இருக்கிறார்கள். இதிலே புதுமையொன்றுமில்லை. வலிமைக் கருவிகள் இப்போது சில புதுமையாகத் தோன்றியிருக்கின்றன. இவற்றை ஐரோப்பியக் கவிகள் விலக்கி வைத்தது பிழை. ஆனால் பழைய தெய்வத்தையும், இயற்கையையும் மறந்து யந்திரங்களைப் பாடத் தொடங்கினால் வி தை செத்துப் போய்விடும்.

**எலிக்குஞ்சு செட்டியார்:**—அது கிடக்கட்டும். நான் ஒரு கேள்வி கேட்கிறேன். அதை ஆலோசனை பண்ணுங்கள். காக்கைக்கு 100 வயதென்று சொல்லுகிறார்கள். அது வாஸ்தவமானால், தெய்வத்துக்குப் புத்தியில்லையென்று நான் சொல்லுகிறேன். காக்கைக்கும் 100 வயது, மனிதனுக்கும் 100 வயதா? அதிலேகூட மனிதனைவிடக் காக்கையின் வயது கொஞ்சம் அதிக நிச்சயமாகத் தோன்றுகிறது. இதென்ன படைப்பு?

**குமாரசாமி வாத்தியார்:**—எலிக்குஞ்சு செட்டியாரே, உமக்கு இப்போது வயசு 55 ஆகிறது. இதனால் என்ன பிரயோஜனம்? காக்கை ஊரிலுள்ள அசுத்தங்களையெல்லாம் நீக்கி இயன்றவரை வியாதிகளைக் குறைத்து மனிதருக்கும் மற்ற ஜந்துக்களுக்கும் நன்மை செய்கிறது. நீர் பை, பையாகப் பணத்தை உள்ளே போட்டு மூடி வைத்திருக்கிறீர். போன மாதம் ஒரு அவஸரத்துக்காக 50 ரூபாய் கடன் கேட்டேன். பொய் முகாந்தரம் சொல்லி மழுப்பி விட்டீர். உம்மால் யாருக்கென்ன பிரயோஜனம்?

**எலிக்குஞ்சு செட்டியார்:**—உம்மாலே உலகத்துக்கு என்ன நன்மை காணும், குமாரஸாமி வாத்தியாரே? அதை முதலாவது சொல்லும்............

இப்படி வார்த்தை சொல்லிக் கொண்டிருக்கும் போது, எலிக்குஞ்சு செட்டியார் வீட்டு வேலைக்காரன் ஒருவன் வாயில் நுரை தள்ளும்படி ஓடி வந்து, "ஐயா, நம்ம வீட்டு வைக்கோல் போரிலே நெருப்புப் பற்றிக் கொண்டு எரிகிறது" என்று சொன்னான்.

"நெருப்பா?" என்று செட்டியார் உடனே எழுந்து ஓடினர். சபையைக் கலைத்துவிட்டு நாங்களெல்லோரும் செட்டியாருக்கு உதவி செய்யம் பொருட்டு அவர் வீட்டுக்குப் போனேம். அங்கே போய்ப் பார்க்கும்போது..............அது மற்றெரு நாட் கதை. இன்று கதை இத்துடன் முடிகிறது.

குறிப்பு:—பாரதியாரின் நகைச் சுவையையும், நேருக்கு நேர் பேசுவது போன்ற உயிருள்ள வசன நடையையும் இம்மாதிரியான கட்டுரைகளிலே நன்கு காணலாம்.

எலிக்குஞ்சு செட்டியார், விளக்கெண்ணெய் செட்டியார், வெல்லச்சு செட்டியார், பிரமராய ஐயர் எல்லாம் பாரதியார் தமது புதுவை நண்பருக்குக் கொடுத்த செல்வப் பெயர்கள்.

# தமிழ்

சி. சுப்ரமணிய பாரதி

3 ஏப்ரில் 1916 ராக்ஷஸ பங்குனி 22

கல்கத்தாவிலிருந்து வெளிப்படும் 'மாடன் ரெவ்யூ' என்ற மாதப் பத்திரிகையின் தை—மாசி ஸஞ்சிகையை நேற்றுப் பொழுது போக்கின் பொருட்டாகத் திருப்பிப் பார்த்துக்கொண்டிருந்தேன். அதிலே திருநெல்வேலி ஹிந்து காலேஜ் சரித்திர பண்டிதர் ஸ்ரீ நீலகண்டையர் ஒரு சிறிய கடிதமெழுதியிருக்கிறார். ஏற்கனவே மேற்படி பத்திரிகையில் ஸ்ரீயதுநாத ஸர்க்கார் என்ற வித்வான் எழுதியிருந்த சில வார்த்தைகளைக் குறித்து ஸ்ரீ ஐயர் தமது கருத்துக்களை வெளியிடுகிறார்.

கலாசாலையிலே சரித்திரப் பாடங்களை இங்கிலீஷில் கற்றுக் கொடுப்பது பயனில்லாத வீண் தொல்லையாக முடிகிறதென்றும் தேச பாஷைகளிலே கற்றுக் கொடுத்தால் நல்ல பயன் விளையுமென்றும் ஸ்ரீ ஸர்க்கார் தமது அனுபவத்திலே கண்ட செய்தியைச் சொன்னார். அதற்கு நமது திருநெல்வேலிப் பண்டிதர் சொல்கிறார்:- "பாஷைத் தொல்லை பெருந் தொல்லையாகவே இருக்கிறது. ஆனால் எனது ஜில்லா, எனது காலேஜ் சம்பந்தப்பட்ட வரையிலே பிள்ளைகளுக்குச் சரித்திரப் பாடம் இங்கிலீஷிலே கற்றுக்கொடுப்பதைக் காட்டிலும்

தேச பாஷையில் கற்றுக் கொடுப்பது அதிக பயன் படுமென்று சொல்வதற்கில்லை. எனது மாணக்கர்களிலே பெரும்பாலோர் இங்கிலீஷ் இலக்கணப் பிழைகளும் வழக்குப் பிழைகளும் நிறையச் செய்த போதிலும் மொத்தத்திலே தமிழைக் காட்டிலும் இங்கிலீஷை நன்றாக எழுதுகிறார்கள். சரித்திர விஷயங்களை வியவஹரிக்கும்போது எனக்கும் இங்கிலீஷ்தான் தமிழைக் காட்டிலும் நன்றாகச் சொல்ல வருகிறது.''

இங்ஙனம் எழுதுகிற ஸ்ரீ நீலகண்டையரின் நிலைமையை நினைத்து நான் மிகவும் வருத்தப் படுகிறேன். சொந்த பாஷையை நேரே பேசத் தெரியாதவர்கள் சாஸ்திர பாடங்கள் நடத்தும் விநோதத்தை இந்தத் தேசத்திலேதான் பார்த்தோம். புதுமை! புதுமை !! புதுமை !!!

மேலும் இவர் தமக்குத் தாய் மொழி தெரியாதென்ற செய்தியை வங்கப் பத்திரிகைக்கு ஏன் எழுதப் போனார் என்பது எனக்கு அர்த்தமாகவில்லை. ஜப்பானியர், சீனர். நார்வேக்காரர், ஸ்விஸ் ஜாதியார், இத்தாலி தேசத்தார், ஹாலந்துக்காரர் முதலிய உலகத்து ஜாதியாரெல்லாம் நம்மை அறிவிலும் சாஸ்திரங்களிலும் பாஷைத் திறமையிலும் தாழ்வென்று நினைத்து வந்தார்கள். இப்போது தான் ஹிந்து ஜாதியாராகிய நாம் காட்டு மனிதரில்லை, வாலில்லாத குரங்குகளில்லை, நமக்குப் பாஷைகள் இருக்கின்றன; நமக்குள்ளே சாஸ்திர விற்பன்னர்கள் இருக்கிறார்கள்; கவிகள் இருக்கிறார்கள் என்று நம்மவரிலே சிலர் வெளியுலகத்

தார் தெரிந்துகொள்ளும்படி செய்து வருகிறார்கள். இதற்குள்ளே தமிழ் வகுப்பு மற்ற ஹிந்துஸ்தானத்து வகுப்புக்களைக் காட்டிலும் குறைவுபட்டதென்று நம்மிலே சிலர் முரசடிக்கத் தொடங்குவது எனக்கு நகைப்புண்டாக்குகிறது.

என்னுடைய சொந்த அபிப்பிராயத்தைக் கொஞ்சம் சொல்லிவிடுகிறேன்.

உலகத்திலுள்ள ஜாதியார்களிலே ஹிந்து ஜாதி அறிவுத் திறமையில் மேம்பட்டது. இந்த ஹிந்து ஜாதிக்குத் தமிழராகிய நாம் சிகரம் போல் விளங்குகிறோம். எனக்கு நாலைந்து பாஷைகளிலே பழக்கமுண்டு. இவற்றிலே தமிழைப் போல வலிமையும், திறமையும், உள்ளத் தொடர்பும் உடைய பாஷை வேறொன்றுமேயில்லை.

இந்த நிமிஷம் தமிழ் ஜாதியின் அறிவு, கீர்த்தி வெளியுலகத்திலே பரவாமல் இருப்பதை நான் அறிவேன். போன நிமிஷம் தமிழ் ஜாதியின் அறிவொளி சற்றே மங்கி யிருந்ததையும் நானறிவேன். ஆனால் போன நிமிஷம் போய்த் தொலைந்தது. இந்த நிமிஷம் ஸத்யமில்லை. நாளை வரப் போவது ஸத்யம். மிகவும் விரைவிலே தமிழின் ஒளி உலக முழுவதிலும் பரவாவிட்டால் என் பெயரை மாற்றி அழையுங்கள். அதுவரையில் இங்கு பண்டிதர்களாக இருப்போர் தமக்குத் தமிழ்ச் சொல் நேரே வராவிட்டால் வாயை மூடிக் கொண்டு வெறுமே இருக்க வேண்டும். தமிழைப் பிறர் இழிவாகக் கருதும்படியான வார்த்தைகள்

சொல்லாதிருக்க வேண்டும். இவ்வளவுதான் என்னுடைய வேண்டுகோள்.

குறிப்பு:—பாரதியாரின் அளவு கடந்த தாய் மொழிப் பக்திக்கு இக்கட்டுரை ஒரு சிறந்த எடுத்துக்காட்டு. தாழ்வு மனப்பான்மையுற்றுச் சோர்ந்து கிடந்த தமிழரைப் பாரதியார் இது போன்ற வசனங்களாலும், "யாமறிந்த மொழிகளிலே" என்று தொடங்குவது போன்ற பல பாடல்களாலும் தலை நிமிர்ந்து நிற்கச் செய்ததோடு தமிழினிடத்தே மிகுந்த பற்றும் பெருமையும் கொள்ளுமாறு செய்தார்.

# பெண்கள் சர்வகலா சங்கம்

சக்திதாஸன்

26 ஏப்ரில் 1916 நள சித்திரை 14

நமது தேசத்தில் இப்போது புதிதாக யோசனை செய்யப்படும் காரியங்களில் பூனாவில் ஸ்ரீ கார்வே என்பவர் ஏற்படுத்தப் போகிற ஸ்திரீகளின் சர்வ கலா சங்கம் பிரதான வகுப்பைச் சேர்ந்தது. இந்த முயற்சிக்குச் சர்க்காரின் உதவி கிடைத்தால் அதனை ஸ்ரீ கார்வே மிகவும் மகிழ்ச்சியுடன் பெற்றுக்கொள் ளக் காத்திருக்கிறார். அவ்வுதவி பின்னிட்டுத்தான் கிடைக்குமென்றால் அதுவரை தமது காரியத்தை இவர் நிறுத்திவைக்கப் போகிறதில்லை. ஜனங் களின் சஹாயத்தை மாத்திரமே வைத்துக் கொண்டு இந்தச் சர்வகலாசங்கத்தை ஸ்தாபனம் செய்து விடலாமென்ற நம்பிக்கை இவருடைய மனத்தில் பரிபூரணமாக ஏறியிருக்கிறது. ஆனால் இவர் ஒரு விஷயத்தை முன்யோசனை யில்லாமல் தொடங்கிப் பின்னிட்டு அதன் கஷ்டங்களுக்கு ஈடு கொடுக்க முடியாமல் இடைமுறிந்து போகும் தன்மையுடையவரல்ல. தம்மால் நிர்வகிக்க முடியாத காரியத்தைப் படபடத்த விருப்பத்தாலே கைக் கொள்ளக் கூடியவரல்ல. இவர் ஒன்றைத் தொடங்கி னால் அக்காரியம் தெய்வங்கள் எதிர்த்து நாசஞ் செய்தாலொழிய மனிதர் எதிர்ப்பினாலே நின்று

போய்விடாது. முதிர்ந்த அறிவு, வயது, அநுபவம் இவற்றினல் காரியசித்திக்குத் தகுதி பெற்றவர். வீண் படாடோபமும் ஆடம்பரமும் இல்லாதவர். உண்மையான தேசாபிமானி. அநாதைக் கைம் பெண்களுக்கு இவர் செய்திருக்கும் நிலையான உப காரம் நம்மவர்களால் மறக்கக் கூடியதன்று.

ஸ்திரீகளுக்கென்று தனியான யூனிவர்ஸிடி இதற்கு முன் பூமண்டலத்திலேயே இரண்டுதான் இருக்கின்றன. ஜெர்மனியில் லைப்ஜிக் பட்டணத் திலே ஒன்றிருக்கிறது. ஜப்பானில் ஒன்றேற்பட் டிருக்கிறது. பிரிட்டிஷ் சாம்ராஜ்யத்திலே இந்தக் காரியத்தை முதலாவது ஸ்ரீ கார்வேதான் ஆரம்பம் செய்கிறார்.

ஒரு காரியத்தைத் தொடங்குவோன் அதன் சம்பந்தமான விஷய நுட்பங்கள் தெரிந்தவனாகவும் விடாமுயற்சி யுடையவனாகவும் இருந்தால் அந்தக் காரியம் எப்படியும் கைகூடிவிடும். பொதுவாக எல்லா தேசங்களிலும் அநேக நற்காரியங்கள் பண மில்லாமல் முறிந்து போவது வழக்கம். அதிலும் நமது தேசம் உலக முழுவதிலுமுள்ள எல்லா நாடு களைக்காட்டிலும் இப்போது அதிக ஏழைமைகொண் டிருப்பதால் இங்கே பணமில்லாமல் உடைந்து போன காரியங்களுக்கு அளவில்லை. இருந்தபோதி லும் தர்மதீரர் இதைப் பற்றிக் கவலைப்படமாட்டார் கள். அறிவும் மன உறுதியும் சேர்ந்தால் வானத்தை வெல்லலாம். லௌகிக காரியங்கள் சாதிப்பது எம்மாத்திரம்? ஸ்ரீ கார்வேயின் பிரயத் தனத்திற்குப் பணம் போதுமான வரை சேர்ந்து

கொண்டுதான் வருகிறது. பூனாவிலே ஒருவர் தமது வீட்டை விற்று 10,000 ரூபாய் கொடுத்ததாகத் தெரிகிறது. ஸ்ரீ கார்வே ஏற்படுத்தப்போகிற சர்வகலா சங்கத்தில் தேச பாஷைகளின் மூலமாகவே சகல சாஸ்திரங்களும் கற்றுக் கொடுக்கப்படும். இவருடைய சர்வகலாசங்கம் ஸ்தாபனமாகிப் பத்து வருஷம் நடக்குமானால் அதுவரை நம் நாட்டு ஆண் பள்ளிக்கூடங்களில் இங்கிலீஷ் பாஷை மூலமாகவே கல்விப் பயிற்சி நடந்து வருமானால் பிறகு நமது நாட்டில் ஆண்களைக் காட்டிலும் பெண்கள் உயர்ந்த கல்வியும் அறிவுத் திறமையும் சாஸ்திரப் பழக்கமும் பெற்றிருக்கும்படி நேரிடும். அந்த நிலை ஏற்படு முன்னாகவே ஆண் பள்ளிக்கூடங்களிலும் சுதேச பாஷைகளின் பழக்கம் அதிகப்பட்டு விடுமென்று நம்புகிறேன்.

# பாட்டு

**குறிப்பு:—** சக்திதாஸன் என்ற புனை பெயரில் இத் தலைப்பிலே பாரதியார் தொடர்ச்சியாக ஆறு கட்டுரைகள் எழுதி யிருக்கிறார். இவை வெளியான தேதிகளாவன :—

1. 3 மே 1916 — நள சித்திரை 21
2. 4 மே 1916 — நள சித்திரை 22
3. 11 மே 1916 — நள சித்திரை 29
4. 27 மே 1916 — நள வைகாசி 14
5. 10 ஜூன் 1916 — நள வைகாசி 28
6. 19 ஜூலை 1916 — நள ஆடி 5

நவ ரஸங்களைப் பற்றியும் இக்காலத்துச் சங்கீதத்தைப் பற்றியும் பல ஆழ்ந்த கருத்துக்களைப் பாரதியார் இக் கட்டுரைகளிலே தந்திருக்கிறார்.

"ரஸ ஞானமில்லாதபடி பல்லவிகளும் கீர்த்தனங்களும் பாடுவோர் ஸங்கீதத்தின் உயிரை நீக்கிவிட்டு வெற்றுடலை அதாவது பிணத்தைக் காட்டுகிறார்கள். இக்காலத்து ஸங்கீத வித்வான்களிலே பலர் ஸங்கீதத்துக்கு நவரஸங்களே உயிர் என்ற செய்தியை அறியாதவர்கள்.

முத்துசாமி தீக்ஷிதர், தியாகையர், பட்டணம் சுப்பிரமணிய ஐயர் முதலியவர்களின் கீர்த்தனங்களிலே சிலவற்றை அதிக 'ஸங்கதி'களுடன் பாடுவோரே 'முதல்தர வித்வான்கள்.' இந்தக் கீர்த்தனங்களெல்லாம் ஸம்ஸ்க்ருதம் அல்லது தெலுங்கு பாஷையிலிருக்கின்றன. ஆகவே, முக்காலே மும்மாகாணி 'வித்வான்'களுக்கு அந்தக் கீர்த்தனங்களின் அர்த்தம் தெரியாது. எழுத்துக்களையும் பதங்களையும் கொலை செய்தும் விழுங்கியும் பாடுகிறார்கள். அர்த்தமே தெரியாதவர்களுக்கு 'ரஸம்' தெரிய நியாயமில்லை."

* * *

"நானும் பிறந்தது முதலாக இன்றுவரை பார்த்துக் கொண்டு வருகிறேன். பாட்டுக் கச்சேரி தொடங்குகிறது. வித்வான் 'வாதாபி கணபதிம்' என்று ஆரம்பஞ் செய்கிறார். 'ராம நீ ஸமான மெவரு', 'மரியாத காதுரா', 'வரமு லொஸகி'............ ஐயையோ, ஐயையோ, ஒரே கதை.

"எந்த 'வித்வான்' வந்தாலும் இதே கதைதான். தமிழ்நாட்டு ஜனங்களுக்கு இரும்புக் காதாக இருப்பதால், திரும்பத் திரும்பத் திரும்பத் திரும்ப ஏழெட்டுப் பாட்டுக்களை வருஷக் கணக்காகக் கேட்டுக் கொண்டிருக்கிறார்கள். தோற்காதுள்ள தேசங்களிலே இந்தத் துன்பத்தைப் பொறுத்துக் கொண்டிருக்க மாட்டார்கள்."

பாரதியார் இவ்வாறு கூறி முப்பத்தைந்து ஆண்டுகளுக்கு மேலாகிவிட்டன. நிலைமை மட்டும் அநேகமாக அப்படியே இருக்கிறது!

பூர்வீக மகான்களுடைய பாட்டுக்களை மறந்துவிட வேண்டுமென்பது பாரதியாருடைய கட்சியல்ல. "பத்து முப்பது கீர்த்தனங்களையே ஓயாமல் பாடி ஸங்கீதத்தை ஒரு தொல்லையாகச் செய்துவிடக் கூடாது" என்பது அவர் கருத்து. தமிழிலே புதிய புதிய நல்ல பாடல்கள் உண்டாக வேண்டும்; அவை இசையரங்குகளிலே முக்கிய இடம் பெறவேண்டும் என்பதும் அவர் ஆசை.

"வித்வான்கள் பழைய கீர்த்தனங்களைப் பாடம் பண்ணிப் புராதன வழிகளைத் தெரிந்து கொள்ளுதல் அவசியம். ஆனால் தமிழ் சபைகளிலே எப்போதும் அர்த்தந் தெரியாத பிற பாஷைகளில் பழம் பாட்டுக்களை மீட்டு மீட்டும் சொல்லுதல் நியாயமில்லை. அதனால் நமது ஜாதி ஸங்கீத ஞானத்தை யிழந்து போகும்படி நேரிடும்."

இக் கட்டுரைகள் **பாரதி நூல்கள்** மூன்றும் தொகுதியில் **கலைகள்** என்ற பகுதியில் **ஸங்கீத விஷயம், பெண்ணின் பாட்டு** என்ற தலைப்புக்களுடன் வெளியாகியுள்ளன.

# புதுப் பேய்

## ஒரு சிறிய கதை

13 மே 1916          ௱ள சித்திரை 31

**காளிதாசன்**

வேதபுரம் எலிக்குஞ்சு செட்டியார் மகளுக்குப் பேய் பிடித்திருக்கிறது. பெயர் காந்திமதி. பெண் நல்ல அழகு. சிவப்பு நிறம். முகத்தில் ஒரு மாசு மறு இல்லாமல் நிலாவீசும். மென்மையான பூங் கொடியைப் போல் இருப்பாள். இரண்டு மூன்று பாஷைகள் தெரியும்.

நேர்த்தியாகப் பாடுவாள். வீணை வாசிப்பாள். தினந்தோறும் வர்த்தமானப் பத்திரிகைகள் படித்து உலகத்தில் நடைபெறும் செய்திகளை வெகு நுட்பமாகத் தெரிந்துகொள்ள முயற்சி செய்வாள். யாரேனும் ஒரு மந்திரி, அல்லது ஒரு பெரிய ராஜ்ய தந்திரி, அல்லது பெரிய ஞானசார்யர், தனத்தலைவர் ஆகிய இவர்கள் பேசும் வார்த்தைகளுக்குள்ளே தொளைத்துப் பார்த்துக் கால்மைல் தூரம் அர்த்தம் கண்டுபிடிப்பாள். உபந்நியாசம் செய்வோர் சொல்லக் கூடாதென்று மறைத்துவைக்கும் வார்த்தையைக்கூடக் கண்டுபிடித்துச் சொல்லுவாள். பெண் நல்ல புத்திசாலி.

இவளுக்குப் போனமாசம்வரையிலே ஒருகுறையும் கிடையாது. ஸாதாரணமாக இருந்தாள். திடீ

றென்று ஒரு வெள்ளிக்கிழமை மாலை தலை சுற்றி ஆடத் தொடங்கிவிட்டாள்.

'ஹா' என்று கத்துவதும், சிரிப்பதும், பிதற்றுவதும் பெரிய அமளியாய் விட்டது. செட்டியார் என்னைவந்து கூப்பிட்டார். நான் பார்க்கப் போனேன். என்னைக் கண்டவுடன் காந்திமதி கட கட வென்று சிரித்தாள். கண்ணைப் பார்த்தால் வெறி பிடித்தவளைப்போலிருந்தது.

"காந்திமதி, உனக்கு என்ன செய்கிறதம்மா ?" என்று கேட்டேன். மறுமொழியில்லை. இரண்டு மூன்றுதரம் வற்புறுத்திக் கேட்டபிறகு, "ஹா, காளிதாசனு? வா வா, தூங்குகிருயா? எழுப்ப வந்தேன், காளிதாசனு? ஓஹோ; கவியெங்கே, என்மேலே பாட்டுப்பாடு நான் புதுப்பேய்............ ஆஹா வெனேஜெலோஸ், மடாதிபதி, தென் ஆப்பிரிகா, வீணை, திருச்சினுப்பள்ளி பாட்டுப்பாடு" என்று எதெல்லாமோ சொன்னுள். நான் திகைத்துப் போய்விட்டேன்.

"எப்படியிருந்த புத்தி!" என்று சொல்லி எ லி க் கு ஞ் சு செட்டியார் கண்ணீருதிர்த்தார். "ஏனம்மா? பிதற்றுகிருயே, உனக்கு உடம்பு என்னசெய்கிறது?" என்று மறுபடியும் கேட்டேன்.

"எனக்கு உடம்பு ஒன்றுமில்லை. நான் புதுப் பேய். உங்களுக்கெல்லாம் நோய் பிடித்திருக்கிறது. நான் அதை நீக்கிவிடவந்தேன். விபூதிகொண்டுவா" என்று காந்திமதி அலறத் தொடங்கினுள். எலிக் குஞ்சு செட்டியார் ஒரு பித்தளைத் தட்டிலே விபூதி கொண்டுவந்து என்கையிலே கொடுத்தார். நான்

பெரிய மந்திரவாதி என்று அவருடைய அபிப்பிராயம். ஏதாவது வியாதி சாதாரணமாக நரம்புகளைப் பற்றியதாக இருந்தால் மந்திரம் செய்து நோயாளியின் மனத்தை உறுதியாக்கி வியாதியை விரைவிலே ஒழித்துவிடலாம். பேய்க்கு மந்திரம் செய்யும் வழி எனக்குத் தெரியாது. தவிரவும் எனக்குப் பேய் பிசாசுகளில் நம்பிக்கை கிடையாது.

எதற்கும் ஒரு கை பார்க்கலாமென்று உத்தேசித்து விபூதித் தட்டைக் கையிலே வாங்கிக்கொண்டேன். காந்திமதி படீரென்று பாய்ந்து என் கையிலிருந்த தட்டைப் பிடுங்கிக்கொண்டாள்.

"ஹா, ஹா, ஹா! எனக்கா விபூதி போடவந்தாய்? சும்மா இரு. அப்படியே கண்ணை மூடிக்கொள்ளு. நான் உனக்கு விபூதி போடுகிறேன். எலிக்குஞ்சு, நீயும் வா, அப்படியே உட்காரு, உனக்கும் விபூதி போடுகிறேன். இன்னும் உங்கள் கூட்டத்தையெல்லாம் அழைத்து வா. எல்லாருக்கும் விபூதி போடுகிறேன். தென் ஆப்பிரிகா ரஜூல் முஸ்லிம் சங்கம், மதன்மோஹன் மாளவியா, திருச்சினுப்பள்ளி பண்டார, 'டாக்டர்,' கிழநரி, சென்னப்பட்டணம், கொண்டுவா, கொண்டுவா. எல்லோருக்கும் நான் விபூதி போடுகிறேன்" என்றாள்.

எலிக்குஞ்சு செட்டியார் விம்மி விம்மி அழத் தொடங்கினர்.

"அழாதே, கோழையே, போ, வெளியே போ" என்றாள் காந்திமதி.

எலிக்குஞ்சு செட்டியார் வெளியே போய்விட்டார். அவராலே தூக்கம் பொறுக்கமுடியவில்லை.

"பேய், பிசாசுகளே கிடையாது. எல்லாம் பொய்" என்று சொன்னேன். காந்திமதி சிரித்தாள்.

"பேயில்லை" என்று மறுபடி சொன்னேன்.

"புதுப் பேய்" என்றாள்.

யான்:— என்ன வேண்டும்?

அவள்:—விளக்கு.

யான்:—என்ன விளக்கு?

அவள்:—நெய் விளக்கு.

யான்:—என்ன நெய்?

அவள்:—புலி நெய்.

யான்:—எங்கே கிடைக்கும்?

அவள்:—காட்டிலே.

யான்:—எந்தக் காட்டிலே?

அவள்:—பொதியமலைக் காட்டிலே.

எனக்குக் கோபம் வந்துவிட்டது.

"காந்திமதி, உனக்குப் புத்தி சரியில்லை. நான் மந்திரத்தால் உன்னைக் குணப்படுத்தப்போகிறேன். கொஞ்ச நேரம் பேசாமலிரு; பேசினால் இந்தப் பிரம்பாலே அடிப்பேன்" என்று பயமுறுத்தினேன். ஒரே பாய்ச்சலாகப் பாய்ந்து என் கையிலிருந்த பிரம்பைப் பிடுங்கி முறித்தெறிந்துவிட்டாள்.

பிறகு மறுபடியும் அலறத் தொடங்கினாள்:—

"நெய், நெய், நெய் கொண்டுவா. நட, நட. தூங்காதே, எழுந்திரு. நான் புதுப் பேய். எல்

லோரும் நெய் கொடுக்கவேண்டும். இல்லாவிட்டால் இந்தப் பெண்ணை மிகவும் கஷ்டப்படுத்துவேன்" என்றாள்.

"காந்திமதி, நீ சொல்லும் வார்த்தை அர்த்த மாகவில்லையே" என்றேன். "அர்த்தமா தெரிய வில்லை? காளிதாசன், காளிதாசன்! கதை கதை" என்று சொல்லி எதெல்லாமோ பிதற்றிய பின்பு 'ஹா' என்று மற்றொருமுறை அலறி, அப் படியே மூர்ச்சைபோட்டு விழுந்தாள். நான் பெரு மூச்சுடன் வெளியேறினேன். சுமார் அரைமணி நேரம் கழிந்தபின்பு, செட்டியார் மறுபடிவந்து கூப் பிட்டு, "காந்திமதிக்குத் தெளிந்துவிட்டது" என்றார். பின்புபோய்க் கேட்டபோது, பேயாடிய விஷயம் ஞாபகமில்லை யென்று சொல்லுகிறாள். இப்படி இரண்டு மூன்று வெள்ளிக்கிழமையாய் நடந்து வரு கிறது.

இதனுடைய ஸூக்ஷ்மம் தெரியவில்லை. எனக் குப் பேய் பிசாசில் நம்பிக்கை கிடையாது.

# சுய ஆட்சியைப் பற்றி ஒரு யோசனை

25 மே 1916 நள வைகாசி 12

பாரத நாட்டுக்கு உடனே சுய ஆட்சி கொடுக்க வேண்டுமென்ற கருத்துடன் ஒரு பெரும் விண்ணப்பம் தயார் செய்து, அதில் மாகாணந்தோறும் லக்ஷக் கணக்கான ஜனங்கள் கையெழுத்துப் போட்டு இந்த க்ஷணமே ப்ரிடிஷ் பார்லிமெண்டுக்கு அனுப்ப வேண்டும்.

ஐரோப்பாவில் நடக்கும் யுத்த நெருக்கடியிலே நாம் உள்நாட்டுத் திருத்தங்களுக்கு மன்ருடுவதனல் நாம் ப்ரிடிஷ் ராஜாங்கத்துக்குச் செலுத்த வேண்டிய கடமை தவறிப் போகுமென்று சொல்லி நமது முன்னேற்றத்தைத் தடுக்க விரும்புவோரின் அர்த்தமில்லாத வார்த்தையைக் கருதி இக்காரியத்தை நிறுத்தி வைக்கலாகாது.

அயர்லாந்து, போலந்து என்ற தேசங்களின் திருஷ்டாந்தத்தைக் காட்டலாம்.

புதுச்சேரி
அநலம் வைகாசி 7

சி. சுப்பிரமணியபாரதி

குறிப்பு :—முதல் உலகயுத்தம் நடந்து கொண்டிருந்தபோது பாரதியார் இந்த யோசனையைக் கூறியிருக்கிறார். அயர்லாந்து, போலந்து தேசங்கள் தங்கள் விடுதலைக்காக அந்தச் சமயத்திலும் முயற்சி செய்து கொண்டிருந்தன. யுத்தம் நடப்பதால் இம் முயற்சியை அவை நிறுத்தி வைக்கவில்லை.

# உடம்பு

சக்திதாஸன்

22 ஜூன் 1916 நள ஆனி 9

குறிப்பு :—இக்கட்டுரை பாரதிநூல்கள் மூன்றும் தொகுதியில் வெளியாகியிருக்கிறது.

---

# உண்மை

சக்திதாஸன்

26 ஜூன் 1916 நள ஆனி 13

குறிப்பு :—இக்கட்டுரை பாரதிநூல்கள் மூன்றும் தொகுதியில் வெளியாகி யிருக்கிறது.

# ஸ்ரீமான் ஸ்ரீநிவாஸ சாஸ்திரியார்

**சி. சுப்ரமணியபாரதி**

7 ஜூலை 1916 — நள ஆனி 24

சுதேசமித்திரன் பத்திராதிபர் அவர்களுக்கு:—

சென்னப்பட்டணத்தில் ஸ்ரீமான் ஸ்ரீநிவாஸ சாஸ்திரியார் தமது பெண்ணை ருதுவான பிறகு விவாகம் செய்து கொடுத்த செய்தி எனக்கு சந்தோஷம் தருகிறது.

நமது ஜன ஸமூகத்தில் மாறுதல்கள் நடக்க வேண்டும். மாறுதலே உயிர்த்திறமையின் முதற் குறியாகும். மேன்மேலும் சௌகரியத்தை விரும்பித் தானாகவே புதிய புதிய மாறுதல்கள் செய்து கொள்ளாத ஜந்துவை, இயற்கைத் தெய்வம் வலிய வந்து கீழ்நிலைமைக்கு மாற்றுகிறது. புராதன ஆசாரங்களில் நல்லதைக் கடைப்பிடித்துக் கெட்டதை நீக்கி விடவேண்டும். "புராண மித்யேவ நஸாது ஸர்வம்." பழமை என்ற ஒரே காரணத்தால் எல்லாம் நல்லதாய் விடாது.

மேலும் விவாக சமயத்தில் சொல்லப்படும் சில வேதமந்திரங்களைக் கொண்டே பூர்வ காலத்தில் பிராமணர்கூட ருதுவான பிறகுதான் பெண்களுக்கு மணம் செய்வித்தார்கள் என்று ஸ்ரீமான் ஸ்ரீநிவாஸ சாஸ்திரியார் தாம் அவ்விஷயத்தைப்

பற்றி ஏற்கனவே எழுதி வெளியிட்டிருக்கும் புத்தக மொன்றில் ருஜுப்படுத்தியிருக்கிறார். ஆகவே குழந்தைக் கல்யாணம் வேதோக்தமென்றும், தெய்வக் கட்டளை யென்றும் இவர் நம்பவில்லை. இடைக் காலத்தில் நம் ஜாதியார் அறிவும், தைரியமும், சக்தியும் இழந்துவிட்ட பிறகு வந்து நுழைந்த அசம்பாவித வழக்கங்களில் இது வொன்றென்பது ஸ்ரீ சாஸ்திரியாரின் கொள்கை. இந்தக் கொள்கையை நமது நாட்டில் எத்தனையோ ஜனங்கள் மனதிற்குள்ளே அங்கீகாரம் செய்து கொண்டிருக்கிறார்கள். இங்ஙனம் ஒப்புக் கொண்ட பிறகும் புதிய சீர் திருத்தத்தை நடைமுறையிலே கொண்டு வருவதற்கு தைரியமில்லை.

பொதுவாக இங்கிலீஷ் படித்தவர்களிலே பலரும், இங்கிலீஷ் படிக்காவிட்டாலும் விஷயங்களைத் தாமாகவே யோசனை செய்து பார்க்கும் வழக்கமுடைய வேறு பலரும் நமது ஜனக்கட்டிலே எத்தனையோ குற்றங் குறைகள் இருப்பதாக ஓயாமல் சொல்லிக் கொண்டிருக்கிறார்கள். ஆனால் அவனவனுக்கு நியாயமாகத் தெரிந்ததை அவனவன் தனது அனுஷ்டானத்தில் காட்டும் முறைமை நமது நாட்டில் நன்றாக ஏற்படவில்லை. தர்மத்துக்காகத் தாங்கள் ஸங்கடப்படுவதிலே பெரும்பாலோருக்கு ஸம்மதமில்லை. அதுவும் இங்கிலீஷ் படித்த கூட்டத்தாரில் மனோதைரியமுடையவர்களின் தொகை மிகவும் சொற்பமென்பது என்னுடைய அபிப்பிராயம். உள்ளும் புறமும் ஒன்றுபோல நடக்கவேண்டும். படித்த வித்வான்

கள் வஞ்சக நடை நடந்தால் அந்த தேசம் சூன்ய மாகிவிடும். மனோதைரிய மில்லாவிட்டால் பய னுடைய செய்கை எதுவுமே செய்ய முடியாது.

விதி வசத்தால் நமது ஜனங்களுக்கு இந்த க்ஷணத்திலே பல விஷயங்களிலும் வழி காட்டக் கூடிய திறமை இங்கிலீஷ் படித்த சிலரிடத்திலே தான் காணப்படுகிறது. அதற்குக் காரணம் பூமண் டலத்தின் சாஸ்திரங்களும் நவீன யோசனைகளும் நமது பாஷையில் மொழிபெயர்க்கப் படாமல் இருப்பதொன்று; நம்மவர் அன்ய தேசங்களில் யாத்திரை செய்து தற்கால அனுபவங்கள் திரட்டிக் கொண்டு வராமலிருப்பது இரண்டு; நமக்குள் வந்து புகுந்திருக்கும் கோரமான வறுமை மூன்றாவது.

எனவே, இந்தக் கூட்டத்தாரில் சிலர் கொஞ் சம் துணிவாகச் செய்கைகள் செய்வதைக் காணும் போது ஆரம்பத்தில் சொல்லியபடி எனக்கு ஸந்தோஷமுண்டாகிறது. இப்படி நம்மவர் எல்லா விஷயங்களிலும் நியாயத்தைத் துணிவுடன் செய்து காட்டி நாட்டில் புதிய உயிரை நிலை நிறுத்தும்படி தேவர் கருணை செய்க.

# சில கவியரசர்

## காளிதாஸன்

10 ஜூலை 1916 — நள ஆனி 27

குறிப்பு:—இக்கட்டுரையில் பாரதியார் போத்தன்னு என்ற தெலுங்கக் கவிராயரைப் பற்றியும் கம்பர், திருவள்ளுவர், இளங்கோ என்னும் தமிழ்க் கவிகளைப் பற்றியும் பேசுகிறார். ஆந்திர தேசத்தார் போத்தன்னுவுக்கு ஆண்டுதோறும் விழா நடத்தவேண்டுமென்று விரும்புவதுபோலத் தமிழ்நாட்டார் சிறந்த தமிழ்க் கவிகளின் திருநாளைக் கொண்டாட வேண்டுமென்றும் அவ்வாறு கொண்டாடுவதால் புதிய கவிஞர்களும் இலக்கியமும் தோன்றும் என்றும் எடுத்துரைக்கிறார்.

இக் கட்டுரை பாரதியார் நூல்கள் மூன்றும் தொகுதியில் கலைகள் என்ற பகுதியில் கவி என்ற தலைப்பில் சேர்க்கப்பட்டுள்ளது. ஆனால் இக் கட்டுரையில் உள்ள இரண்டு பத்திகள் அதில் இல்லை. இதில் இல்லாத சில பத்திகள் உள்ளன. ஒரு வேளை பாரதியார் இக் கட்டுரையைப் பின்னால் திருத்தி அமைத்திருக்கலாம்.

கவி என்ற கட்டுரையில் வராத இரு பத்திகளை மட்டும் இங்கு தருகிறோம்.

போத்தன்னுவைப் பற்றிய குறிப்பின் கடைசிப் பத்தியாகக் கீழ்க்கண்ட வாக்கியங்கள் உள்ளன.

"மஹான்கள் கவிகளாயினும், சாஸ்திரக்கார ராயினும், வேறு எவ்வகையிலே தேசத்துக்கு உப காரம் செய்திருந்த போதிலும், அவருடைய ஜன்ம தினத்தைக் கொண்டாடி சபைகள் நடத்தி, ஆராய்ச்சிகள் செய்வது தேசத்தின் அறிவு வளர்ச் சிக்குப் பெருந்துணையாகும்."

**கவி** என்ற கட்டுரையிலே திருவள்ளுவர், இளங்கோ என்பவர்களைப் பற்றி அவர்கள் பிறந்த ஊர், அவர்கள் ஜன்ம தினத்தைக் கண்டறிய வழி ஆகிய விஷயங்கள் பேசப்படுகின்றன. ஆனால் கம்பரைப் பற்றி இவ்விதக் குறிப்புக் காணப்பெற வில்லை. அது **சில கவியரசர்** என்ற கட்டுரையிலே திருவள்ளுவரைப் பற்றிய குறிப்புக்குப் பின் கீழ்க் கண்டவாறு ஒரு பத்தியாக உள்ளது.

"கம்பநாடர் மாயவரத்துக்கு ஸமீபத்திலுள்ள திருவெழுந்தூரில் பிறந்தவர். அந்த ஊரிலே அவ ருக்கு ஞாபகச் சின்னம் ஏற்படுத்த வேண்டுமென்று சில வருஷங்களின் முன்பு ஒருவர் முயற்சி செய் தார். ஊக்கமில்லாமையால் அம்முயற்சி நிறைவேற வில்லை. கம்பனுடைய ஜன்ம திதி நிச்சயமாகத் தெரியவில்லை."

# வருங்காலம்

சக்திதாஸன்

11 ஜூலை 1916 — நள ஆனி 28

குறிப்பு:—பார்க்க: பாரதி நூல்கள் மூன்றும் தொகுதி—சமூகம்.

---

# சக்தி தர்மம்

சக்திதாஸன்

24 ஜூலை 1916 — நள ஆடி 10

குறிப்பு:—இக் கட்டுரை பாரதி நூல்கள் மூன்றும் தொகுதியில் தத்துவம் என்ற பகுதியில் வெளியாகியுள்ளது. ஆனால் இது **சாக்தம்** என்ற பகுதியோடு முடிந்து விடுகிறது. மூன்றும் தொகுதிக் கட்டுரையில் **கணபதி** என்ற பகுதியொன்று அதிகமாகக் காணப் படுகிறது.

**சக்தி தர்மம்** என்ற இதே தலைப்புள்ள மற்றொரு கட்டுரை சுதேசமித்திரனில் வெளியாகி இருக்கிறது. அது பாரதி நூல்களில் காணப்படவில்லை. அதை உரிய இடத்தில் இந்நூலில் சேர்த்திருக்கிறோம்.

# பூச்சித் தேவன்

## ஒரு சிறிய கதை

**காளிதாஸன்**

27 ஜூலை 1916 நள ஆடி 13

திருநெல்வேலி வட்டத்தில் குட்டையூர் என்றொரு ஜமீன் உண்டு. அங்கே ஜனங்களெல்லாம் மிகவும் ஏழைகள். மறவர் குடி 200, 300 வீடுகளுண்டு. மற்றக் குடிகளைக் காட்டிலும் இந்த மறவர் அதிக ஏழைகள். இவர்களில் சிலர் ஜமீன்தாருக்குப் பல்லக்குச் சுமப்போர். அடைப்பக்காரர் சிலர். வெளியே பருத்தி நிலங்களிலே வேலை செய்து பிழைப்பவர் சிலர். அநேகருக்கு வேலை கிடையாது. பக்கத்துக் கிராமங்களிலே போய்த் திருடிக் கொண்டு வருவார்கள். அதிலும் அதிக வரும்படி கிடைப்பதில்லை. இந்த இலாகாவே ஏழை இலாகா. ஓரிரவு திருடிக் கொண்டுவந்த பொருளில் ஊர்க் காவல் சேவகருக்குப் பாதி கொடுத்ததுபோக மிச்சம் ஐந்தாறுநாள் ஜீவனத்துக்குக் கூடப் போதாது. சுமார் 25 வருஷங்களுக்கு முன்பு அங்கே ஜமீன்தாராக இருந்த வெள்ளையப்ப நாய்க்கர் இறந்துபோன சமயத்தில், அவருடைய மகனுக்கு 12 வயதுதான் ஆயிருந்தது. ஆதலால், அவனைச் சென்னைப் பட்டணத்திலுள்ள ஜமீன்தார்ப் பிள்ளைகளின் பள்ளிக்கூடத்தில் சேர்த்துவிட்டு, அவனுக்குத்

தகுந்த வயதாகும் வரை ஜமீன் அதிகாரத்தைக் 'கோட்டா வாசுக்' (கோர்ட் ஆப் வார்ட்ஸ்) காரர் நடத்த வேண்டுமென்று ஸர்க்கார் அதிகாரிகள் தீர்மானம் செய்தார்கள். திருச்சினாப்பள்ளியிலே டிப்டிகலெக்டராகவிருந்த துரைசாமி அய்யரைக் 'கோட்டா வாசுக்' கார்யஸ்தராக நியமனம் செய் தார்கள். பழைய ஜமீன்தாரை அடுத்துப் பிழைத் தவர்களிலே அநேகருக்குச் சம்பளம் நின்றுபோய் விட்டது ஊரிலே கஷ்டம் அதிகப்பட்டது. மறவர் தரித்திரத்தில் முழுகிப் போயினர்; களவுகள் அதி கப் பட்டன; உள்ளூரிலேயே திருடத் தொடங்கி விட்டார்கள். இந்த மறவரில் நமது பூச்சித்தேவன் ஒருவன்.

### பூச்சித்தேவன் களவுகள்

பூச்சித்தேவன் உடம்பில் நல்ல வலிமையுடைய வன். ஆனால் களவிலே நல்ல தேர்ச்சி பெறவில்லை. ஆகையால் பெரிய திருடர் இவனைச் சேர்த்துக் கொள்வதில்லை. சிறு சிறு களவுகளிலே இவன் திருப்தி கொண்டிருந்தான். நாளைக்கு வேண்டுமே யென்ற கவலை இவனுக்குக் கிடையாது. அந்தந்த நாள் ஆகாரத்துக்குக் கிடைத்தால் போதும். பெரிய களவுகளிலே சேராதபடியால் இவனை டாணாக்காரர் தொல்லைப்படுத்துவதில்லை. பிராமண வீதிகளுக்கு வருவான். வெளிப்புறத்திலே வேஷ்டிகள், பாட்டி மாருடைய சேலைகள் உலரப் போட்டிருக்கும். ஏதேனுமொன்றை அவிழ்த்துக் கொண்டுபோய் எங்கேனும் ஒன்றரையணாவுக்கு விற்று அன்று பகல் போஜனத்துக்கு வழி தேடிக் கொள்ளுவான்.

### இராக் கோனை

மேலைத் தெருவின் ஓரத்தில் புன்செய் வெளியை அடுத்த வீட்டில் ஒரு கிழவி தனது பிள்ளையுடனே குடித்தனம் பண்ணிக் கொண்டிருந்தாள். இவ்விருவருக்கும் அந்த ஊர் சத்திரத்திலிருந்து நாளொன்றுக்கு மூன்று படி அரிசியும், மேல் சாமானும், படிச் செலவாகக் கொடுக்கும்படி பழைய ஜமீன்தார் காலத்தில் ஏற்பாடாயிருந்தது. அது 'கோட்டா வாசு'க் காலத்திலேகூட நிற்கவில்லை. இவர்கள் வீட்டிலே மண் பாண்டங்களைத் தவிர வேறொரு சாமானும் கிடையாது. இங்கே தான் பூச்சித்தேவன் அடிக்கடி திருட வருவான். நடு நிசியில் கொல்லைக் கதவை எளிதாகத் திறந்து கொண்டு உள்ளே நுழைவான். கூடத்திலே பழஞ் சோற்றுப் பானை வைத்திருக்கும். அதைத் திறந்து பழையதை எடுத்துக் கொண்டு போவான். சத்தத்திலே கிழவி கண்விழித்து விடுவாள். "அது யாரடா அங்கே, பாடையிலே போவாய், படக்கென விழுவாய், யாரெங்கே!" என்று கத்துவாள். "நான் தானம்மா, பூச்சித்தேவன். பானையைத்தொடவில்லை, கோலாலே கை படாமல் சோற்றை மாத்திரம் துணியிலே கவிழ்த்துக் கொண்டுபோகிறேன். போய் வருகிறேனம்மா" என்று சொல்லிவிட்டுப்போவான். கிழவி வைது கொண்டே மறுபடி கதவை நேரே அடைத்துவிட்டு வந்து படுத்துக்கொள்ளுவாள்.

### சுந்தரய்யங்கார் வீட்டுச் செம்பு

ஒரு நாள் பகல் 2 மணியிருக்கும்; மாடத் தெரு சுந்தரய்யங்கார் வீட்டிலே அவருடைய தாயார் மாத்

திரம் தனியாகக் குடியிருந்தாள். அய்யங்காரும் அவருடைய மனைவியும் வெளியூருக்குப் போயிருந்தார்கள். கிழவி வெளித் திண்ணையிலே உட்கார்ந்து ராம ஜபம் பண்ணிக் கொண்டிருந்தாள். அப்போது பூச்சித்தேவன் அங்கே போய், "தாகத்துக்குத் தண்ணீர் கொடுங்களம்மா" என்று கேட்டான். கிழவி உள்ளே போய், ஒரு செம்பிலே ஜலம் கொண்டு வந்து வைத்தாள். அதை இவன் எடுத்துக் குடித்துக் கொண்டிருக்கையில், கிழவி சூத்திரன் தொட்ட பாத்திரத்தைத் தான் தொடக் கூடாதாகையால் அதைக் கழுவும் பொருட்டு மற்றொரு பாத்திரத்திலே ஜலம் கொண்டு வருவதற்காக உள்ளே போனாள். திரும்பி வந்து பார்க்கையிலே பூச்சித் தேவனையும் காணவில்லை; செம்பையும் காணவில்லை. கிழவி கூவே கூகூவே கூ என்று கத்துகிறாள். இந்தக் கூக்குரலைக் கேட்டுப் பக்கத்து வீட்டு சுப்பா சாஸ்திரி குடுகுடுவென்று வெளியே ஓடிவந்து, "என்ன ஸங்கதி?" என்று கேட்டார்.

"அந்தப் படுபாவி பூச்சித்தேவன் வந்து குடிக்கத் தீர்த்தம் கேட்டான். செம்பிலே கொண்டுவந்து கொடுத்துவிட்டு உள்ளே போய்ப் பாத்திர சுத்திக்கு வேறே தீர்த்தம் கொண்டு வருமுன்னே ஆளைக் காணவில்லை. செம்பைக் கொண்டு போய்விட்டான். நான் என்ன செய்வேன்? நல்ல செம்பு. வாங்கி மூன்று மாதங்கூட ஆகவில்லை" என்று கிழவி சொன்னாள்.

"எவ்வளவு நாழிகை யாச்சுது?" என்று கேட்டார் சுப்பா சாஸ்திரி. அதற்குக் கிழவி, "இப்போ தான். ஒரு நிமிஷங்கூட ஆகவில்லை" என்றாள்.

சாஸ்திரி திரும்பிப் பார்த்தார். ஏறக்குறைய 15 வீடுகளுக்கப்பால் எதிர்ப் பத்தியிலே யிருந்த ஒரு கடையின் முன்பு பூச்சித்தேவன் நின்றுகொண்டிருப்பதைக் கண்டு, ஒரே ஓட்டத்தில் கடைக்குப் போய்ச் சேர்ந்தார்.

அங்கே பூச்சித்தேவன் பாத்திரத்தைக் கடைச் செட்டியிடம் கொடுத்து, "இதை வைத்துக்கொண்டு கால் ரூபாய் கொடும், செட்டியாரே. நாளைக் காலையில் வந்து பணத்தைத் திருப்பிக் கொடுத்துவிட்டுச் செம்பை வாங்கிக்கொண்டு போகிறேன்" என்று சொன்னான். செட்டி செம்பைக் கையிலே வைத்துப் பார்த்துக் கொண்டிருந்தான். பூச்சித்தேவன் கோபத்துடன், "என்ன செட்டியாரே, செம்பை அழகு பார்க்கிறீரோ? இதை வைத்துக்கொண்டு கால் ரூபாய் கொடுக்க வலிக்கிறதோ? ஸம்மதமுண்டானால் பாரும். இல்லாவிட்டால் செம்பைக் கொடும் இங்கே. பக்கத்துத் தெரு சோணாசலஞ் செட்டியார் நல்ல மனுஷ்யன். அவர் நமக்குச் செம்பு, கிம்பு வைக்காமல் சும்மா கடன் கொடுப்பார். அவரிடம் வாங்கிக் கொள்கிறேன். நீட்டும். செம்பை நீட்டும் இங்கே" என்றான். கடைச் செட்டி, "பொறு, தம்பி, பொறு. இதோ கொடுக்கிறேன்" என்று சொல்லிக் கொண்டிருந்தான். இந்த சந்தர்ப்பத்திலே தான் சுப்பா சாஸ்திரி அவ்விடம் போய்ச் சேர்ந்தார்.

பூச்சித்தேவனை நோக்கி அதன் மகனே இதன் மகனே என்று சுப்பா சாஸ்திரி சோனுமாரியாக வையத் தொடங்கினர்.

பூச்சித்தேவன், "என்ன சாமி, பயித்தியம் கியித்தியம் பிடிச்சுக் கொண்டதா? சங்கதி என்ன? ஏன் வைகிறீர்? சொல்லும்" என்றான். "அட அயோக்கியப் பயலே! சுந்தரய்யங்கார் வீட்டுச் செம்பைத் திருடிக் கொண்டு வந்து கடையிலே விற்கப் போகிறாய்! ஏன் வைகிறேனென்று வேறே கேட்கிறாயா? என்னோடே வாடா நீ. டாணாவுக்குப் போகலாம் வா. வாடா நீ, வா" என்று அட்டகாஸம் பண்ணினர் சுப்பா சாஸ்திரி.

பூச்சித்தேவன் கலகலவென்று சிரித்துக் கொண்டு, "சாமி, நீர் கூப்பிட்டால் உம்மோடு நானுக டாணாவுக்குப் போய் மாட்டிக் கொள்ள வேண்டுமென்று எனக்கு ஆத்திரமா? புத்தியில்லாமல் பேசுகிறீரே. நடக்க வேண்டிய சங்கதியைச் சொல்லும்" என்றான். சுப்பா சாஸ்திரி மஹா கோபத்துடன், "செம்பை யேனடா திருடிக் கொண்டு வந்தாய்?" என்றுகேட்டார்.

பூச்சித்தேவன், "ஐயரே, திருட்டுக் கிருட்டென்று பேசக்கூடாது, தெரியுமா? ஜாக்கிரதை! பெரிய களவு கண்டுபிடித்து விட்டார், இவர்! உம்! செட்டியாரே! பார்ப்பான் கையிலே செம்பைக் கொடுத்துப் போகச் சொல்லும். களவு கண்டுபிடிக்க வந்தார்! பெரிய களவு!" என்று நகைத்துக்கொண்டே அங்கிருந்து போய்விட்டான். செம்பு சுந்தரய்யங்கார் வீடு போய்ச் சேர்ந்தது.

### பூச்சித்தேவனுக்குச் செல்வம் உண்டானது

பூச்சித்தேவன் கண்ணுக்கு நல்ல லக்ஷணமாக இருப்பான். ஜில்பாக் குடுமி; கொம்பு மீசை; மிருகவுடம்பு;— பொதுவிலே அழகுள்ளவன். இப்படியிருக்கையில, 'கோட்டாவாசு'க் காலம் போய், அடுத்த ஜமீன்தார் பட்டத்துக்கு வந்தார். அவருக்கு அழகான சேவகர் வைத்துக்கொள்வதிலே பிரிய மதிகம். இவனை வேலைக் கமர்த்திக் கொண்டார். நாளாக நாளாக இவன் மேல் அவருக்கு எந்தக் காரணத்தினலோ அளவு கடந்த அபிமான முண்டாய்விட்டது. எனவே, இவனுக்கு மறக் கூட்டத்தில் கவுரவமதிகப்பட்டது. டாணைக்காரர் இவனைக் கண்டால் இரட்டை ஸலாம் போடுவார்கள். எங்கேனும் பெரிய கொள்ளைகள், வழிப்பறிகள் நடந்தால் இவனுக்குப் பங்கு கொடுப்பதென்ற நியதியேற்பட்டது. ஆபத்து வந்தால், ஜமீன்தாருடைய தயவு மூலமாக இவன் காப்பாற்றுவானென்ற எண்ணம் திருடருக்கெல்லாம் உண்டாய்விட்டது. அக்காலத்தில் மதுரையிலே ஒரு பெரிய மிராசுதார் வீட்டில் களவு நடந்து பணமும் நகைகளுமாக ஐம்பதினுயிரம் ரூபாய் போய்விட்டது. டாணைக்காரர் எவ்வளவோ பாடுபட்டுப் பார்த்தும் துப்புத் துலங்கவில்லை. அதிலே பூச்சித்தேவன் சம்பந்தப்பட்டதாகக் குட்டையூரிலே மாத்திரம் சிலருக்குச் சந்தேக மிருந்தது. ஆனல் அதை யாரும் அதிகாரிகளிடம் சொல்லத் துணியவில்லை. பூச்சித்தேவனுக்கு விரோதமாக சாக்ஷி சொன்னல் தலை போய்விடுமென்ற பயம் எல்லாருக்கு மிருந்தது. என்ன

காரணத்தாலோ, பூச்சித்தேவன் பெரிய செல்வ ளுகிவிட்டான். அரண்மனை வேலையிலிருந்தபடி யாலும், ஜமீன்தார் இவனிடம் மிகுந்த பக்ஷம் பாராட்டின படியாலும் இவனுக்குப் பணம் பெருகிய விஷயத்தில் யாருக்கும் ஆச்சரியமுண்டாகவில்லை. ஊரிலே பூச்சித்தேவர் என்ற பெயருண்டாயிற்று.

"அற்பனுக்குப் பவிசு வந்தால் அர்த்த ராத்திரி குடை பிடிப்பான்." பூச்சித்தேவனுக்குக் கண், தலை தெரியவில்லை. ஊரில் யாரேனும் தன்னிடம் அவ மதிப்புக் கொண்டதாகச் சந்தேக மேற்பட்டால், அவர்களைத் தன் வீட்டுக்கு இழுத்துக் கொண்டு வரச் சொல்லி அடிப்பான். தெருவில் யாரேனும் "பூச்சி" என்று சொன்னல் தன்னைத்தான் சொல்லுகிறுர்களென்று சண்டைக்குப் போய் அவர்களை வாய்க்கு வந்தபடி திட்டுவான். 'அந்தப் பாப்பாரப் பயல்" 'இந்த மூதலிப் பயல்' என்று யாரையும் இழிவாகப் பேசுவான். டம்பத்துக்காக ஒரு திண்ணைப் பள்ளிக்கூடம் ஏற்படுத்தினன். அங்கே காலையில் பிள்ளைகளெல்லாம் "பூச்சியப் பத்தேவர் நீடூழி வாழ்க" என்று சொல்லிப் பிள்ளை யார்ரைக் கும்பிட்ட பிறகு தான் பாடஞ் சொல்லலா மென்று விதியேற்படுத்தினன். கிராமத்துப் பெண் களைக் கெடுக்கலாஞன். ஏழைகள் பணத்தை நாஞ விதங்களிலே அபகரித்தான். ஊர் முழுதும் இவ னைப் "பாவி" என்று பேசத் தலைப்பட்டார்கள்.

முடிவு

இப்படியிருக்கையில், அந்தவூர் வடக்குத் தெரு மறவருக்கும் தெற்குத் தெரு மறவருக்கும் ஏதோ

ஒரு விஷயமாக ஒரு பெருஞ் சண்டை யேற்பட்டது. தடிகள் கத்திகளுடன் இரண்டு பக்கத்திலுமிருந்து 100, 150 பேர் வந்து கலகம் பண்ணினார்கள். அதிலே பூச்சித்தேவனும் போனதில் விலாப்புறத்திலே பெரிய குத்துக் காயம் ஏற்பட்டது. இதற்கிடையிலே ஸர்க்கார் அதிகாரிகள் இரண்டு பக்கத் தலைவர்களையும் பிடித்து வைத்தார்கள். சிறைச் சாலை வைத்தியர் பூச்சித்தேவனுடைய விலாப்புண்ணைத் தீர்த்து விடுவதற்கு மூன்று மாதங்களாயின. திருநெல்வேலி நியாய ஸ்தலத்தில் விசாரணை நடந்து இவனுக்கு ஏழு வருஷ கடுங்காவல் விதிக்கப்பட்டது. சென்னைப் பட்டணத்திலுள்ள பெரிய நியாய ஸ்தலத்தில் முறையீடு (அப்பீல்) செய்துகொண்டான். வக்கீல்களுக்கும் மற்றவர்களுக்குமாகப் பதினாயிரம் ரூபாய் செலவாயிற்று. இறுதிவரை இவனுக்கு விடுதலை கிடைக்கவில்லை. கீழ் ஸ்தலத்தின் தீர்ப்பையே பெரிய நியாயஸ்தலத்தில் உறுதிப்படுத்திவிட்டார். ஏழு வருஷம் சிறையிலிருந்து பிறகு திரும்பி வந்தான். சிறையிலிருந்து வந்த பின் இவனை ஜமீன்தார் கவனிக்கவில்லை. மிஞ்சியிருந்த சொற்பப் பொருளை வைத்துக்கொண்டு இப்போது மறுபடியும் பூச்சித்தேவன் என்ற பெயருடன் கூடிய வரை யோக்கியனாகவே ஜீவனம் செய்து வருகிறான்.

# வேதரிஷிகளின் கவிதை

## அதிதி - பராசக்தி

ஸ்ரீ சி. சுப்பிரமணிய பாரதி

2 ஆகஸ்டு 1916

(குறிப்பு :—அதிதி என்ற சொல்லை உச்சரிக்கும்போது முதற் 'தி' கரத்தை 'உக்தி' என்பதுபோல் மெல்லோசையாகச் சொல்லுக. இரண்டாவது 'தி' கரத்தை 'திங்கள்' என்பதுபோல் வல்லோசையாக்க வேண்டும்.)

மாக்ஸ்முல்லர் (Max Muller) எழுதுகிறார்:—

"உண்மையில் 'அதிதி' என்ற தெய்வப் பெயரே 'அநந்தம்' அல்லது எல்லையில்லாமை என்ற கருத்தைக் குறிப்பிடுவதற்கு மனித பாஷைகளில் உண்டான பதங்கள் எல்லாவற்றிலும் முந்தியது. 'திதி' என்றால் கட்டுப்பட்டது, பிரிவுபட்டது, எல்லையுடையது என்று அர்த்தம்.

'அதிதி' கட்டுப்படாதது, பிரிவுபடாதது, எல்லையில்லாதது."

இந்த அதிதி என்ற அநந்த சக்தி தேவர்களுக்கெல்லாம் தாய். எல்லாப் பொருள்களும், எல்லா உலகங்களும் இதனிடத்திலே தோன்றின. அஞ்ஞானக் கட்டுகளிலிருந்து விடுதலை பெற விரும்புவோன் அதிதியையே துணையாகக்கொள்ளவேண்டுமென்று வேதம் சொல்லுகிறது.

பிரமனாகிய முதற்கடவுளுக்குத் தாயென்றும் மகளென்றும் சொல்லப்படும் இந்த அதிதியைக் குறித்து ரிக் வேதத்திலே காணப்படும் சில மந்திரங்களை இங்கு மொழி பெயர்த்துக் காட்டுகிறேன்.

(ரிக் வேதம் 1 - மண்டலம்; 89 - ஸூக்தம்; 10 ரிக்.)

அதிதியே வானம். அதிதி இடைவெளி. அதிதி தாய். அதிதியே தந்தையும் மகனும். அதிதி தேவர்கள் எல்லாம். அதிதி ஐந்து மண்டலத்து மனிதர். சென்றதெல்லாம் அதிதி. இனிவருவதும் அதிதியே.

(5 - 79 - 3)

காலையில் தேவியாகிய அதிதியை அழைக்கிறேன். நடுப்பகலிலும், மாலையிலும் அவளையே அழைக்கிறேன்.

(10 - 65 - 9)

அதிதியையும் அவள் மக்களாகிய இந்திரன், வாயு, வருணன், மித்திரன், அர்யமான் என்ற தேவரையும் அழைக்கிறோம். இவர்கள் மண்ணிலும் வானிலும் நீரிலும் கலந்து நிற்கின்றனர்.

குறிப்பு:— வேதரிஷிகளின் கவிதை என்ற நூலிலே அதிதி என்ற பகுதியில் மேலேயுள்ள விஷயம் ஆரம்பத்தில் இருக்கவேண்டும். அது விட்டுப் போயிருக்கிறது.

# சக்தி தர்மம்

சக்திதாஸன்

5 ஆகஸ்டு 1916 நள ஆடி 22

கடவுளை ஆணென்றும் பெண்ணென்றும் இரண்டு கலைகளாக வழங்குதல் புராதன தேசங்கள் யாவற்றிலுமே உண்டு. சிலவிடங்களில் சக்தியே பிரதானமென்று கொள்கையிருந்தது.

உதாரணமாகக் கிறிஸ்துநாதரின் மாதாவுக்கு 'மாரி' என்று பெயர். (இதனை ஆங்கிலேயர் 'மேரி' என்று பிழையாக உச்சரிக்கிறார்கள்.) இந்த மாரி யென்னும் பெயர் பாலஸ்தின தேசத்தில் கிறிஸ்து பிறப்பதற்கு முன் எத்தனையோ நூற்றாண்டுகளாக வழங்கிவந்தது. அங்கு மாத்திரமன்று, அங்கிருந்து வடக்கே நெடுந்தூரம் கருங்கடல்வரையிலுமுள்ள நில முழுவதிலும் மிகவும் பழமைக் காலங்களிலே 'மாரி' என்பதோர் தெய்வப் பெயர் வழங்கிற்று. கருங்கடலுக்கும் தர்தாநெல் (இங்கிலீஷ் - டார்டனெல்ஸ்) ஜல சந்திக்குமிடையே ('ஸங்கரியுஸ்' என்று கிரேக்க பாஷையில் சொல்லப்படும்) சங்கரிநதிக் கரையில் முற்காலத்திலே பிஸ்கேனு (Piscenus) என்றதோர் பெரிய நகரமிருந்தது. அங்கு பெருங் கோயிலொன்று கட்டி 'மாரியம்மா' என்ற தெய்வத்தை வணங்கினார்கள். அதற்கருகே மாரியாந்தினி என்றோர் நகரிருந்தது. இந்த

மாரியை உலகத்தின் தாயென்றும் எல்லா தேவர்களுக்கும் ஆதாரமான மகாசக்தி என்றும் அந்த நாட்டிலும் அதன் சுற்று வட்டங்களிலுமிருந்தோர் கொண்டாடினார்கள். இயற்கைத் தெய்வமே மஹாசக்தி என்று சொல்லப்படுகிறது. அதனையே பூர்வ காலத்தில் பல்வேறு தேசத்தார் பலபெயர் கூறி 'ஈஸிஸ்' (ஈசி) என்றும், 'மாரி' யென்றும் 'துர்க்கை' யென்றும் வணங்கிவந்தார்கள்.

அதனை அரசர் வீரதேவதையாகவும், சில இடங்களில் ஸம்ஹார தேவதையாகவும் கொண்டாடினர். பொது ஜனங்கள் அரசர் வழியை அனுசரித்தனர். யோகிகளும், ஞானிகளும், கவிகளும் அதனைப் படைத்தல், காத்தல், அழித்தல் என்ற முத்தொழிலுக்கும் ஆதியான மோனவெளி யென்று போற்றினர். எல்லாம் ஒன்றுதான். "வாக்கையும் மனதையும் கடந்த பரம்பொருளை" ஆணென்று சொன்னாலென்ன, பெண்ணென்று சொன்னாலென்ன? தாயென்றாலென்ன, தந்தையென்றா லென்ன? எனினும் தெய்வத்தைக் கருதும்போது "வாக்கையும் மனதையும் கடந்த பரம்பொருள்" என்றுமாத்திரம் நினைப்பது பிரயோஜனமில்லை. அது உண்மையன்று.

"சுத்த அறிவே சிவம்" வாஸ்தவந்தான். ஆனால் இந்த உலகம் என்ன? இதுவும் சிவமே. அறிவுக் கெட்டாதது; பெயர் சொல்லமுடியாதது; ஆதலால் அப்பொருளுக்கு வெறுமே, 'தத்' (அது) என்ற பெயர்காட்டி வேதரிஷிகள் போற்றினர். பின் அதையே அதிதி யென்றும், விஷ்ணுவென்

றும், ருத்ர னென்றும், ப்ரம்மணஸ்பதி என்றும், இந்திரன், வாயு, ஸூர்யன், அக்கி, மித்திரன், வருணன், பூமி, சிந்து என்றும் பலவகைகளிலே வணங்கினார்கள். தெய்வம் உண்டென்பதை எப்படியறிந்தோம்? உலகமிருப்பதாலே அறிந்தோம். தெய்வம் உயிர்; உலகம் அதன்வடிவம். உலகந் தெய்வந்தான். உலகத்துச் செய்கைகளெல்லாம் தெய்வத்தின் செய்கைகளே. உலகத்தின் நடைகளிலும் விதிகளிலும் தெய்வத்தை உணரவேண்டும். இந்த வழியறியாதோர் உலகத்துக்குப் பயப்படுகிறார்கள். இவ் வுலகத்தைவிட்டுத் தப்பினால் இன்பமுண்டாகுமென்று நினைக்கிறார்கள். அதிலிருந்து பல்வேறு பிழைகளும் தொல்லைகளும் விளைகின்றன. இந்த உலகம் நாராயணனுடைய லீலை. அவன் தனது சக்தியுடன் விளையாடும் விளையாட்டு. சக்தி மார்க்கத்தில் இந்த உலகத்து ஞானம் அதிகப்படவேண்டும். பராசக்தி தெய்வம். ஆத்மஞானத்தைக் காட்டும் நூல்கள் அவளுடைய வேதம். லௌகிக சாஸ்திரமும் அவளுடைய வேதந்தான். பௌதிக சாஸ்திரம் (ஸயன்ஸ்) சக்தி தர்மத்துக்கு முதலாவது வேதம் - வேதாரம்பம். ஸ்தூலத்தை அறிந்தாலொழிய ஸூக்ஷ்மத்தை நன்கு தெரிந்து கொள்ள முடியாது. இஹலோக ஞானத்தை இகழ்ச்சியாகப் பேசும் "ஆத்ம சாஸ்திரம்" பொய். உண்மையான ஆத்ம சாஸ்திரம் இஹலோக ஞானத்தை வளர்க்கும். வான சாஸ்திரம் இல்லாத நாட்டில் ஞானவாசிட்டம் பயன் தரமாட்டாது. எந்த மதமும் ஆரம்பத்தில் லௌகிக ஞானத்தை இகழவில்லை.

எல்லாரும் கண்ணை மூடிக்கொண்டு எப்போதும் சிவனைத் தியானம் செய்துகொண்டிருந்தால் சிவன் கோயில் கட்டியிருக்கமுடியாது. ஒருவேலையும் நடக்காது. கண்ணைத் திறந்து உலகக் காரியங்கள் செய்துகொண்டே சிவனை அறிய முயல்வதுதான் சரியான ஞானம். எல்லா மதங்களிலும் இதுதான் உண்மை. உள்ளத் துறவுடன் இன்பங்களைத் துறந்திடுக என்று ஈசோபநிஷத்துக் கூறுகின்றது. ஆனால் கிறிஸ்து மதம், மகம்மதிய மதம், பௌத்த மதம் முதலிய புறமதங்களிலும் நமது தேசத்து மதங்கள் சிலவற்றிலும், பிற்காலத்துப் பாதிரிகளும் பக்கிரிகளும் பிக்ஷுக்களும் ஸந்நியாசிகளும் ஒரே முழக்கமாக லௌகிக ஞானத்தையும், லௌகிக அனுபவத்தையும் பழிக்கத் தொடங்கி விட்டார்கள். சக்தி தர்மம் சிலவகையான வார்த்தைக்கே இடங்கொடுக்காது. ஏன்?

பராசக்தியை முதலாவது இவ்வுலகத்திலே கண்டு வணங்குதல் வேண்டும். நக்ஷத்திரங்கள் எல்லாம் அவளுடைய விழிகள். தீயும் காற்றும் அவளுடைய வேகம். மண் அவளுடைய திருமேனி. இருப்பதெல்லாம் அவளுடைய கலைதான். அவளை இகத்திலே கண்டு போற்றி நலம்பெற வேண்டும்.

குறிப்பு :— இதே தலைப்பில் 24-7-1916 - ல் மற்றொரு கட்டுரை வெளியாகி யிருக்கிறது. அது மட்டும் பாரதி நூல்கள் மூன்றும் தொகுயில் வெளியாகியுள்ளது. இக் கட்டுரை அதில் சேரவில்லை.

# விதி

சக்திதாஸன்

9 செப்டம்பர் 1916 நள ஆவணி 25

விதி மூன்று வகைப்படும் :—

1. தெய்வ விதி
2. சாஸ்திர விதி
3. காட்டு விதி

## தெய்வ விதி

இந்த மூன்றிலே தெய்வ விதியை மாற்ற முடியாது. காற்றிலே வீசிய கல் இடையிலே தடுக்கா விட்டால் மண் மேலே வந்து விழும். தீ சுடும். பனி குளிரும். மின்னல் அழிக்கும். வெயில் ஒளி செய்யும். இவற்றைப் பிற விதிகளால் சிறிது நேரம் தடுத்தாலும் தடுக்கலாம். இயற்கை விதிகளை மாற்றிவிட வழியில்லை. நன்மை நினைத்தால் நன்மை விளையும். தீமை நினைத்தால் தீமை விளையும். பொய் இழிவு தரும். உண்மை கைதூக்கும். இவை மாறாத விதிகள். இக்காலத்து இயற்கை விதிகளை ஒன்றொன்றாக ஆராய்ந்து கண்டுபிடித்துப் பின் அவற்றை அனுசரித்து வாழவேண்டும். இந்த விதிகளிலே மனித ஜாதியார் இன்றுவரை "கற்றது கைம்மண்ணளவு, கல்லாதது உலகளவு." இவற்றின் ஞானம் வளர வளர மனித ஜாதி மேன்மை பெறும்.

### சாஸ்திர விதி

சாஸ்திரம் மனிதனுல் எழுதப்பட்டது. ஆதலால் இன்னும் நிறைவு பெறவில்லை. தெய்வ விதிகளைக் கூடியவரை பின்பற்றியே சாஸ்திரக்காரர் எழுத முயற்சி செய்திருக்கிருர்கள். ஆனுல் காலதேச வர்த்தமானங்கள் மாறுபடுகின்றன. தெய்வ விதிகளைப் பற்றிய புதிய வித்தைகள் வழக்கப்படுகின்றன. அப்போது சாஸ்திர விதிகளை மாற்றுதல் அவசியமாகிறது. திருஷ்டாந்தமாக வைத்திய சாஸ்திரத்தைப் பாருங்கள். கால தேச வர்த்தமானங்களுக்குத் தக்கபடி விதிகள் மாறுகின்றன. பூர்விக ஐரோப்பிய வைத்தியர்கள் பெரும்பான்மை எல்லா வியாதிகளுக்கும் நோயாளியின் உடம்பைக் குத்தி ரத்தத்தைக் கொஞ்சம் வெளியேற்றினுல், அதுவே நல்ல முறையென்று நினைத்திருந்தார்கள். தலைநோவு, ஜ்வரம் எது வந்தாலும் உடம்பைக் குத்தி ரத்தத்தைக் கொட்டித் தீரவேண்டும். இந்த மடமையாலே, பலர் ரத்த நஷ்டமே முதற் காரணமாய் அநியாயமாக மடிந்து போனுர்கள். இக்காலத்தில் அந்தக் கொள்கை மாறிவிட்டது. ஜ்வரம் வந்தால் பத்தியம் மதுரையில் ஒரு மாதிரி, வேலூரிலே மற்றொரு மாதிரி.

இலக்கணத்தை எடுங்கள்:—

"பழையன கழிதலும் புதியன புகுதலும், வழுவல கால வகையினுனே" என்று பவணந்தி முனிவரே சொல்லுகிருர்.

தர்ம சாஸ்திரத்தை எடுங்கள் :—

பஞ்சபாண்டவர் காலத்தில் ஒரு ஸ்திரீ பல புருஷரை விவாகம் செய்து கொள்ளலாம். வேத வியாஸர் காலத்தில் தமையன் பிள்ளையில்லாமல் இறந்துபோனால் தம்பி அவனுக்கு ஸந்ததி ஏற்படுத்திக் கொடுக்கலாம்.

விசுவாமித்திரர் காலத்தில் க்ஷத்திரியர் அறிவினால் பிராமணராகி விடலாம். மனுஸ்மிருதியின் விதிகள் வேறே. பராசஜர் விதிகள் வேறே. நடப்பிலுள்ள வைத்தியநாத தீக்ஷிதர் விதிகள் வேறே. இங்கிலாந்துக்கு வேறு ஸ்மிருதி. ப்ரான்ஸ் தேசத்துக்கு வேறு. பாரஸீகத்துக்கு வேறு. நமக்கு வேறு. நமக்குள் வடநாட்டில் வேறு. தென்னாட்டில் வேறு. வைஷ்ணவருக்கு வேறு. ஸ்மார்த்தருக்கு வேறு.

சாஸ்திரங்களையெல்லாம் காலத்துக்குத் தகுந்தபடி மாற்றிக் கொண்டு போகிறோம். வேதத்தைத்தான் மாற்ற முடியாது. உண்மையான வேதமாக இருந்தால்.

### நாட்டு விதி

நாட்டு விதி என்பது அர்த்த, நீதி சாஸ்திரங்களின் விதி. இதனைத் தற்காலத்தோர் அரசியல் விதியென்று சொல்லுகிறார்கள். இதுவும் சாஸ்திர விதியோடு சேர்ந்ததுதான். ஆனால் மற்ற இலக்கணம் முதலிய சாஸ்திரங்களின் விதிகளைக் காட்டிலும் அரசியல் விதிகள் மிகவும் விரைவுடன் மாறுபடுவதால் இதனைத் தனியாக ஒரு பகுதியாக்கும்படி நேரிட்டது. எனவே, தெய்வ விதிக்குப் பரிபூரண

மாக உட்பட்டு சாஸ்திர விதிகளையும் நாட்டு விதிகளையும் மேன்மேலும் புத்திசாலித்தனமாகச் சீர் திருத்திக் கொண்டு வந்தால், மனுஷ்ய ஜாதிக்கு க்ஷேமமுண்டாகும்.

---

## மாலை

காளிதாஸன் தொடுத்தது

15 செப்டம்பர் 1916 நள ஆவணி 31

குறிப்பு:—பார்க்க: **பாரதி நூல்கள்** மூன்றும் தொகுதி—பகுதி—சமூகம்.

---

## மாலை

காளிதாஸன் தொடுத்தது

19 செப்டம்பர் 1916 நள புரட்டாசி 4

குறிப்பு:—பார்க்க: **பாரதி நூல்கள்** மூன்றும் தொகுதி. பகுதி—கலைகள்—மாலை (1) **விக்டர் �ஷ்யூகோ என்ற பிரஞ்சு ஞானியின் வசனங்கள்** என்ற கட்டுரையும் இக்கட்டுரையோடு சேர்க்கப்பட்டுள்ளது.

# லோகோபகாரம்

சக்திதாஸன் எழுதியது

22 செப்டம்பர் 1916 நள புரட்டாசி 7

ஏற்கெனவே 'சக்தி தர்மம்' என்ற மகுடத்தின் கீழ் ஓரிரண்டு விஷயங்கள் எழுதி யிருக்கிறேன்.

'லோகோபகாரம்' என்றாலும் அதே அர்த்தந் தான். லோகோபகாரமாவது லோகத்துக்கு உப கரணம் அல்லது கருவியாக நடத்தல்.

லோகத்துக்கு உபகாரத்தை அதாவது இனிய செய்கையைச் செய்தல். லோகத்துக்கு இனியது செய்வேன், லோக சக்திக்கு ஒரு கருவியாகவே தொழில் செய்கிறேன். சக்தியின் கருவியாக இருந்து தொழில் செய்வதையே சக்தி தர்மம் என் றும் சொல்லுகிறோம். பிறருக்கு நாம் செய்தல் இஃதேயாம்.

லோகத்துக்கு இனியது செய்வோன் தன் உள் ளத்தில் பயம் வைத்துக் கொண்டிருக்கலாகாது. பயம் தீர்வதற்கு வழியென்ன? பகை தீர்ந்தால் பயந் தீரும். பகை தீர்க்கும் வழியென்ன? நம்முடைய மனத்தில் பிறர்மீது பகை யெண்ணம் தோன்றாம லிருக்கவேண்டும். பாம்பினிடத்திலே நாம் விரோத புத்தி கொள்ளாவிட்டால் அது நம்மைக் கடிக்காது. இந்த வார்த்தையைப் பரிஹாசம் பண்ணுதல் எளிது. யாரும் செய்யலாம். ஆனால் அது உண்மை.

பாம்பைப் பழக்கி வைக்கும் திறமை அன்புக்குண்டு; பாம்பினிடத்தில் கருணை செய்யும் ஞானியைப் பாம்பு கடிக்காது. லோகோபகாரத்தைக் கருதி அந்த ஞானி மனதிலே அன்புடன் அந்தப் பாம்பைக் கோபித்தால் அது அவ்விடம் விட்டு ஓடிப் போய்விடும்.

எல்லா ஜீவராசிகளிடத்தும் அன்பு செலுத்த வேண்டும். இதுவே புத்தன் சொல்லிய தர்மம். மஹான்களெல்லாம் காட்டிய வழி இதுதான். தற்காலத்தில் மனித ஜாதி கூடியவரை நாகரிகப் பட்டிருப்பதால், மிருகங்கள், பக்ஷிகள், பூச்சி, புழு இவற்றால் மனிதனுக்குள்ள பயம் அநேகமாகத் தீர்ந்துபோய் விட்டது.

இப்போது மனிதர் ஒருவருக்கொருவர் பயப் படுவதுதான் அதிகம். இதற்கு இதுவரை மனித ஜாதியார் கண்டுபிடித்து அனுசரணையில் வழங்கி வரும் மருந்து உபயோகமில்லை. பயத்தினால் விரோதம் வளர்கிறது. விரோதத்தால் போர் உண்டாகிறது; மனித ஜாதி வீணாக அழிகிறது. எல்லோருக்குமே நஷ்டமுண்டாகிறது. பரஸ்பர பயம் நீங்க வேண்டுமானால் அதற்குப் போர் சரியான மருந்தில்லை. உலகம் தோன்றிய காலமுதல் இன்றுவரை போர்கள் நடந்துதான் வருகின்றன. இது மட்டிலும் மனித ஜாதியிலே ஒருவருக்கொருவர் பயப் படுவது துளிகூடக் குறையவில்லை.

அன்பிருந்தால் பயந் தெளிந்துபோகும். ஒரே குடும்பத்திலே ஒருவரை யொருவர் கண்டு மரண பயங்கொள்வதில்லை. உலக முழுதும் ஒரே குடும்பத்

தைப்போல் வாழக்கூடாதா? எளியவன் அன்பு தொடங்கி வலியவன் சும்மா இருந்தால் ஒன்றும் நடக்காது. எளியவன் வலிமையை விரும்பி நடக்க வேண்டும். வலியவன் எளியவனிடம் அன்பு செலுத்த வேண்டும்.

யாரிடத்திலும் அன்புடன், யாரிடத்திலும் பயமின்றி நல்லோன் லோகோபகாரஞ் செய்கின்றான்; பராசக்தியின் கையிலே தன்னை ஒரு கருவியாக ஒப்புவித்து விட்டு, அவள் சித்தப்படி தொழில் செய்து வருகிறான். உலகத்தை ஆக்குதல், காத்தல், அழித்தல் என்ற மூன்று தொழிலுக்கும் பராசக்தி வெவ்வேறுவிதமான கருவிகளை வழங்குகிறாள். காற்றும் ஒளியும், வெம்மையும், மண்ணும், நீரும், சித்தமும் உயிரை ஆக்குவதற்குக் கருவிகளாகின்றன.

காற்றும், ஒளியும், வெம்மையும், மண்ணும், நீரும், சித்தமும், பிற உயிர்களும் உயிரைக் காப்பதற்குக் கருவிகளாகின்றன.

இவையனைத்தும் காலமும் சேர்ந்து நாசத்திற்குக் கருவிகளாகின்றன. மனித வுயிராகிய நான் மற்ற மனித வுயிர்களைக் காக்கும் கருவியாகத் தொழில் செய்வது நன்றா? அழிக்கும் கருவியாகப் போவது நன்றா? காப்பது நன்று.

மேலும் கர்ம விதியை மறக்கலாகாது. காக்க விரும்புவோன் காக்கப்படுவான்; அழிக்க விரும்புவோன் அழிக்கப்படுவான். நன்மை விரும்பினால் நன்மை விளையும்; இல்லாவிட்டால் விளையாது.

ஒருவன் லோகோபகாரத்தை மாத்திரமே விரும்பி நடக்கத் தொடங்கினால் அவனுடைய சொந்த வியாபாரங்களுக்குச் சேதமுண்டாகு மென்று சிலர் நினைக்கிறார்கள். இது பிழை. தனது இன்பத்தை விரும்புவோன் முதலாவது செய்ய வேண்டிய காரியம் லோகோபகாரம்.

"நன்றி யொருவருக்குச் செய்தக்கால் அந் நன்றி" நமக்குத் திரும்பி வந்தே தீரும். அடுத்த ஜன்மத்திலன்று; இந்த ஜன்மத்திலேயே திரும்பி வரும். இது கண்ணாலே கண்ட செய்தி. செல்வம், புகழ், துணை, வினையேற்றம் முதலிய எந்த நலத்தை ஒருவன் விரும்பினபோதிலும், பிறர்க்கு நன்மை செய்யாவிட்டால் அது கைகூடாது. அனுபவத்திலே பார்த்துக் கொள்ளலாம். குடும்பத்தைக் காப்பவன், ஊருக்கு நலஞ் செய்வோன் இவர்கள் உண்டு வாழ்ந் திருப்பதனால் உலகத்துக்கு நன்மையன்றோ? நீ பிறரைக் காப்பாற்றினால் தெய்வம் உன்னைக் காப் பாற்றும்.

தெய்வம் உண்டு. "நலஞ் செய்வோன் என்றும் கெட்டவழி சேரமாட்டான்" என்று கீதை சொல்லு கிறது. அவனுக்குக் கெடுதி நேரிடாதபடி அவ னுடைய யோக க்ஷேமத்தைத் தான் சுமப்பதாகத் தெய்வம் வாக்களித்திருக்கிறது. ஆனால் ஆரம்பத் திலே சோதனைகள் நேரிடும். மனந்தளராமல் லோகோபகாரம் செய்துகொண்டே போனால் பிறகு சோதனைகள் நின்றுபோய் நன்மை உதயமாகும். லோகோபகாரத்திலே "ஆரம்பத்தில்" மனத் தளர்ச்சி ஏற்படுவது சகஜம்.

"ஏதடா இது! தெய்வத்தை நம்பி, தெய்வமே கர்த்தா, நாம் கருவி யென்று நிச்சயித்து மற்றவர்களுக்கு நன்மை செய்யப்போன இடத்தில் நமக்குத் தீமையுண்டாகிறதே! கிணறு வெட்டப்போன இடத்தில் பூதம் புறப்படுகிறதே! உலகத்தைக் கிளி யென்று நினைத்து அதன் பசி தீரப் பால் வார்க்கும்படி போனல் அது கழுகாக மாறி நம்மைக் கொத்துகிறதே!' என்று திகைத்துப் போய் மனிதன் லோகோபகாரத்தைக் கைவிடக்கருதல் ஸாமான்யம். இது தவறு. தெய்வம் நமக்குத் தகுதி யேறும் பொருட்டாக நம்மைச் சோதனை செய்கிறது. உள்ளம் பதருதிருந்தால் விரைவிலே வானந் தெளியும்'

லோகோபகாரம் எப்போது, எந்த வயதில் தொடங்கலாம்? இப்போது, இந்த நிமிஷத்திலே தொடங்க வேண்டும். யார் தொடங்கலாம்? ஆண், பெண், அலி, வலியவன், எளியவன், கிழவன், குழந்தை, குருடன், நொண்டி எல்லோரும் தொடங்க வேண்டும்.

பிறருக்கு இனியது செய்தலாவது யாது? நோய் தீர்த்தல், உணவு கொடுத்தல், அறிவு கொளுத்துதல் முதலிய செய்கை.

பிறரென்றால் அதற்கெல்லையுண்டா? சக்திக்குத் தக்கபடி எல்லே. குடும்பத்தைக் காத்த பிறகு நாட்டைக் காக்கவேணும். பிறகு மனித ஜாதி முழுதையும் காக்கவேணும்.

லோகோபகாரத்தினுல் மனிதன் என்ன பய னடைவான்? எப்போது?

லோகோபகாரத்தையே பரிபூரணமாகச் செய் வோன் மனிதநிலை கடந்து அமரநிலை பெறுவான். இவ்வுலகத்தில் இந்தப் பிறவியில் பயன் அடை வான். செய்கையின் வேகத்துக்குத் தக்கபடி பயனின் வேகம்.

சக்தி காக்கும்

# நவராத்திரி

சி. சுப்பிரமணிய பாரதி

4 அக்டோபர் 1916 நள புரட்டாசி 19

இத் தலைப்புடன் இரண்டு கட்டுரைகள் மூன்றும் தொகுதியில் வெளிவந்துள்ளன. பகுதி—தத்துவம்.

கீழ்க்கண்ட பகுதி கடைசிப் பத்தியாக இரண்டாம் கட்டுரையில் இருக்கவேண்டும். ஆனால் அது வெளியாகவில்லை.

"அறிவு தான் விரும்பும் பொருளின் இயற்கையைப் பெற்றுவிடுமென்பதை அநுபவத்தில் தெரிந்து கொள்வதும் எளிது. ஆதலால், நவராத்திரி பூஜை தொடங்கியிருக்கும் இக்காலத்தில் எல்லா வஸ்துக்களையும் எல்லா அணுக்களையும் இயக்குகின்ற பராசக்தியை ஸ்தாபனம் செய்துகொள்ளுவோம். அகண்டத்தில் விளங்கும் தேவியைப் போற்றுவோம். உலகமே அவள் வடிவமாதலால் உலகத்தை வணங்குவோம். இமயமலையிலே பார்வதியாகவும், தெற்கு முனையிலே கன்யாகுமரியாகவும் திருக்கோயில் கொண்டவளை மஹாலக்ஷ்மி தேவியை, அறிவை, சக்தியை, ப்ரதிஷ்டை செய்து பூஜிப்போம். ஓம்."

# மாலை

**காளிதாஸன் தொடுத்தது**

18 *அக்டோபர்* 1916 *நள ஐப்பசி* 3

குறிப்பு:— இக் கட்டுரை **மாலை** (2) என்ற தலைப்புடன் மூன்றாம் தொகுதியில் **கலைகள்** என்ற பகுதியில் வெளியாகியுள்ளது.

மூன்றாம் தொகுதியில் **கவி** என்ற தலைப்பில் உள்ள கட்டுரையின் முதற்பகுதி **மாலை** என்ற இக்கட்டுரையின் பாகமாக முதலில் வந்திருக்கிறது.

**சமூகம்** என்ற பகுதியில் **ஹிந்துக்களின் கூட்டம்** என்ற கட்டுரையில் **ஜாதிப் பிரிவு** என்ற பகுதியாக வந்துள்ள பாகமும் **மாலை** என்ற இக்கட்டுரையிலே கடைசிப் பாகமாக முதலில் வந்திருக்கிறது.

# ஜப்பானியக் கவிதை

**மிஸ்டர் சி. சுப்பிரமணிய பாரதி**

18 *அக்டோபர்* 1916 — *நள ஐப்பசி* 3

குறிப்பு :— இக்கட்டுரை **பாரதி நூல்கள்** மூன்றும் தொகுதியில் **கலைகள்** என்ற பகுதியில் சேர்க்கப்பட்டுள்ளது. இருப்பினும் அது சரியானபடி முழு உருவத்துடன் இல்லை. கட்டுரையின் ஒரு பகுதியும், இடையிடையே சில சில வாக்கியங்களும் அதிற் காணப்படவில்லை. ஆதலால் சுதேசமித்திரனில் வெளியாகி யுள்ளபடி முழுக் கட்டுரையையும் இங்கு தருகிறோம்.

ஸமீபத்திலே "மாடர்ன் ரிவ்யூ" என்ற கல்கத்தாப் பத்திரிகையில் உயோநே நோகுச்சி என்ற ஜப்பானியப் புலவர் ஒரு லிகிதம் எழுதியிருக்கிறார். அதிலே அவர் சொல்வதென்ன வென்றால் :- இங்கிலாந்து அமெரிக்கா என்ற தேசங்களிலுள்ள இங்கிலீஷ் கவிதையைக் காட்டிலும் ஜப்பானியக் கவிதை சிறந்தது. காரணமென்ன ?

மேற்குக் கவிதையில் சொல்மிகுதி. எண்ணத்தை அப்படியே வீண் சேர்க்கையில்லாமல் சொல்லும் வழக்கம் ஐரோப்பியக் கவிதையிலே இல்லை. எதுகை, சந்தம் முதலியவற்றைக் கருதியும், சோம்பற் குணத்தாலும், தெளிவில்லாமையாலும், பல சொற்களைச் சேர்த்து வெறுமே, பாட்டை அது போகிற வழியெல்லாம் வளர்த்துக்கொண்டே போகும் வழக்கம் ஐரோப்பாவிலும் அமெரிக்கா

விலும் அதிகமிருக்கிறது. தம்முடைய மனதிலுள்ள கருத்தை நேரே வெளியிடுவதில் மேற்குப் புலவர் கதைகளெழுதுவோரைக் காட்டிலும் சக்தி குறைந் திருக்கிறார்கள்.

ஜப்பானில் அப்படியில்லை. வேண்டாத சொல் ஒன்றுகூடச் சேர்ப்பது கிடையாது. கூடைகூடை யாகப் பாட்டெழுதி அச்சிடவேண்டும் என்ற ஒரே ஆவலுடன் எப்போதும் துடித்துக்கொண்டிருப் பவன் புலவனாகமாட்டான். கவிதை யெழுதுபவன் கவியன்று; கவிதையே வாழ்க்கையாக உடையோன், வாழ்க்கையே கவிதையாகச் செய்தோன், அவனே கவி. புலவனுக்குப் பணம் ஒரு பொருளன்று. வானத்து மீன், தனிமை, மோனம், பலர்களின் பேச்சு இவற்றிலே ஈடுபட்டுப்போய், இயற்கை யுடனே ஒன்றாகி வாழ்பவனே கவி.



ஜப்பானிய பாஷையில் பதினேழசை கொண்ட 'ஹொக்கு' என்ற பாட்டு ஒரு தனிக் காவியமாக நிற்கும். முப்பத்தோரசையுள்ள 'உத்தா' (உக்தம்) என்பதும் அங்ஙனமே. உயோநே நோகுச்சி தமது கருத்தை விளக்கும் பொருட்டுச் சில திருஷ்டாந்தங் கள் காட்டியிருக்கிறார். அமெரிக்காவில் மிஸ் ரீஸ் (Miss Lizette Woolworth Reese) என்பதோர் கவிராணி யிருக்கிறார். வேண்டாதவற்றைத் தள்ளி விடுவதில் அந்த மிஸ் ரீஸ் என்ற பெண் புலவர் பெயர் வாங்கியிருக்கிறார். அநாவசியமான பதச் சேர்க்கை, அநாவசியமான கருத்து—விளக்கம் என்ற இரண்டுமில்லாமல் முத்துப்போலே பதங்கள்

கோக்கும் நல்ல தொழிலாகிய, அக் கவிராணி இங்கிலீஷ் பாஷையில் எழுதியிருக்கும் அடிகள் சிலவற்றை நோகுச்சி எடுத்துக்காட்டுகிறார்.

மழை

(மிஸ் ரீஸ் எழுதியதன் மொழிபெயர்ப்பு மாதிரியடிகள்)

ஓ! வெண்மையுடையது; மழை இளையது. கூரைமேலே சொட்டுச் சொட்டென்று விழுகிறது; வீட்டுக்குள் நூறு வஸ்துக்கள் ஓடி வருகின்றன. பூண்டுகளின் மணம். பழமையின் நினைவு. இவையெல்லாம் புல்லாந்தரையிலே குணந் தெரிகிறது. உடைந்த கண்ணாடித் துண்டு போலே. (1)

சிறிய வெளிக்கதவு புடைக்கிறது பார். அது வரை செவந்த கொடிப்பூண்டுகள் நேரே ஓடிச் செல்லுகின்றன. (2)

ஓ! வீட்டுக்குள் நூறு வஸ்துக்கள் வந்து நுழைகின்றன. கற்பூரச் செடியின் மணம். பழய மகிழ்ச்சி, பழய துன்பம்; இளைய வெண்மழையிலே கிடைத்தன. (3)

மேற்கூறிய பாட்டை எடுத்துக்காட்டிவிட்ட பிறகு நோகுச்சி சொல்லுகிறார் :—

"வெண்மையுடையது; மழை இளையது" என்ற முதலடியில் வியப்பில்லை. அதிஸாமான்யமான வார்த்தை. கடைசி விருத்தம் வயிரம்போலிருக்கிறது. அதை மாத்திரம் தனிக் கவிதையாக வைத்துக்கொண்டு மற்றதையெல்லாம் தள்ளிவிடலாம். ஜப்பானியப் புலவன் அப்படியே செய்திருப்பான்

சிறிய பாட்டுப்போதும். சொற்கள், சொற்கள், சொற்கள்-வெறும் சொற்களை வளர்த்துக்கொண்டு போய் என்ன பயன் ?

ஜப்பானிலே பதினெட்டாம் நூற்றாண்டில் "பூஸோன் யோஸாஹோ" என்ற ஜப்பானியக் கவிராயர் ஒரு 'ஹொக்கு' (பதினெழுசைப்பாட்டு) பாடியிருக்கிறார். அதன் மொழிபெயர்ப்பு :—

"பருவமழையின் புழையொலி கேட்பீர், இங் கென் கிழச் செவிகளே." இந்த ஒரு வசனம் ஒரு தனிக் காவியம். பாட்டே இவ்வளவுதான்.

மேற்படி ஹொக்குப் பாட்டைப் படித்துவிட்டுத் திரும்பத் திரும்ப மனனம் செய்யவேண்டும். படிப்பவனுடைய அனுபவத்திற்குத் தக்கபடி அதிவிருந்து நூறு வகையான மறைபொருள் தோன்றும். பல பல பதங்களை அடுக்கி ஏடுகளைப் பெருக்குவது சிறந்த கவிதையன்று. கேட்பவனுள்ளத்திலே கவிதை யுணர்வை எழுப்பி விடுவது சிறந்த கவிதை.

★

மற்றுமொரு நேர்த்தியான "ஹொக்குப்" பாட்டு. வாஷோ மத்ஸுஸோ (Basho Matsuso) என்றொரு ஜப்பானியக் கவி யிருந்தார். இவர் வறுமையே விரதமாகப் பூண்டிருந்தாராம். ஒரு சீடன் இவரிடம் கல்வி கற்று முடிந்து வீட்டுக்குத் திரும்புகையிலே இவரிடம் மூன்று ரியே (அதாவது ஏறக்குறைய முப்பது வராகன்) காணிக்கையாகக் கொடுத்தான். இவர் ஒருநாளுமில்லாதபடி புதிதாக

வந்த இந்தப் பணத்தை வைத்துக் காப்பது தமக்குத் தொல்லையாதலால் வேண்டியதில்லை என்று திரும்பக் கொடுத்து விட்டாராம்.

இவருக்கு காகா (Kaga) என்ற ஊரில் ஹொகூஷி என்றொரு மாணாக்கர் இருந்தார். இந்த ஹொகூஷியின் வீடு தீப்பட்டெரிந்துபோய் விட்டது. அந்தச் செய்தியை ஹொகூஷிப் புலவர் தமது குருவாகிய "வாஷோ—மத்ஸுவோ" என்பவருக்குப் பின்வரும் பாட்டில் எழுதியனுப்பினர்.

"தீப்பட்டெரிந்தது :
விழு மலரின்—அமைதியென்னே !"

மலர் தனக்கு வாழுங்காலம் மாறிக் கீழே விழும் போது எத்தனை அமைதியுடனிருக்கிறதோ அத்தனை அமைதியுடன் மனிதனுக்கு வருந் துன்பங்களை நோக்குகிறன். 'வீடு தீப்பட்டெரிந்தது. ஆனல் அது பற்றித் தன் மனம் அமைதி யிழந்து போகவில்லை' என்ற விஷயத்தை ஹொகூஷி இந்தப் பாட்டின் வழியாகத் தெரிவித்தார்.



"சுருங்கச் சொல்லி விளங்க வைத்தல்" ஜப்பானியக் கவிதையின் விசேஷத் தன்மையென்று நோகுச்சிப் புலவர் சொல்வதுடன், ஆங்கிலேயரின் கவிதை இதற்கு நேர்மாருக நிற்கிறதென்றும் சொல்லுகிருர். நமக்குள்ளே திருக்குறள் இருக்கிறது. "கடுகைத் துளைத்தேழ் கடலைப் புகட்டிக் குறுகத் தறித்த குறள்." கிழக்குத் திசையின் கவிதையிலேயே இவ்விதமான ரஸம் அதிகந்தான்.

தமிழ் நாட்டில் முற்காலத்திலே இது மிகவும் மதிப் பெய்தி நின்றது. ஆனாலும், ஒரேயடியாய் கவிதை சுருங்கியே போய்விட்டால் நல்லதன்று. ஜப்பா னிலே கூட எல்லாக் கவிதையும் "ஹொக்குப்" பாட்டன்று. நோகுச்சி சொல்வதிலே அருமையான உண்மை யிருக்கிறது.

"எப்பொருள் யார் யார் வாய்க் கேட்பினும், அப்பொர்ருள் மெய்ப்பொருள் காண்பதறிவு."

# ஏன்

காளிதாஸன்

1 நவம்பர் 1916 நள ஐப்பசி 17

பார்க்க :—பாரதி நூல்கள் மூன்றும் தொகுதி.
பகுதி—சமூகம்

---

# புயற் காற்று

22 நவம்பர் 1916 நள கார்த்திகை 8

குறிப்பு:—இப் பாடல் பாரதி நூல்கள் முதல் தொகுதியில் ஸ்வசரிதையும் பிற பாடல்களும் என்ற பகுதியில் வந்துள்ளது. இதுவும் அடுத்து வரும் புதுச்சேரியில் புயற்காற்று என்ற கட்டுரையும் பாரதியார் புதுச்சேரியில் வாழ்ந்த காலத்தில் ஏற்பட்ட இயற்கை நிகழ்ச்சியைக் குறிக்கின்றன.

# புதுச்சேரியில் புயற் காற்று

சி. சுப்பிரமணிய பாரதி எழுதியது

27 நவம்பர் 1916 நள கார்த்திகை 13

இரவு

நள வருஷம் கார்த்திகை மாதம் 8-ம் தேதி புதன்கிழமை இரவு புதுச்சேரியில் யுகப் பிரளயத்தைப் போலே யிருந்தது.

நெடும் பொழுதாக — புதன்கிழமை மாலை தொடங்கியே—மழையும் காற்றும் கடுமையாகத்தான் இருந்தன. இடைவிடாத மழை. இடைவிடாத காற்று.

இரவு பதினெரு மணிக்குமேல் பெரிதாக வளர்ந்து விட்டது. ஊழிக் காற்று; படீல், படீல், படீல்.

வீடுகள் இடிந்து விழுகின்றன; மரங்கள் சாய்கின்றன; காந்த விளக்குக் கம்பி அறுந்து போகிறது. நான்கு சுவர்களும் மேலே விழுந்து விடும் போலிருந்தன; நல்ல கோட்டை போன்ற வீட்டிலே இருந்தேன். இருந்தாலும் சத்தம் பொறுக்க முடியவில்லை. ஊழிக் காற்று. மருத்துக்களின் களியாட்டம். பேரச்சம்.

வெளியே என்ன நடக்கிறதென்று சாளரத்தைத் திறந்தால் மழைநீர் சரேலென்று வெள்ள

மாக உள்ளே பாய்கிறது. ஒன்றும் கண்ணுக்குத் தெரியவில்லை. ஒரே பேரிருள். திறந்த சாளரத்தை மூடுவது பிரமப் பிரயத்தனம்.

### காலைப் பொழுது

கார்த்திகை மாதம் 9-ம் தேதி வியாழக்கிழமை நல்ல பொழுது விடிந்தது. புயற்காற்று நின்றது.

ஊர்க்காரர் வெளியேறி வீதிக்கு வந்தார்கள். புதுச்சேரிப் பட்டணத்தை நேற்றுப் பார்த்த கண்ணுக்கு இன்று அடையாளம் தெரிய இடம் இல்லை. தெருவெல்லாம் ஒடிந்த மரங்கள். தென்னையும் பூவரசும் வீதிகளில் அதிகம். நூற்றில் எண்பது முறிந்து கிடந்தன. ஓடுகளும், மாடங்களும், கூரைகளும் சேதப்படாத வீடு நான் ஒன்றுகூடப் பார்க்கவில்லை. சில கூரைகள் நெடுந்தூரம் தள்ளி விழுந்து கிடந்தன. காலையிலே தபால் வரவில்லை. தந்திக் கம்பிகளும் காந்த விளக்குக் கம்பிகளும் அறுந்துபோய் விட்டன. காந்த விளக்குத் தொழிற் சாலையின் தலை விழுந்து விட்டது. ஈசுவரன் கோயிலில் சிகரம் விழுந்து விட்டது. சுற்று வீதியில் ஏழைக் குடிசைகள் அழிந்து போய்விட்டன. உயிர்ச் சேதமும் நிகழ்ந்திருக்கிறது. தொகை தெரியவில்லை............

இதுவரை கிடைத்த தகவல் :—

முத்தியால் பேட்டையில் 6000 வீடு நெசவுகாரருண்டு. அநேகமாக அத்தனை வீட்டிலும் தறி, சாமான் எல்லாம் சேதம். பெரும்பாலும் வீடுகளே

சேதம். மொத்த நஷ்டம் கணக்கிட முடியவில்லை. ஜனச்சேதம் அதிகமில்லை.

பாக்கமுடையான் பேட்டையில் கிராமத்தில் பெரும்பகுதி அழிந்து போய்விட்டது. ஜனச்சேதம் அதிகம்.

அரியாங்குப்பம், குறிச்சிக்குப்பம் முதலிய பக்கத்துக் கிராமங்களிலெல்லாம் ஜனச் சேதமும் வீடு நஷ்டமும் ஏற்பட்டதாகத் தெரிகிறது.

பல வாலிபர்கள் ஜனக் கஷ்டத்தை இயன்ற வரை நீக்கும் பொருட்டாக அன்னதானம் செய்து வருகிறார்கள். இன்றுகூட ஊதலடிக்கிறது.

புயற்காற்றுத் தேவரை வணங்குகிறோம். அவர்கள் உலகத்தில் சாந்தி யேற்படுத்துக.

(வெள்ளி நவம்பர் 24, புதுச்சேரி)

புதன்கிழமை ராத்திரி அடித்தது புயற்காற்றில்லை. அது மருத்து தேவர்களின் களியாட்டம். தெருவெல்லாம் ஒடிந்த மரம். காடு தோட்டமெல்லாம் அழிந்த வனம். பயிரெல்லாம் வெள்ளம் போனதரை.

வீடெல்லாம் இடி சுவர்; பல கிராமங்களிலே கூரை வீடுகள் அநேகமாக ஒன்றுமில்லை யென்று சொல்லுகிறார்கள். கடற்பாலத்திலே போட்டிருந்த ஆஸனப் பலகைகளைக் காற்றுக் கொண்டு போய் விட்டது. கலவை காலேஜில் பெரிய மகிழ மரம் ஒடிந்து விழுந்துவிட்டது. ஜன்னல்கள் சேதம். இன்று வெள்ளிக்கிழமையான போதிலும் காற்றுக்காக ரஜா. பெரிய காலேஜிலும் ரஜா.

அனேகமாக எல்லாக் கச்சேரிகளிலும் ரஜா வாகவே நடந்து வருகிறது. காந்த விளக்குக் கம்பி களை இப்போதுதான் ஒரு ஓரத்தில் ஒட்டத் தொடங்கியிருக்கிறார்கள். தெருவில் வெட்டுண்டு கிடக்கும் மரங்களை இன்னும் எல்லா இடங்களிலும் எடுக்கத் தொடங்கவில்லை. பல இடங்களில் காக்கை கள் விழுந்து செத்துக் கிடக்கின்றன. இந்த மாதிரி உற்பாதம் எந்தக் காலத்திலும் பார்த்தது கிடை யாது என்று பெரிய கிழவர்களெல்லாம் சொல்லு கிறார்கள்.

### ராஜாந் தோட்டம்

இந்த ஊரில் ராஜாத் தோட்டம் ஒன்றிருந்தது. ஆஹா! என்ன நேர்த்தியான உபவனம். வாயு அந்தத் தோட்ட முழுவதையும் அழித்துவிட்டான். மரங்களெல்லாம் கையாலே ஒடிக்கப்பட்ட கரும் பைப் போலே ஒடியுண்டிருக்கின்றன. ஊரைச் சுற்றிலும் நாலு குக்கிராமங்கள் ஜலத்துக்குக் கீழே. இங்கே பஞ்சம். வாழைத் தோட்டங்களை இழந்தார் பலர். வெற்றிலைத் தோட்டமிழந்தவர் பலர். நேற்றுப் பகலில் சலவைப் பங்களாவுக்கு எதிரே வயல் நடுவிலுள்ள ஒரு திட்டை மேலே ஏழெட்டுப் பேர் நின்றுகொண்டிருந்தார்கள். சுற்றிலும் தண் ணீர். ராத்திரி மழைக்கெல்லாம் அந்தத் திட்டை வெளியிலே நின்று விறைத்தார்கள். பகலிலே ஆட்கள் போய் நீரிலே நீந்தி இழுத்துக் கொண்டு வந்தார்கள். தண்ணீரில் எத்தனை ஜனங்கள், எத்தனை ஆடுமாடுகள் மிதந்து போயிருக்கக் கூடுமோ? கணக்குத் தெரிய இடமில்லை. விறகு

வெட்டிகளுக்கு நல்ல லாபம். ஒரு தென்னை மரத்தை வெட்டித் தள்ளினல் இரண்டு ரூபாய் கூலி. வீடு காப்புக்காக அபாயமாகத் தோன்றும் தென்னை மரங்களையெல்லாம் வெட்டுகிருர்கள்........

### அன்னதானம்

அன்னதானம் பல இடங்களில் நடக்கிறது. கஞ்சி விடுகிருர்கள். கஷ்ட நிவர்த்தி போதாது. ஏழை ஜனங்களின் கஷ்டங்கள் பொறுக்கக் கூடிய நிலைமையிலே யில்லை. தெய்வந்தான் ரக்ஷிக்க வேண்டும்.

குறிப்பு—இந்தக் கடுமையான புயற்காற்றைப் பற்றி கவிச் சக்ரவர்த்தி சுப்ரமண்ய பாரதி சரிதம் என்னும் நூலில் திரு ஆக்கூர் அனந்தாச்சாரி அவர்கள் கீழ்க் கண்டவாறு எழுதியுள்ளார்:-

"ஓர் நாளிரவு முழுதும் பாண்டியில் கடும் புயலும் மழையும் மாறி மாறி அடித்தன. வெள்ளைக் காரத் தெருவில் பாபு அரவிந்த கோஷும், ஈசுவரன் தர்ம ராஜா கோவில் தெருவிலுள்ள வீடொன்றில் ஸ்ரீமான் பாரதியாரும், மற்றென்றில் வ. வெ. சு. அய்யரும் குடியிருந்தனர். ஏறக் குறைய எல்லா வீடுகளும் புயலுக்கும் மழைக்கும் சரணுகதி யடைந்து தரையோடு தரையாய்ப் போயின. ஜனங்கள் மழை குளிர் இவற்ருல் நடு நடுங்கிப் போயினர். வ. வெ. சு. அய்யர் வீட்டில் முழங்கால் வரை ஜலம். தமது குழந்தைகளைத் தோளின் மேல் சுமந்து நின்றவண்ணமாகி இரவெல் லாம் இருந்தார். பாரதியார் அதற்கு முந்தின நாள்

11

குடியிருந்த வீடு திடீரென்று விழுந்தது. ஆனால் அன்று புதிதாய்க் குடி புகுந்த வீடோ அப் பெரும் புயல் மழை இவற்றை லக்ஷியம் செய்யாமல் ஒரு வாறு தாங்கியது. ஆனால் நெற்குவியல் மாத்திரம் நனைந்துவிட்டது. பாரதியார் வீட்டுக் கண்ணாடி ஜன்னல்களைச் சுவரில் ஓயாமல் மோத வைப் பதே காற்றின் வேலையாயிருந்தது. கண்ணாடி உடைந்து தூள் படுத்திருக்கும் அவரது குழந்தை கள் மீது விழுந்தது. அப்போது அவைகளுக்கு எவ்வித ஆபத்தும் வரக் கூடாதெனப் பராசக்தி யைப் பிரார்த்தித்தார். இச் சம்பவத்தால்

'காற்றடிக்குது கடல் குமுறுது' முதல்
'தீனக் குழந்தைகள் துன்பப்படா திங்கு
தேவியருள் செய்ய வேண்டுகின்றோம்.'

வரை உள்ளதோர் ஸ்வாரஸ்யமான கீதம் பிறந்தது.

"நள வருஷம் கார்த்திகை மாதம் 8ௌ புதன் கிழமை இரவு முழுதும் பிரளய காலமாகவே இருந்து ஜனங்களுக்குப் பெரிதும் பீதியை உண்டாக்கியது. பொழுது விடிந்தது. புயலும் மழையும் அஸ்த மித்தன. வெளியே வந்து பார்த்தால் அலங்கோல மாகக் கிடந்தது. பாரதி, அய்யர், அரவிந்தர் முதலியோர் பண வசூல் செய்து கஷ்டப்படும் ஜனங்களுக்கு உதவினர்."

குறிப்பு:- ஸ்ரீமதி தங்கம்மாள் பாரதி அவர்கள் எழுதிய பாரதியும் கவிதையும் என்னும் நூலில் இந்தப் புயற்காற்றில் புரட்சிக் கவிஞர் பாரதிதாசன் அவர்களுக்கு நேர்ந்த கொடிய அநுபவமும் மற்ற விபரங்களும் தரப்பட்டுள்ளன.

# சங்கீத விஷயம்

சி. சுப்பிரமணிய பாரதி எழுதுகிறார்

19 டிசம்பர் 1916 நள மார்கழி 15

பொதுப் பள்ளிக்கூடத்தில் சங்கீதம் கற்றுக் கொடுக்கவேண்டும். இது மற்ற நாகரிக தேசங்களில் சாதாரணமாக நடந்து வருகிறது. உயிரிலே பாதி ஸங்கீதம். சாஸ்திரத்தை யாருமே பேணுமலிருந்தால், பாடகர்கூட அதைக் கைவிட்டு விடுவார்கள். ஆதலால் சுதேசமித்திரன் (விசேஷ அனுபந்தம்) பத்திரிகையில் ஸ்ரீமான் ஸ்ரீநிவாசய்யங்கார் ஸங்கீதம் சீர்திருந்த வேண்டுமென்ற கருத்துடன் எழுதிய லிகிதத்தைப் படித்தபோது எனக்குச் சந்தோஷமுண்டாயிற்று.

இங்கிலீஷ் பாஷையிலே ஒரு பெரிய கவிராயன் ஸங்கீத ஞானமில்லாதவரைக் கள்ளரென்றும் குறும்பரென்றும் சொல்லிப் பழிக்கிருன். பாட்டு ஸகலருக்கும் நல்லது. தொண்டையும் எல்லோருக்கும் நல்ல தொண்டைதானென்பது என் மதம். கூச்சத்தாலும் பழக்கக் குறைவாலும் பலர் தமக்கு நல்ல குரல் கிடையாதென்று வீணே நினைத்துக் கொள்கிருர்கள்.

பாட்டுக் கற்க விரும்புவோர் காலையில் சூரியனுக்கு முந்தியே எழுந்து பச்சைத் தண்ணீரிலே குளித்துவிட்டுக் கூடியவரை சுருதியும் லயமும் தவரு

தபடி ஸரளி வரிசை முதலியன பழகவேண்டும். உச்ச ஸ்தாயிதான் எப்போதும் நல்லது. உடம்பை நிமிர்த்து முகத்தை நேரே நிறுத்தி முகத்திலும் வாயிலும் கோணல் திருகலில்லாதபடி வாயை ஆவென்று சிங்கம் போலே திறந்து பாடவேண்டும். தொண்டையிலே கரகரப்பிருந்தால் வெறு மிளகைத் தின்னவேண்டும். கற்கண்டு சேர்ப்பது நல்ல தில்லை.

பாட்டுக் கச்சேரி நடத்தும்போது, நடுவிலே மற்ற வாத்தியக்காரரை வாசிக்கச் சொல்லிவிட்டுப் பாடகர் வெறுமே இருப்பதும், தெம்மாங்கு முதலான வேடிக்கைப் பாட்டுக்கள் பாடுவதும் தமக்கு ரஸப்படவில்லை யென்று ஸ்ரீநிவாசய்யங்கார் சொல்லுகிறார். அதை நான் ஒரு பகுதி ஆக்ஷேபிக்கிறேன். வீணை, குழல் முதலிய இசைக் கருவிகளும், மத்தளம் முதலிய தாளக் கருவிகளும் வாய்ப்பாட்டின் உதவியில்லாமல் தனியே இன்பந் தருகின்றன.

வாத்யம் எட்டாத ஸ்வரத்தைத் தொடப்போய்க் கஷ்டப்படாது. தொண்டையிலே கரகரப்பும், அடைப்பும் இருக்கும்போது கச்சேரி நடத்த வராது. சரியானபடி சுருதி சேர்ந்த பிறகுதான் தொழில் செய்யத் தொடங்கும்.

வீணையும் குழலும் பறையும் வாய்ப்பாட்டில்லா மல் தனியே ஒலிப்பது பழைய நாளிலும் உண்டு. கண்ணன் குழலுக்கு இடைப்பெண் ஒத்துப் பாடியது முண்டு. எம்பெருமான் தனியே இசைப்பது

முண்டு. தெம்மாங்கு முதலியன ஹாஸ்ய ரசத்தை உடையவை. அவற்றை முழுதும் நிறுத்திவிடக் கூடாது. ஆனால் ஒரே மெட்டை வளைத்து வளைத்துப் போன இடமெல்லாம் சொல்விப் பயனில்லை. தமிழ் பிழையாகவும் பொருள் ரஸமில்லாமலும் பாட்டுக்கள் இருந்தால் அவற்றை மன்றிலே கொண்டு வருதல் நியாயமில்லை.

இருந்தாலும் மத்தளக்காரனுக்குப் பாட்டுக்காரன் பயந்து கட்டுப்பட்டு நடக்கும் விபரீதம் சில இடங்களிலே காணப்படுவதைக் கண்டனை செய்து ஸ்ரீநிவாஸய்யங்கார் சொல்லும் வார்த்தை ஒப்புக் கொள்ளத்தக்கது.

ஏனென்றால் பாட்டுக்காரன் தனது பாட்டுக்களுக்குத் தவறாமல் தாளம் போட்டு வரவேண்டும். இவ்வளவு தாள ஞானம் இருந்தால் பாடகனுக்குப் போதும். அதிகமிருந்தால் மிச்சம். இந்த விஷயந் தெரியாமல் மத்தளக்காரனுக்குப் பாட்டுக்காரன் பயப்படுவது மிகவும் வேடிக்கை.

ஸ்ரீமான் ஸ்ரீநிவாசய்யங்கார் ராகப் பழக்கம், வர்ணங்கள், கீர்த்தனங்கள் முதலிய விஷயங்களைப் பற்றி எழுதியிருப்பதெல்லாம் (பெரும்பகுதி) கேட்டவுடன் நியாயமென்று கொள்ளத்தக்கது. கீர்த்தனங்கள் பழகுவது மாத்திரம் அவரவரிஷ்டப்படி போகவேண்டும். எது எப்படியாயினும் யாராவதொரு வித்வான் இந்தத் தமிழ்நாட்டுக்குப் புதிய கீர்த்தனங்கள் ஏற்படுத்தும் வழிகாட்டிக் கொடுத்

தால், ஆயிரம்பேர் அதைப் பின்பற்றி மேன்மை பெறுவார்கள்.

குறிப்பு:—இதே தலைப்புடன் பாரதி நூல்கள் மூன்றும் தொகுதியில் மற்றொரு கட்டுரை இருக்கிறது. அக்கட்டுரை பாட்டு என்ற தலைப்புடன் சுதேசமித்திரனில் வெளியானதை முன்பே எடுத்துக் காட்டியிருக்கிறோம். இக்கட்டுரை அத்தொகுதியில் சேரவில்லை.

# காலம்

காளிதாஸன்

26 டிசம்பர் 1916 நள மார்கழி 22

'ஜாதி' என்ற சொல் இரண்டர்த்தமுடையது. முதலாவது, ஒரு தேசத்தார் தமக்குள் ஏற்படுத்தி வைத்துக் கொள்ளும் பிரிவு. வேளாள ஜாதி, பிராமண ஜாதி, கைக்கோள ஜாதி என்பதுபோல். இரண்டாவது, தேசப் பிரிவுகளைத் தழுவிய வேற்றுமை ஜப்பானிய ஜாதி, சீன ஜாதி, பார்ஸீ ஜாதி, பாரத ஜாதி, ஆங்கிலேய ஜாதி, ஜர்மானிய ஜாதி, ருமானிய ஜாதி என்பதுபோல். இவ்விரண்டும் அதிக அனுகூலம் இல்லையென்பது ஸ்ரீமான் ரவீந்திரநாத டாகுருடைய கக்ஷி.

அமெரிக்காவிலே பிறந்தவன் தன்னை அமெரிக்க ஜாதியென்பதும், இங்கிலீஷ் ஜாதி இல்லையென்றும் நினைத்துக் கொள்ளுகிறான். இங்கிலாந்திலுள்ள ஆங்கிலேயனுக்கும் குடியரசுத் தலைவன் வில்ஸனுக்கும் நடை, உடை, ஆசாரம், மதம், பாஷை எதிலும் வேற்றுமை கிடையாது. ஆனால் தேசத்தை யொட்டி வேறு ஜாதி, நேஷன். இந்த தேச ஜாதிப் பிரிவு மேற்குப் பக்கத்தாரால் ஒரு தெய்வம் போலே ஆதரிக்கப்படுகிறது. அங்கு, யுத்தங்களுக்கு இக்கொள்கை ஒரு முக்கிய காரணம். எல்லா தேசத்தாரும் ஸகோதரரென்றும், மனுஷ்ய

ஜாதி முழுதும் ஒன்றேயென்றும், ஆதலால் தேச வேற்றுமை காரணமாக ஒருவரையொருவர் அவ மதிப்பதும் அழிக்க முயல்வதும் பிழைகளென்றும் ஸ்ரீ டாகுர் சொல்லுகிறார்.

அமெரிக்காவில் ஒரு சபையிலே இவர் மேற்படி கொள்கையை எடுத்துக் காட்டுகையில், அந்த தேசத் தானொருவன் இவரை நோக்கி, "இவ்விதமான கொள்கையிலிருந்தது பற்றியே உங்கள் தேசத்தை அன்னியர் வென்று கைப்பற்றிக் கொள்ள நீங்கள் தோற்றுக் கிடக்கிறீர்கள்" என்றான்.

"நாங்கள் இப்போது புழுதியோடு புழுதியாக விழுந்து கிடந்தாலும் எங்கள் பூமி புண்யபூமி. உங்களுடைய செல்வத்தின்மேலே தெய்வசாப மிருக்கிறது" என்று ரவீந்திரநாத டாகுர் அவருக்கு மறுமொழி சொன்னாராம். அதாவது, இந்த நிமிஷத் தில் செல்வத்திலும், பெருமையிலும் நம்மைக் காட்டி லும் அமெரிக்கா தேசத்தார் உயர்வு பெற்றிருந்த போதிலும், இந்த நிலைமை எப்போதும் மாறாம லிருக்குமென்று அமெரிக்கர் நினைப்பது பிழை. நாங்கள் தெய்வத்தையும் தர்மத்தையும் நம்பி யிருக் கிறோம். கீழே விழுந்தாலும் மறுபடி எழுந்து விடுவோம். அமெரிக்கா விழுந்தால் அதோகதி. ஆதலால், இனிமேலேனும் ஹிந்து தர்மத்தை அனு சரித்து உலக முழுவதிலும் எல்லா தேசத்தாரும் உடன் பிறப்பென்றும், சமானமென்றும் தெரிந்து கொண்டு, பரஸ்பரம் அன்பு செலுத்தினால் பிழைக் கலாமென்று ரவீந்திரர் அவர்களுக்குத் தர்மோப தேசம் செய்கிறார்.

வெளித் தேசத்தாருக்குத் தர்மோபதேசம் செய்கையில், நமது நாட்டில் குற்றங்கள் நடப்பதைப் பார்த்துக் கொண்டிருக்கலாமா? இங்கே, அநாவசியமான ஜாதி விரோதங்களும், (அன்புக் குறைவுகளும்) அவமதிப்புக்களும், வளரவிடலாமா? அவற்றை அழித்து உடனே அன்பையும், உடன் பிறப்பையும் நிலைநாட்டுவது நம்முடைய கடமையன்றோ?

எது எப்படியானாலும், இந்த தினத்தில் இந்த க்ஷணத்தில் நாமெல்லோரும் (பறையர், பார்ப்பார், எல்லாரும்) ராஜாங்க விஷயத்தில் ஒரே ஜாதி. இப்போது எங்களுக்கு அதிகாரிகள் தயவுசெய்ய வேண்டிய விஷயம் என்னவென்றால்;

எல்லா ஜாதியாரும் சீட்டுப் போட்டுப் பிரதிநிதிகள் குறிக்க வேண்டும். அந்தப் பிரதிநிதிகள் சேர்ந்ததொரு மஹாசபை வேண்டும். ராஜ்யத்தில் வரவு செலவு உட்பட எல்லா விவகாரங்களும் மேற்படி மஹாசபையார் இஷ்டப்படி நடக்க வேண்டும். அவ்வளவுதான். மற்றப்படி ஆங்கிலேய சாம்ராஜ்யத்தை விட்டு விலகவேண்டுமென்ற யோசனை எங்களுக்கில்லை. மேற்படி பிரார்த்தனை பிராமணர் மாத்திரம் செய்வதாக அதிகாரிகள் நினைக்கலாகாது. எல்லா ஜாதியாரும் சேர்ந்து விண்ணப்பம் செய்கிறோம். விடுதலை விண்ணப்பத்துக்கு நல்ல உத்தரவு கொடுக்கவேணும்.

குறிப்பு:—இக்கட்டுரை பாரதியார் நூல்கள் மூன்றாம் தொகுதியில் சமூகம் என்னும் பகுதியில் தேசியக் கல்வி என்ற கட்டுரையின் ஒரு

பகுதியாகத் தவறுகச் சேர்க்கப்பட்டுள்ளது. தேசியக் கல்விக்கும் இதற்கும் சம்பந்தம் இல்லை என்பதை எளிதில் அறிந்து கொள்ளலாம். இது தனிக் கட்டுரையாக இருக்கவேண்டும் என்பதற்காகவே முழுவதையும் இங்கு வெளியிடுகிறோம்.

---

# வளர் பிறை

காளிதாஸன்

11 ஜனவரி 1917 — நள மார்கழி 28

பார்க்க:—பாரதி நூல்கள் இரண்டாம் தொகுதி. பகுதி—கதைக் கொத்து.

# தர்மம்

சக்திதாஸன்

16 ஜனவரி 1917 நள தை 4

இக்கட்டுரை மூன்றும் தொகுதியில் வெளிவந்துள்ளது. பகுதி - தத்துவம்.

ஆனால் இதன் கடைசி இரு பத்திகளாகிய கீழ்க்கண்டவை அதில் வெளியாகவில்லை. அவற்றை இங்கு தருகிறோம்.

இவருடைய கேள்விகள் சற்று விநோதமாகத் தோன்றியபடியால் அவற்றைப் பற்றி இத்தனை தூரம் எழுதும்படி நேரிட்டது. மேற்படி விசாரணைக்குத் தீர்ப்புச் சொல்ல வேண்டுமானால் தர்க்க சாஸ்திரத்தில் வல்லவர்கள் வேண்டும்.

பொதுவாக எனக்குள்ள புராதனக் கொள்கையை மாத்திரம் நான் தெரிவித்துக் கொள்ளுகிறேன். நல்லொழுக்கமாவது என்னவென்றால் தெய்வத்தை நம்பிப் பிறருக்குத் தீங்கு நினைக்காமல் நம்மிஷ்டப்படி நடத்தல்.

## நாற்குலம்

சக்திதாஸன்

13 ஜனவரி 1917 — நள தை 6

பார்க்க:—மூன்றும் தொகுதி. பகுதி—சமூகம்.

---

## பழைய உலகம்

காளிதாஸன்

19 ஜனவரி 1917 — நள தை 7

பார்க்க:—மூன்றும் தொகுதி. பகுதி—சமூகம்.

---

## கிளிக் கதை

காளிதாஸன்

26 ஜனவரி 1917 — நள தை 14

பார்க்க:—இரண்டாம் தொகுதி. பகுதி—கதைக் கொத்து.

# குடிப் பாங்கு

காளிதாஸன்

2 பிப்ரவரி 1917 நள தை 21

இங்கிலாந்திலுள்ள "ந்யூ ஸ்டேட்ஸ்மன்" என்ற பத்திரிகையில் ஷை தேசத்துக் குடியுரிமைக் காப்பு மஹாசபையின் கிளையாகச் சேர்ந்த வியாபார ஐக்யப் பகுதிச் சங்கத்தின் கௌரவ காரியதரிசி ஒரு கடிதமெழுதி யிருக்கிறார். அதில் ஒரு பகுதி இங்கு மொழிபெயர்க்கப் படுகிறது. ஷை மஹா சபையின் நோக்கங்கள் என்னவென்றால்:—

1. 1916-ஆம் வருஷத்து ராணுவச் சேவக விதிகளை நீக்கிவிடும்படி வேலை செய்வதும், நமது (ஆங்கிலேய) ஜாதிக்கு ராணுவச் சேவகம் எப்போதும் கட்டாயமாகாதபடி தடுப்பதும்;

2. சொல்லுரிமை, குடிவிசாரணை (படை விசாரணை யல்லாதது) முதலிய ப்ரிடிஷ் ஜாதியாரின் மற்றக் குடியுரிமைகளையும் காப்பாற்றிக் கொள்ளுதல்;

3. குடி விடுதலைக்கு இடர் விளைவிக்கக்கூடிய ராணுவச் சேவகச் சட்டம், பூமி ரக்ஷணைச் சட்டம் முதலிய சட்டங்களின் அமுலைக் கவனித்துக் கொண்டு வருதல்;

4. ஷை சட்டங்களின் குண காரியங்களை வளரவிடாதபடி எதிர்த்தல் என்பன.

உள்நாட்டு மந்திரியாகிய மிஸ்டர் ஸாமுயெல் ஷெ சபையின் நோக்கங்களைக் குறிக்குமிடத்தே தாம் விரோதப்படுவதாகவும், ஷெ சபையின் காரியம் தேச நன்மைக்குக் கேடு விளைவிக்கு மென்றும் சொல்லுகிறார். ஆனால் இந்த சபையின் தலைவரோ ராபர்ட் ஸ்மில்லி, பண்டித க்ளிபோர்டு, மாஸிங்ஹாம், ப்ரெய்ல்ஸ் போர்டு முதலிய கீர்த்தியுள்ள பண்டிதர். இவர்களுடைய கார்டிப் நகரத்துக் கூட்டத்திற்குக் கிரயச் சீட்டு வாங்கி வந்த ஜனங்களைத் தவிர்த்து மற்றப் பிரதிநிதிகளின் விவரம் பின்வருமாறு:—

வியாபார ஐக்கியக் கிளைகள் - 220 பிரதிநிதி. வியாபார சபைகளும் ஸ்தலத் தொழிற் சங்கங்களும் அனுப்பிய பிரதிநிதிகள் 37.

ஸமூஹ (ஸோஷலிஸ்ட்) கக்ஷி சபைகளும் ஸமாதான சபைகளும் அனுப்பிய பிரதிநிதிகள் 100. மதாபிமான சங்கத்தார்களின் பிரதிநிதிகள் 13. கூட்டுறவு சபையார்களின் பிரதிநிதிகள் 16. ஸ்திரீ சபையாரின் பிரதிநிதிகள் 29. பகுதிப் படாதோர் 34.

இந்த மஹா சபையுடன் 500 சபைகள் வரை சேர்ந்திருக்கின்றன.

மேற்படி காரியதரிசி சொல்லி யிருப்பதிலிருந்து ஷெ சபையின் காரியங்கள் உள்நாட்டு மந்திரிக்கு ஸம்மதமில்லை யென்று தெரிகிறது. அப்படியிருந்தும், உள்நாட்டு மந்திரி அவர்களுடைய கூட்டத்தைத் தடுக்காமலிருந்தது அவருடைய பெருந்

தன்மையை விளக்குகிறது. ஜனங்களின் உரிமைகளை எதிர்த்தால் பிரமாத முண்டாகுமென்ற தீர்மானத்தினால் உள்நாட்டு மந்திரி மேற்படி கூட்டத்தை அதிகாரிகள் தடுக்காதபடி நியமித்திருக்கலாமென்று மேற்படி காரியதரிசி தமது கடிதத்தில் சொல்லுகிறார். அதை நாம் நம்பவில்லை. ப்ரிடிஷ் மந்திரிகள் இயற்கையிலேயே குடியுரிமைகளைத் தடுக்க மனதில்லாதவர்கள். இது நிற்க. "எப்பொருள் யார் யார் வாய்க் கேட்பினும், அப்பொருள் மெய்ப்பொருள் காண்பதறிவு" என்று திருவள்ளுவர் சொல்லுகிறார்.

ஆதலால், ஷை குடியுரிமைக் காப்புச் சபையார் தேசப் பொதுமைக்கு விபத்து நேர்ந்திருப்பதைத் தடுத்து வெற்றி பெறுவதாகிய ஒரே நோக்கத்துடன் எல்லாக் காரியங்களும் செய்யாதபடி சில்லரைச் சட்டங்களின் மெதுவான ப்ரயோகங்களைக் கண்டனம் பண்ணிக் கொண்டிருப்பது லௌகிகமில்லை யென்றாலும், இந்த விஷயத்தில் அவர்களுடைய செய்கை விபரீதமென்பது மெய்யேயானாலும், அவர்களுடைய வார்த்தையில் எத்தனை குன்றுமணி உண்மை சேர்ந்திருக்கிற தென்பதை நாம் ஆராய்ந்து பார்க்கவேண்டும்.

யுத்தம் நடப்பது காரணமாக ஜனங்களுடைய ஸாதாரண உரிமைகளை அதிகாரிகள் புறக்கணிப்பது சில ஸமயங்களில் அவசியமாக ஏற்பட்ட போதிலும், ஒரேயடியாக ஜன தர்மங்களைப் படுகுழியிலே கொண்டு அமிழ்த்து விடும்படி ஜனத் தலைவர் பார்த்துக் கொண்டிருக்கலாமா? யுத்த

காலத்தில் ஜன உரிமை எவ்வளவு தூரம் வளைய இடங் கொடுக்கலாம்? அதை எல்லைப்படுத்த வேண்டிய காரியம் இப்போது ஐரோப்பியப் பண்டிதர்களை வந்து சூழ்ந்திருக்கிறது.

---

# நானு விஷயங்கள்

காளிதாஸன்

13 பிப்ரவரி 1917 நள மாசி 2

குறிப்பு:—இக்கட்டுரை மூன்றும் தொகுதியில் சமூகம் என்ற பகுதியில் வெளியாகியுள்ளது.

இதில் உள்ள ஒரு பகுதியான பருவ நிலைப்பு என்னும் பாகம் பஞ்சாங்கம் என்ற தலைப்பின் கீழ் கலைகள் என்னும் பகுதியில் தனிக் கட்டுரையாக இருக்கிறது.

---

# நம்பிக்கை

13 பிப்ரவரி 1917 நள மாசி 2

பார்க்க :—மூன்றும் தொகுதி. பகுதி—தத்துவம்.

# தொழில்

5 மார்ச் 1917 நள மாசி 22

## I

(வசனத்திரட்டு—“ஆர்ய” பத்திரிகை)

1. மனுதர்ம சாஸ்திரம் சொல்லுகிறது :—தொழிலாளியின் கை தொழில் செய்யும்போது பரிசுத்தமாகிறது.

2. சீ-கிங் என்ற சீன ஞானி :—தர்மிஷ்டன் எப்போதும் முயற்சியோடிருப்பான்.

3. (நபி) ஸுலேமான் என்ற யூதஞானி :—சோம்பேறியின் மனவிருப்பம் அவனையே கொல்லுகிறது.

4. தோல்ஸ்தோய் என்ற ருஷிய ஞானி :—தொழில் எத்தனை அசுசியாக இருந்தாலும், அதைச் செய்வதில் அவமானமில்லை. சோம்பலொன்றுதான் அவமானம்.

5. உத்தம ஸுக்தம் என்ற பௌத்த நூல் சொல்லுகிறது :—சோம்பல் ஒரு குற்றம். தொழிலின்றி வாழ்தல் ஒரு மலம்.

6. தோரோ என்ற அமெரிக்க ஆசிரியர் :—உடம்பை சோம்பலுக்கும் சொகுசுக்கும் இரையாக்கி வைத்திருப்பவனை ஞானியாகக் கொள்ளலாகாது. ஆத்மாவுக்கு உடம்பே முதலாவது சீடன்.

7. கார்லைல் என்ற ஆங்கிலேய ஆசிரியர்:—சந்தேகம், விசனம், மனச்சோர்வு, கோபம், ஏக்கம், இந்தப் பிசாசுகளெல்லாம் மனிதனை அடிக்கும் பொருட்டுப் பதுங்கி நிற்கின்றன. அவன் சோம்பலுக் கிடங்கொடுக்கும்போது இவையெல்லாம் அவனை வந்து தாக்குகின்றன. தீவிரமாக உடம்பை உழைப்பதே இந்தப் பிசாசுகள் அடிக்காமல் தன்னைக் காத்துக் கொள்ளுவதற்கு நிச்சயமான வழி. தொழிலைக் கைக்கொண்டால், பிறகு எந்தப் பிசாசும் பக்கத்தில் நெருங்காது. மிஞ்சி வந்தால், தூரத்திலிருந்து உறுமும். அவ்வளவுதான்.

8. மோங் தாஞ் என்ற ப்ரான்ஸ் தேசத்துப் பண்டிதர்:—சோம்பலை நரகவாதனைகளில் ஒன்றாகக் கணக்கிடவேண்டும். அதைச் சிலர் சொர்க்க இன்பங்களில் ஒன்றாக நினைக்கிறார்கள்.

9. நபி ஸுலேமான்:-சோம்பேறியே, எறும்பினிடம் போ. அதன் நெறிகளைப் பார். உனக்குப் புத்திவரும்.

## II

## விளக்கம்

### காளிதாஸன்

மேலே மொழிபெயர்த்திருக்கிற வசனங்களில் தொழிலில்லாதவனுக்கு ஆத்ம ஞானமில்லையென்று தோரோ (6) சொல்லுகிறார். ஆத்மாவுக்கு முதலாவது சிஷ்யன் சரீரமென்பது அவர் கொள்கை. ஆத்ம

ஞானி சோம்பேறியாக இருக்கமாட்டானென்ற இவருடைய கொள்கை பகவத்கீதையின் கருத்துக்கு இணங்கியதேயாகும். தொழிலின்றியிருப்பவனுக்கு விடுதலையில்லை, ஞானமில்லை, பக்தியில்லை. அவனுக்குச் சோறு கிடையாது; தண்டச் சோறு தின்று தொழில் செய்யாதிருப்பவன் கொழுத்து நோய் கொண்டு சாவான். இந்த விஷயங்கள் பகவத்கீதையில் மிகவும் தெளிவாகச் சொல்லப்படுகின்றன.

கார்லைல் (7) என்ற ஆங்கிலேய ஆசிரியர் தொழிலின்றி யிருப்பவனைச் சந்தேக முதலிய பிசாசுகள் வந்து தாக்குமென்று சொல்லிய வார்த்தை பொது அனுபவத்திலே காணத்தக்கது. சந்தேகம், பயம் முதலிய பிசாசுகள் வந்து தாக்காமலிருக்கும் பொருட்டாகவும், அங்ஙனம் தாக்கும் போது அவற்றை மடிக்கும் பொருட்டாகவும் தொழிலென்ற மருந்து கடவுள் கொடுத்திருக்கிறார்.

பூஜை, கல்வி, போதனை முதலியனவும் சரீர உழைப்புப் போலவே கவலையை நீக்கி உடம்பைப் பேணும். உண்மையாகச் செய்யப்படும் பூஜையும், உபதேசமும் எல்லாத் தொழில்களைக் காட்டிலும் சிறந்தன. பொய்ப் பூஜையும், காசைப் பெரிதாக நினைத்துச் செய்யும் ஞானோபதேசமும் மிகவும் இழிந்த தொழில்களாகும். பல இடங்களில் வியாபாரிக்குள்ள மதிப்புப் பூசாரிக்கும் குருக்களுக்கும் இல்லாதிருக்கக் காண்கிறோம். இவர்களுக்கு மதிப்புக் குறைவுண்டாகும் காரணம் உண்மைக் குறைவு தவிர வேறொன்றுமில்லை. அறிவை நல்ல வழிகளில் உழைப்பவனுடைய உடம்பு முயற்சி யில்லாமல்

சோம்பிப் படுத்திருக்க நியாயமில்லை. சோம்பேறியின் விருப்பங்கள் கவலைகளாக மாறுகின்றன. கையினால் உழைக்காமல் மனத்தால் விரும்புவோன் தன்னைத்தானே தின்று கொள்ளுகிறான். சோம்பேறியின் மனத்தைக் கவலைகள் சூறையாடுவது போல், அவனுடம்பை வியாதிகள் சூறையாடுகின்றன. முயற்சியினாலே செல்வம் வருமென்றும் முயற்சி யில்லாவிட்டால் வறுமை வருமென்றும் திருவள்ளுவர் சொல்லுகிறார். முயற்சி யில்லாதவருக்கு நோய்வரும், பந்தங்கள் வரும்; அவர்கள் மோங்தாஞ் ஆசிரியர் (8) சொல்வது போல் இவ்வுலகத்திலேயே நரகவாதனைப்படுவார்கள். ஆதலால் ஹிந்துக்களாகிய நாம் முயற்சியைக் கைவிடாமல் நடத்தவேண்டும். முயற்சியுண்டானால் உடம்பிலே வலிமையுண்டு. உள்ளத்திலே மகிழ்ச்சியுண்டு, கல்வியுண்டு, செல்வமுண்டு, நீண்ட வயதும் புகழும் இன்பங்களுமுண்டு. முயற்சி யிருந்தால் பயமில்லை. முயற்சி யுண்டானால் வெற்றியுண்டு. முயற்சி உடையவனுக்கு விடுதலை கைகூடும்.

# பொழுது போக்கு

28 மார்ச் 1917      நள பங்குனி 15

(காளிதாஸனுக்கும் ஸந்தோஷராயருக்கும் நடந்த ஸம்பாஷணை)

காளிதாஸன் எழுதியது

ஸந்தோஷராயர்:—காளிதாஸரே, பத்திரிகைகளில் ஏதேனும் இன்று புது விசேஷங்களுண்டா?

காளிதாஸன்:—ஒன்றுமில்லை.

ஸந்:—ருஷியாவில் ராஜ்யம் புரண்டு போனதாகவும், இரண்டே சில்லரை ஜார் ராஜினமாக் கொடுத்ததாகவும் போட்டிருந்ததே; அதற்கப்பால் என்னயிற்று?

காளி:—இரண்டே சில்லரை ஜார் என்கிறீரே அதென்ன?

ஸந்:—பழைய ஜார் நிக்கொலஸ் ஒன்று; அவருடைய ரகஸ்யப் பிள்ளைதான் சில்லரை; ஆக ஒன்றே சில்லரை. பின்பு சக்கரவர்த்தியின் தம்பியாகிய மைக்கேல்; ஆக இரண்டே சில்லரை.

காளி:—சரிதான்.

ஸந்:—ருஷியாவில் நிரங்குசமாகப் பத்திரிகைச் சுதந்திரமில்லாமலும், பேச்சுச் சுதந்திரமில்லாமலும், தம்மிஷ்டப்படி அரசாண்டுவந்த ஜார் சக்ரவர்த்திகளின் அதிகாரம் தொலைந்து ஜனங்களின்

அதிகாரம் ஏற்பட்டதைப்பற்றி உமக்கு சந்தோஷ முண்டாகவில்லையா?

காளி:—வாஸ்தவந்தான்.

ஸங்:—என்ன ஓய் வாஸ்தவந்தானென்று இலேசாகச் சொல்லுகிறீரே? ஜனாதிகாரத்துக்குத் தானே ஐரோப்பாவில் இத்தனை பெரிய சண்டை நடக்கிறது? அதற்காகத்தானே நம்முடைய பிரிட்டிஷ் சிநேகிதர்களும் மற்ற தேச ராஜ்யத்தாரும் கோடி கோடியாகப் பணத்தை வாரி இறைக்கிறார்கள்? லக்ஷக்கணக்கான மனிதர்களைப் பலியிடுகிறார்கள்? பூமண்டல முழுதும் ஜனாதிகாரமும், விடுதலையும் நிலைபெறும். அப்போதுதான் நம்முடைய நேச ராஜ்யங்களின் நோக்கம் முழுதும் நிறைவேறி, இவர்களுடைய கீர்த்தி எக்காலத்திலும் அழியாமலிருக்கும். ருஷியாவில் பழைய ராஜாங்கத்தை எதிர்த்து, அதன் பொருட்டாகச் சிறைப்பட்டிருந்த தேசாபிமானிகளை யெல்லாம் விடுவித்துவிட்டு, அவர்களுக்குப் பதிலாக ரஹஸ்யப் போலீஸாரைச் சிறைக்குள்ளே தள்ளிவிட்டார்களென்று பத்திரிகையில் வாசித்தேன். இதில் எனக்குண்டான ஸந்தோஷம் சொல்லி முடியாது.

காளி:—சரிதான்.

ஸங்:—ருஷியாவிலே இதுவரை தேசாபிமானிகள் பட்டுவந்த கஷ்டங்களை ஆதிசேஷனாலேகூட வர்ணிக்க முடியாது. போலீஸ்காரரின் சந்தேகத்துக்குட்பட்டவர்கள் ஸைபீரியாக் காடுகளிலும், உள்நாட்டுச் சிறைகளிலும் துன்பப்பட்டு மடிந்த கொடுமைகளை யெல்லாம் நீர் சரியாகக் கேள்விப்

பட்டதில்லையென்று நினைக்கிறேன். கேள்விப்பட்டிருந்தால் இப்போது நீர் அதிகமாக ஸந்தோஷமடைவீர்.

காளி:—சரிதான். ஆனால் நீர் போன மாஸம் என்னைப் பார்த்தபோது ஜார் சக்ரவர்த்தியையும் அவருடைய மந்திரிகளையும் புகழ்ந்து பேசினதாக ஞாபகமிருக்கிறது.

ஸங்.—ஓயாமல், ஹிந்துக்களைப் புகழ்ந்து கொண்டிருந்தால் நீர் மகிழ்ச்சியுடன் கேட்டுக் கொண்டிருப்பீர். போன மாஸம் நான் ஜார் சக்ரவர்த்தியைப் புகழ்ந்த காரணம் வேறு. ராஜ்யத்தில் எத்தனை கஷ்டங்களிருந்தபோதிலும், ரஸ்புதீன் முதலிய துர்மந்திரிகளின் வார்த்தையைக் கேளாமல், அவர் நம்முடைய நேச ராஜ்யங்களின் விஷயத்தில் உண்மை செலுத்தி வந்ததன் பொருட்டாக அவரைப் புகழ்ந்தேன். இப்போது............

காளி:—சரி; சரி; நிறுத்தும். வேறேதேனும் கதை சொல்லும் கேட்கிறேன்.

ஸங்:—ஏழெட்டு நாளைக்கு முன்பு நம்மூருக்கடுத்த பிள்ளைப்பட்டி யென்ற கிராமத்தில் ஒருவன் கோபத்தால் தன் மனைவி வயிற்றில் மிதித்தானாம். அவள் செத்துப்போய் விட்டாளாம். அந்த விஷயம் இப்போது போலீஸ் விசாரணையிலிருக்கிறதாம். நீர் கேள்விப்பட்டீரா?

காளி:—ஆம்.

ஸங்:—அதிலிருந்து, அந்தக் கிராமத்து ஜனங்களெல்லாம் ஆலமரத்தடியில் ஒரு கூட்டம்கூடி இனி

மேல் யாரும் பெண்டாட்டியை அடிக்கக் கூடாது என்று தீர்மானம் செய்து கொண்டார்களாம். அது கிடக்கட்டும், காளிதாஸரே, உம்மிடம் நான் ஒரு முக்கியமான விஷயம் கலந்து பேசவில்லையே?

காளி:—சங்கதி யென்ன?

ஸங்:—ஏப்ரல் மாதம் 22-ந் தேதி ஒரு வால் நக்ஷத்திரம் எரிநக்ஷத்திரம் ஒன்றைத் தன் வாலில் கவ்விக்கொண்டுவந்து பூமியின்மேல் மோதப் போவதாகவும் அதனால் இந்த பூமண்டலம் தூள் தூளாக நொறுங்கிவிடப் போவதாகவும் சொல்லுகிறார்களே? அது வாஸ்தவமாக இருக்குமா?

காளி:—பொய்க் கதை.

ஸங்:—உமக்கெப்படித் தெரியும்? அமெரிக்கா தேசத்தில் யாரோ ஒரு பெரிய வான சாஸ்திரப் பண்டிதர் சொல்லி யிருக்கிறாராமே? அது பொய் யென்று நீர் எப்படிக் கண்டீர்?

காளி:—பொய்க் கதைதான், எனக்கு நிச்சயமாகத் தெரியும். ஏப்ரல் மாதம் 23-ம் தேதி நீர் என்னிடம் வந்து சேரும். அப்போது காரணங்கள் சொல்லுகிறேன்.

ஸங்:—பூமி தூளாய்ப்போன பிறகு நான் உம்மிடம் வந்து கேட்பதெப்படி? நீர் விடை சொல்வதெப்படி?

காளி:—இந்த பூமியில் இன்னும் நாமே நெடு நாளிருந்து பலவித நியாயங்கள் நடந்து நிறைவேறுவதைப் பார்க்கப் போகிறோம். பூமியில் நல்ல யுகம் தோன்றப் போகிறது. மனித ஜாதி முழு

மைக்கும் விடுதலை யுண்டாகப் போகிறது. நீர் சொல்லிய ருஷிய ராஜ்யப் புரட்சியானது இனி வரப்போகிற நற்காலத்தின் முன்னடையாளங் களில் ஒன்று. பூமி தூளாகாது. மனிதர் ஒருவருக் கொருவர் செய்யும் அநீதி தூளாகும்.

ஸங் :—சரி; சரி; உம்முடைய ஞானமூட்டையை நம்மிடம் அவிழ்க்கத் தொடங்கிவிட்டீர்........எனக் குக் காபி சாப்பிட நேரமாகிறது. நான் போய் வருகிறேன்.

இவ்வாறு சொல்லி ஸந்தோஷராயர் எழுந்து போய்விட்டார். ஸந்தோஷராயர் வெளிக்கு எப் படிப் பேசியபோதிலும் மனதுக்குள் தெய்வபக்தி யுடையவர். மனுஷ்ய ஜாதியின் முதுகின் மேலே பல்லாயிர வருஷங்களாகச் சுமந்துபோயிருக்கும் அநீதியாகிய மலை சிதறிப் போகவேண்டுமென்பதே அவருடைய கருத்து.

# கடற் பாலத்தில் வர்ணாசிரம சபை

காளிதாஸன்

7 ஏப்ரல் 1917 நள பங்குனி 25

வஸந்த காலத்தில், ஒரு நாள் காலையில் இள வெயில் அடிக்கும் நேரத்தில் வேதபுரத்திலுள்ள கடற்பாலத்தின் கடைசியில், நடுக் கடலின் மீது, ஒரு செம்படவன் உட்கார்ந்து மீன் பிடித்துக் கொண்டிருந்தான். அங்கே நானும், எனது நண்பர் சக்ரவர்த்தி சேஷய்யங்காரும். சரீர சுகத்திற்காக நடை பழகப் போனோம். அங்கு புதிதாகச் செய்து வைக்கப்பட்டிருந்த ராஜாங்கத் தோணிகளின் நிழலிலே போய்ச் சிறிது நேரம் உட்கார்ந்து ஆயாஸம் தீர்த்துக் கொள்ளலாமென்று சேஷய்யங்கார் சொன்னார். அந்த நிழலிலே போய் உட்கார்ந்தோம். என் கையில் சில வர்த்தமானப் பத்திரிகைகள் கொண்டு போயிருந்தேன். அவற்றை யெடுத்து வாசித்துக் கொண்டிருந்தேன். சேஷய்யங்காருக்குப் போது போகவில்லை. அவர் அந்த மீன் பிடிக்கும் செம்படவனிடத்திலே போய்ப் பேச்சுக் கொடுத்தார். அவனோ மீன் சரியாகக் கிடைக்கவில்லை யென்ற கோபத்திலிருந்தான். சிறிது நேரம் கழிந்த பிறகு சேஷய்யங்காரர் என்னை நோக்கி, "வீட்டுக்குக் கிளம்பலாம்; புறப்படும்" என்றார்.

நான் சொன்னேன் :—

"ஸ்வாமி, நான் காலையில் காபி குடித்துவிட்டுத் தான் வீட்டிலிருந்து புறப்பட்டேன். எனக்கு இங்கே சிறிது நேரம் தனியே யிருப்பதில் பிரிய முண்டாகிறது. நீர் அவஸரமானால் வீட்டுக்குப் போம். நான் கொஞ்சம் இங்கே இருந்துவிட்டு வருகிறேன்" என்றேன்.

அப்போது சேஷய்யங்கார் புன்சிரிப்புடனே, "நான் ஆஹாரமில்லாமல் வெளியே புறப்படும் வழக்கம் எப்போதுமே கிடையாது. எனக்கும் பசியில்லை. ஆதலால், நானும் இங்கேயே உம்மோடு சிறிது நேரம் பொழுது போக்கத் தயாராக இருக்கிறேன். இந்த இடத்தில் ஒரு சபை கூடிப் பேசினால் மிகவும் நன்றாக இருக்கும். என்ன செய்யலாம்? அந்தச் செம்படவன் பேச வரமாட்டான். அவன் மீன் கிடைக்கவில்லையென்று என் மேலே கோபித்துக் கொள்ளுகிறான். நீரோ பத்திரிகையிலுள்ள அண்டப் புளுகுகளையெல்லாம், வேத வுண்மை போலே கருதி, மஹா சிரத்தையுடன், நுழைந்து நுழைந்து வாசித்துக் கொண்டிருக்கிறீர். விடுங் காணும்! பத்திரிகையை அப்பாலே போடும். காற்று மிகவும் ரஸமாக வீசுகிறது. எனக்கு இந்த இடத்தை விட்டுப் போக மனதாகவில்லை. ஏதாவது பேச்செடும்" என்று சொன்னார்.

விதியே சேஷய்யங்கார் ரூபமாக வந்து நம்மைப் பேச்சுக்கிழுக்கிற தென்பதை நான் தெரிந்து கொண்டு பின்வருமாறு சொல்லலானேன் :—

"ஸ்வாமீ, என்னால் வஞ்சனையில்லை. சபை போடுவோம், அதைப்பற்றி யாதொரு ஆக்ஷேபமுமில்லை. ஆனால் உபந்யாஸ மெல்லாம் நீர் தான் செய்ய வேண்டும். நீர் உபந்யாஸி; நான் தான் சபைக் கூட்டம். நடத்தும்" என்றேன்.

அதற்கு சேஷய்யங்கார் சொல்கிறார்:—

"நாம் உபந்யாஸ கர்த்தா; நீர் அக்ராஸனாதிபதி; அந்தச் செம்படவன் தான் சபை" என்றார்..

அப்போது, சற்று தூரத்திலே யிருந்த அந்தச் செம்படவன் சொல்லுகிறான்:—

"சாமிமாரே, நீங்கள் வந்தாலும் வந்தீர்கள். எனக்கு மூன்று மீன் கூட முழு மீனைக் கிடைக்கவில்லை." சேஷய்யங்கார் இதைக் கேட்டவுடனே கால் ரூபாயை அவன் கையிலே கொண்டு போய்க் கொடுத்து அவனை யழைத்து வந்து நாங்களிருந்த நிழலிலே உட்காரும்படி செய்தார். இவருடைய படாடோபத்தைக் கண்டு ஆரம்பத்திலே அவன் கொஞ்சம் பயந்தான். பிறகு அவர் சொன்னபடி கேட்டால் காசு கிடைக்குமென்று தெரிந்து கொண்டு, அவன் எங்கள் பக்கத்தில் வந்து உட்கார்ந்தான்.

சேஷய்யங்கார் உபந்யாஸிக்கலானார்:—

"நாலு ஜாதி தான் உண்டு. பிரம, க்ஷத்திரிய, வைசிய, சூத்ரர்: படித்தவன் பிராமணன்; வீரன் க்ஷத்திரியன்; தந்திரசாலி வைசியன்; தொழிலாளி சூத்திரன். இது எந்த தேசத்திலும் உண்டு. எந்தக் காலத்திலும் உண்டு. இதை மாற்றவே முடியாது."

செம்படவன்:—"மெய்தான் சாமி; மெய்தான் சாமி" என்றான்.

சேஷய்யங்கார்:—"இந்தச் செம்படவன் மகன் படித்து சாஸ்திரத் தேர்ச்சி யடைந்து பிரமஞானி யாய் விட்டால் அவனுக்கு என் பெண்ணை விவாகம் செய்து கொடுப்பேன். அதில் தோஷமில்லை" என்றார்.

செம்படவன் நடுங்கிப் போனான். ஐயங்காருக்கு புத்தி ஸ்வாதீனமில்லை யென்று நினைக்கத் தொடங் கினான்.

சேஷய்யங்கார் மொழிகிறார்:—"ஆனால் குலத் தையும் ஒப்புக் கொள்ளத்தான் வேண்டும். குலத்தளவே யாகும் குணம் என்று பெரியோர் சொல்லியிருக்கிறார்கள். அம்பட்டனுடைய குழந்தை சிறு பிள்ளையாக இருக்கும்போதே ஒருவரும் சொல்லிக்கொடுக்காமல் தானாகவே சிரைக்கக் கற்றுக்கொள்ளுகிறது. கம்பன் வீட்டுக் கட்டுத் தறியும் கவிபாடும்; ராஜா வீட்டுப் பிள்ளை இயற்கை யாகவே சைன்யம் வகுத்து விளையாடிப் பழகுகிறது. தொட்டிற் பழக்கம் சுடுகாடு மட்டும். ஆதலால் பிறவி ஒருவனுடைய குணத்தையும் தொழிலையும் நிர்ணயிக்கத்தான் செய்கிறது. ஆதலால் இப்போதுள்ள ஜாதிப் பிரிவை அதிக மாக மாற்றக் கூட வேண்டியதில்லை. 'எக்குடிப் பிறப்பினும் யாவரே யாயினும் அக்குடியிற் கற் றோரே மேல் வருக' என்று சொல்லி பிராமணப் பதவியிலே சேர்க்க வேண்டும். இதற்கிடையே

திருஷ்டி தோஷம் புத்திசாலித் தனமில்லை. அதை உடனே நிறுத்திப் போடவேண்டும். 'தீண்டாத ஜாதி' என்கிற பேச்சே கூடாது. அது வெறும் பயித்தியம். நந்தன் சிலையை அறுபத்து மூன்று நாயன்மாருக்கு நடுவிலே வைத்து குருக்கள் மணி யடித்துக் கும்பிடவில்லையா? ஜாதியாவது குல மாவது! இவையெல்லாம் லௌகிகம். இதனாலே மனுஷ்ய ஸமத்வத்துக்குக் குறைவு நேரிடக் கூடாது. ராம்தாஸ், கபீர்தாஸ், அவர்கள் சொன்னதெல்லாம் பொய்யா?"

இவ்வாறு சேஷய்யங்கார் நெடுந்தூரம் சொன்னார். போகப் போக அவருடைய பிரசங்கத்தில் நான் கொஞ்சம் கவனக் குறைவாக இருக்கும்படி நேரிட்டது. ஏனென்றால் இவர் பேசிக் கொண்டிருக்கும் போதே எங்கள் பக்கத்தில் ஒரு கிழவன் வந்து நின்றான். அவனுக்கு சுமார் அறுபது வயதிருக்கும் போலே தோன்றிற்று. ஆனால் திடகாத்திர முடையவன். அவன் சேஷய்யங்காருடைய பிரசங்கத்தை மிகவும் ஜாக்கிரதையாகக் கேட்டுக் கொண்டு வந்தான். சேஷய்யங்கார் சொல்லும் வார்த்தைகளிலே ஒன்றிரண்டைக் கேட்டுப் புன் சிரிப்புச் சிரித்தான். ஓரிரண்டு வார்த்தைகள் அவன் முகத்திலே கோபக் குறி விளைவித்தன. நான் அவனைக் கையினால் சமிக்கை காட்டி என்னருகே வரும்படி சொன்னேன். ஸமீபத்தில் வந்தான். "நீ என்ன ஜாதி?" என்று கேட்டேன். "பறையன்" என்றான். இதைக் கேட்டவுடன் சக்ரவர்த்தி சேஷய்யங்கார் திரும்பிப் பார்த்தார்.

II

சக்ரவர்த்தி சேஷய்யங்கார் கிழச் சாம்பானை உட்காரச் சொன்னர். அவன் உட்கார்ந்தான். "நான் சொல்லிய வார்த்தைகளை நீ மிகவும் கவனத்துடன் கேட்டுக்கொண்டிருந்தாயே, நீ யார்? உன் பெயர் என்ன?" என்று சேஷய்யங்கார் சொன்னர்.

அப்போது கிழச்சாம்பான் சொல்லுகிருன்:—

"சாமிகளே, நான் பஞ்சம ஜாதி. என் பெயர் லக்ஷ்மணன். பிராம்மணரே எங்களுக்கு குரு. முன்பொரு மாட்டுக் கொட்டகையில் எங்கள் தாயாகிய ஆதியை பகவன் என்ற பிராம்மணன் மனைவியாகச் செய்து கொண்டான். பிராம்மண ஜாதி எங்களுக்குத் தகப்பன் முறை. இக்காலத்தில் பலர் எங்களுக்கு உபகாரம் பண்ண வருகிருர்கள். எல்லா மனிதரும் சரிசமான மென்றும் மனிதருக்குள் எவ்விதமான பேதமும் கிடையாதென்றும் பலர் சொல்லுகிருர்கள். எல்லாம் வாய்ப் பேச்சாகத் தானிருக்கிறது. நடத்தையில் ஒன்றையும் காணவில்லை. ஹிந்து மதத்தில் எங்களுடைய நிலைமை தாழ்ந்திருக்கிறதென்றும், கிறிஸ்து மதத்தில் சேர்ந்தால் எங்களுடைய நிலைமை மேன்மைப்படுமென்றும் சொல்லிக் கிறிஸ்தவப் பாதிரிகள் எங்களிலே சிலரைக் கிறிஸ்து மதத்தில் சேர்த்தார்கள். அதில் யாதொரு பயனையும் காணவில்லை. நூற்றிலொருவனுக்குப் பத்துப் பதினைந்து ரூபாய் சம்பளத்தில் ஒரு வேலை கிடைக்கிறது. மற்றவர்களெல்லாரும் துரைமாரிடத்தில் சமையல் வேலை பண்ணுதல், பயிரிடுதல், குப்பை வாருதல் முதலிய பழைய

தொழில்களைத்தான் செய்து வருகிறார்கள். எனக்கு முன்னோருடைய மதமே பெரிது. கிறிஸ்தவர்களுடன் எங்களுக்குக் கொடுக்கல், வாங்கல், சம்பந்தம், சாப்பாடு ஒன்றுமே கிடையாது. என்ன கஷ்டமிருந்தாலும் நாங்கள் ஹிந்து மதத்தை விடமாட்டோம். உங்களைப் போலே எல்லாப் பார்ப்பாரும் எங்களிடம் அன்பு பாராட்டினால், பிறகு எங்களுக்கு யாதொரு குறையுமில்லை. தொழில் ஏதாயிருந்தாலும் குற்றமில்லை. ஒரே தேசத்தில் பிறந்து, ஒரே மதத்தைச் சேர்ந்து, ஒரே கூட்டமாக இருக்கும் ஹிந்துக்கள் ஒருவருக்கொருவர் அன்போடிருக்க வேண்டாமா? எங்கள் ஜாதிக்காரருக்குச் சோறும் துணியும் நேரே கிடைத்து வருகிறதா என்பதைக்கூட மற்ற ஹிந்துக்கள் கவனியாமலிருப்பது நியாயமா? எந்தத் தொழில் செய்து பிழைத்தாலும் தெய்வ பக்தி இருந்தால் இஹத்தில் மேன்மையும் பரத்திலே மோக்ஷமும் உண்டு. திருவள்ளுவர் எங்கள் குலத்தில் வளர்ந்தார்.''

இங்ஙனம் அவன் பேசிக்கொண்டு போகையில் சக்ரவர்த்தி சேஷய்யங்கார் அவனை நோக்கி ''உனக்கு வயதென்ன?'' என்று கேட்டார்.

''நீங்களே சொல்லுங்கள். எனக்கு வயதெவ்வளவிருக்கலாம்?'' என்று கிழச் சாம்பான் திருப்பிக் கேட்டான்.

''அறுபதிருக்கும்?'' என்றார் அய்யங்கார்.

''என்னைப் பார்த்தவர்களெல்லாம் ஐம்பதறுபது வயதென்றுதான் மதிக்கிறார்கள். ஆனால் எனக்கு எண்பது பிராயமாய் விட்டது. இந்தப் பாலம்

கட்டினபோது எனக்குத் தெரியும். அந்தக் காலத்தில் நான் இருவது வயதுப் பிள்ளை. நானும் இதில் வேலை செய்தேன். நித்தம் மூன்றணைக் கூலி" என்று கிழவன் சொன்னன்.

"இப்போது உனக்கு ஜீவனம் சுகமாக நடந்து வருகிறதா?" என்று அய்யங்கார் கேட்டார்.

"சுகந்தான் சாமி. இரண்டு பெண்ணும் ஒரு பிள்ளையும் கடவுள் கொடுத்திருக்கிறார். இரண்டு பெண்ணையும் சரியான இடத்தில் கட்டிக்கொடுத்து விட்டேன். மகன் பயிர்த்தொழில் செய்கிறான். நான் மாட்டு வண்டி வைத்திருக்கிறேன். கடலோரத்துக்குக் கிடங்குகளிலிருந்து சரக்கேற்றி வந்தால் வியாபாரிகள் கூலிகொடுப்பார்கள். அதில் எனக்குக் கூடியவரை சரியான வரும்படி கிடைத்து வருகிறது. இப்போது சண்டையினல் மணிலாக் கொட்டை ஏற்றுமதி குறைந்திருக்கிறது. அதனல் எனக்கு வரும்படியில்லாம லிருக்கிறது. இருந்தாலும், கடவுள் கிருபையால் போஜனத்துக்குக் கஷ்டமில்லை" என்று கிழச் சாம்பான் சொன்னன்.

"இவ்வளவு படிப்பு நீ எங்கே படித்தாய்?" என்று நான் அந்தக் கிழச் சாம்பானிடம் கேட்டேன். அதற்குக் கிழச்சாம்பான் சொல்லுகிறான்:—

"என்னுடைய பிதாவுக்கு வாத்தியார் வேலை. அவர் தமிழிலே மேலான படிப்புள்ளவர். நானும் திருக்குறள் முதலிய சாஸ்திரங்கள் படித்திருக்கிறேன். படிப்பிலே என்ன பயனுண்டு, சாமி? பெரியோர்களுடைய சேர்க்கையால் தெய்வபக்தி

ஏற்பட்டது. அதையே ஊன்றுகோலாகக் கொண்டு பிழைத்து வருகிறேன்'' என்றான்.

அப்போது சேஷய்யங்கார் அவனை நோக்கி,—

“இந்த தேசத்து ஜாதிக்கட்டு அநியாயமென்று உனக்குத் தோன்றவில்லையா? தெருவுக்குள் உங்களவர் வரக்கூடாதென்று மற்ற ஜாதிக்காரர் ஏற்பாடு செய்திருப்பது பற்றி உனக்கு வருத்தமுண்டாகவில்லையா? உன்மனம் அதை நினைத்து நினைத்துக் கொதிக்கவில்லையா?'' என்று கேட்டார்.

அதற்குக் கிழச் சாம்பான் :—

“இல்லை, சாமீ; என் மனம் அதிலே கொதிப்படையவில்லை. மனிதருடைய இஷ்டப்படி இந்த உலகம் நடப்பதாக மூடர் நினைக்கிறார்கள். நீங்கள் சொல்லிய அநியாயம் என்கண்ணுக்குத் தெரியத்தான் செய்கிறது. அதிலே வருத்தமில்லை. விதிப்படி எல்லாம் நடக்கிறது. அநியாயம் உலக முழுதையும் சூழ்ந்திருக்கிறது. சீக்கிரம் அழிந்து போய்விடும். உலகத்தில் அநியாயம் குறைவுபடும்போது எங்கள் ஜாதிக்கும் நியாயம் கிடைக்கும். அதைப் பற்றி எனக்குக் கொஞ்சமேனும் பயமில்லை. எந்த அநியாயமும் உலகத்தில் நீடித்து நிற்காது. ராவணாதிகள் இப்போதிருக்கிறார்களா? அவர்கள் காலத்தில் என்ன அநியாயம் நடந்தது! பிராமணர்களுடைய யாகத்தை அழிக்கவில்லையா? மனிதர்களைப் பிடித்துப் பிடித்துத் தின்னவில்லையா?........

கேட்டீர்களா சாமிமாரே? என் தகப்பனார் இறந்துபோய் இப்போது நாற்பது வருஷமாகிறது. அவர் தொண்ணூற்றிரண்டு வயதிருந்தார். சாகும்

வரையில் பேச்சு வார்த்தை தள்ளாடவில்லை. உறுதி யாகவே யிருந்தார். அவர் செத்துப் போவதற்கு இரண்டு மாதங்களுக்கு முன்னே ஒரு நாள் பாதி ராத்திரியில் என்னை எழுப்பிப் பக்கத்தில் உட்கார வைத்துக் கொண்டு பல செய்திகள் சொன்னார். அதில் ஒரு வார்த்தை இப்போது எனக்கு ஞாபகம் வருகிறது. கேட்டீர்களா, சாமிமாரே? என் தகப்ப னார் சொன்னார்: 'அடே, லக்ஷ்மணா, நான் எப்போது செத்துப் போவேனோ தெரியாது. ஆனால் என்னு டைய குரு எனக்குச் சொல்லி வைத்த ஆச்சரிய மொன்றை உனக்குச் சொல்லிவிட்டுப் போகிறேன். கலியுகம் ஐயாயிரம் வருஷத்துக்குப் பிறகு ஒரு புது யுகம் பிறக்கும். அதுதான் கலியுகத்துக்குள்ளே கிருதயுகம். அப்போது இந்த உலகமே மாறும். அநியாயங்களெல்லாம் நொறுங்கித் தவிடுபொடி யாகி விடும். நாலு குலம் மறுபடியேற்படும். அந்த நாலு குலத்தாரும் வெவ்வேறு தொழில் செய்து பிழைத்தாலும், ஒருவருக்கொருவர் அநியா யம் செய்யமாட்டார்கள். துரோகம் செய்யமாட்டார் கள். அன்பே தெய்வமென்று தெரிந்து கொள்ளு வார்கள். அன்பிருந்தால் குழந்தையும் தாயும் ஸமா னம்; ஏழையும் செல்வனும் ஸமானம்; படித்தவனும் படியாதவனும் ஸமானம்; அன்பிருந்தால் மனிதனும் தெய்வமும் ஸமானம்: அன்பு பூமியிலே மேலோங்கி நிற்கும். அப்போது மாதம் மூன்று மழை நேரே பெய்யும். பஞ்சம் என்ற வார்த்தையே இராது. தெற்கு தேசத்தில் பிராமண குலத்தில் கபில முனி வரும் அகப் பேய்ச் சித்தரும் திரும்பி அவதாரம்

செய்வார்கள். அவர்கள் ஊரூராகப் போய் ஜனங்களுக்கு தர்மத்தைச் சொல்லி ஜாதி வழக்கையெல்லாம் தீர்த்து வைப்பார்கள். அப்போது தர்மம் நிலை பெற்று நிற்கும். நீ இருக்கும்போதே இந்தப் புதிய யுகம் ஆரம்பமாய்விடும். உன் கண்ணாலே பார்ப்பாய்' என்று என் தகப்பனார் சொன்னார்."

இங்ஙனம் அந்தக் கிழச் சாம்பான் சொல்லி முடித்தான். பிறகு நேரமாய் விட்டபடியால் சபையைக் கலைத்து விடலாமென்று நான் சொன்னேன். சேஷய்யங்கார் அந்தக் கிழச் சாம்பானைப் பல வார்த்தைகள் சொல்லிப் புகழ்ந்தார். பிறகு அவ்விருவரும் தனியாகப் போய் ஏதோ பேசிக்கொண்டிருந்தார்கள். அப்பால் சேஷய்யங்கார் செம்படவன் கையில் இன்னும் கால் ரூபாய் கொடுத்து, "என்னால் உனக்கு நஷ்டமேற்பட்டதற்குச் சரியாய்ப் போய்விட்டது" என்றார். கிழச் சாம்பானும் விடைபெற்றுக் கொண்டு போனான். நானும் சேஷய்யங்காரும் திரும்பி வீட்டுக்கு வருகையிலே அவர் என்னிடம் ஒரு வார்த்தை கூடச் சொல்லவில்லை. ஏதோ தன் மனதுக்குள் தீர்க்கமான யோசனை செய்து கொண்டு வந்தார். இடையிடையே அவர் முணுமுணுவென்று சொல்லிய வார்த்தைகளில் இரண்டொன்று என் காதில் பட்டது.

"ஹிந்து தேசமே! உன்னுடைய மஹிமையை நான் என்னென்று புகழ்வேன்?" என்றார்.

குறிப்பு:—இக் கட்டுரையின் இரண்டாம் பாகம் 17-4-1917-ல் வெளியானது.

## காமதேனு

7 மே 1917

பார்க்க: மூன்றும் தொகுதி-பகுதி-தத்துவம்.

---

## விளக்கு

சக்தி தாஸன்

10 மே 1917 *பிங்கள சித்திரை 28*

"எழுத்தறி வித்தவன் இறைவனாகும்."

வாத்தியாரும் சரி, தெய்வமும் சரி. கோயிற் குருக்களைக் கொண்டாடுவது போலே பள்ளிக் கூடத்து வாத்தியாரையும் கொண்டாட வேண்டும். பர்மாவில் ஆயிரம் ஆண் பிள்ளைகளில் எழுதப் படிக்கத் தெரிந்தவர்கள் 376 பேர் என்றும்; அதே மாதிரிக் கணக்கு பரோடாவில் 1000-க்கு 175; திருவாங்கூரில் 243; கொச்சியில் 243; வங்காளத்தில் 140 என்றும், சென்னை மாகாணத்தில் எழுத்து வாஸனையுடையவர்கள் 1000-க்கு 138 பேரென்றும் 1911-ம் வருஷத்து ஜனக் கணக்கில் தெரிகிறது. பர்மாவில் புத்த குருக்கள் படிப்புச் சொல்விக் கொடுப்பதை ஒரு கடமையாக வைத்துக் கொண்டிருப்பதால் கொஞ்சம் நல்ல நிலைமையிலிருப்பதாகத் தோன்றுகிறது. பரோடாவில் கல்வி விருத்திக்கு

வேண்டிய ஏற்பாடுகள் தீவிரமாக நடந்து வருகின்றன. திருவாங்கூர், கொச்சி ஸமஸ்தானங்களிலுள்ள சுதேசி அதிகாரிகள் தமது கடமையை பரோடாவுக்கு முந்தியே படிப்பு விஷயத்தில் கொஞ்சம் அதிக சிரத்தையுடன் செலுத்தத் தொடங்கியதாகவும் ஏற்படுகிறது. இந்த விஷயத்தில் நம்மவர் சர்க்கார் அதிகாரிகளுடைய உதவியை எதிர் பார்ப்பது பயனில்லாத முறை. நாட்டை ஆளுவதிலே மிகுந்த செலவு உண்டாவதால் படிப்பை விருத்தி செய்யப் பணமில்லை யென்று அதிகாரிகள் எத்தனையோ தரம் ஸாங்கோ பாங்கமாகச் சொல்லி விட்டார்கள். "படிப்புச் செலவுக்கென்று தனித் தீர்வை போடுங்கள்; ஜனங்கள் ஸந்தோஷத்துடன் செலுத்துவார்கள்" என்று கோகலே விளக்கி விளக்கிச் சொன்னார். அது சர்க்காருக்கு சம்மதமில்லை. ஆகவே, நமது தேசத்து ஜனங்களை ஐரோப்பாவிலுள்ள ஜாதியாரைப் போலவும் ஜப்பானியரைப் போலும் படிப்பு மிகுந்த ஜனங்களாகச் செய்வதற்கு சர்க்கார் அதிகாரிகளிடமிருந்து பணம் கிடைக்கு மென்று நம்பி யிருப்போர் நெடுங்காலம் படிப்பில்லாமலே யிருப்பார்களென்பது "உள்ளங்கை நெல்லிக்கனி போல" விளங்குகிறது. திருவள்ளுவர் சொன்னார்:—

> "விலங்கொடு மக்கள் அனையர் இலங்கு நூல்
> கற்றாரோ டேனை யவர்."

படியாதவனுக்கும் படித்தவனுக்கும் தாரதம்யம் எத்தனை யென்றால், மிருகத்துக்கும் மனிதனுக்கும் உள்ள தத்தனை.

## கூடித் தொழில் செய்

இங்கிலீஷ், ஸம்ஸ்க்ருதம், தமிழ் என்ற பாஷை களில் ஏதேனும் ஒன்று படித்து யாதொரு உத்தி யோகமுமில்லாமல் சும்மா இருக்கும் பிள்ளைகளுக்கு நான் ஒரு யோசனை கண்டுபிடித்துக் கொடுக்கிறேன். இஷ்டமானால் அனுசரிக்கலாம். அனுசரித்தால் லாபமுண்டு.

கூடி வினை செய்வோர்
கோடி வினை செய்வார்

கூட்டம் கூட்டமாகச் சேர்ந்து, கிராமந் தோறும் யாத்திரை செய்யுங்கள். ஊரூராகப் போய்ப் பள்ளிக்கூடங்கள் போடுவதே கைங்கரிய மாக வைத்துக் கொள்ளுங்கள். ஆரம்பத்தில் வண் டிச் செலவுக்குப் பணமில்லையானால் நடந்துபோக வேண்டும். மற்றபடி ஆஹார வ்யவஹாரங்களுக்கு நமது பூர்வ மதாசார்யர்களும், தம்பிரான்மாரும், ஞானிகளும், சித்தர்களும், பக்தர்களும் செய்த படியே செய்யுங்கள். எங்கே போனாலும் உயர்ந்த மதிப்பும், உபசாரங்களும் ஏற்படும். கூட்டத்துக்கு விருந்து காட்டிலேகூடக் கிடைக்கும். அங்கங்கே திண்ணைப் பள்ளிக்கூடங்களும், குடிசைப் பள்ளிக் கூடங்களும் போட்டுத் திறமையுடையோரை வாத்தி யாராக நியமித்துக் கொண்டு போகலாம். யாத்திரை யின்பம், தேசத்தாரின் ஸத்காரம், வித்யாதான புண்யம், சரித்திரத்தில் அழியாத கீர்த்தி இத்தனை யும் மேற்படி கூட்டத்தாருக்குண்டு. படிப்பு எல்லா மதங்களுக்கும் பொது. எல்லா தேசங்களுக் கும் பொது. எல்லா ஜாதிகளுக்கும் பொது. திருஷ்

டாந்தமாக, ஐரோப்பியர் அதிகப் பயிற்சி செய்திருக்கும் ரஸாயனம் முதலிய சாஸ்த்ரங்கள் நமக்கு மிகவும் அவஸரம். எவ்விதமான பயிற்சிக்கும் தேச பாஷைகள் எழுதவும் படிக்கவும் செய்விப்பதே ஆதாரமாகும். அதை முதலாவது வேரூன்றச் செய்ய வேண்டும். ஹிந்துப் பிள்ளைகளே, உங்களுக்குக் கோடி புண்யமுண்டு. கூட்டங் கூடி நாட்டைச் சுற்றுங்கள். தமிழ் வளர்ந்தால் தர்மம் வளரும். பிராமணர் முதலாகப் பள்ளர் வரையிலும், எல்லா ஜாதிகளிலும், எழுதப்படிக்கத் தெரிந்தவர்கள் மிகுதிப்பட்டால், அநாவசியப் பிரிவுகள் நிச்சயமாகக் குறைவுபடும். நமக்குள் கைச்சண்டை மூட்டி விடுவோரையும், பாஷைச்சண்டை, ஜாதிச்சண்டை மூட்டி விடுவோரையும் கண்டால் ஜனங்கள் கை கொட்டிச் சிரிப்பார்கள். ஹிந்துக்களாகிய நாமெல்லாரும் ஒரே கூட்டம், ஒரே மதம், ஒரே ஜாதி, ஒரே குலம், ஒரே குடும்பம், ஒரே உயிர் என்பதை உலகத்தார் தெரிந்து கொள்ளுவார்கள். அதனுல் பூமண்டலத்துக்கு க்ஷேமமுண்டாகும்.

# விடுதலை

காளிதாஸன்

26 மே 1917 *பிங்கள வைகாசி* 13

திருவள்ளுவர் அறம், பொருள், இன்பம் என்கிற மூன்று புருஷார்த்தங்களையும் ஆயிரத்து முந்நூற்று முப்பது குறளுக்குள் பாடிக் காட்டிய திறமையைக் கண்டு வியந்து சிலர் ஔவையாரிடம் சொன்னார்களாம். ஔவையார் நான்கு புருஷார்த் தங்களையும் ஒரே வெண்பாவுக்குள் பாடிக் காட்டினளாம்.

> ஈதல்அறம்; தீவினை விட்டீட்டல் பொருள்; எஞ்ஞான்றும்
> காதலிருவர் கருத்தொருமித்—தாதரவு
> பட்டதே யின்பம்; பரனைநினைந் திம்மூன்றும்
> விட்டதே பேரின்ப வீடு.

கொடுப்பது தருமம்.

பாட்டைக் கொடுத்தாலும் சரி; நாட்டைக் கொடுத்தாலும் சரி; பணம், கல்வி, மருந்து, தைரியம், ஏதேனுமொரு நல்ல பொருளை உடையவன் வேண்டியவனுக்குக் கொடுத்தால் அஃதறம். உலகத்தில் ஸாமான்ய மனிதனைச் சூழ்ந்து மிக்கோர், ஸமானஸ்தர், தாழ்ந்தோர் என மனிதர் மூன்று வகையாகக் காணப்படுகிறார்கள். இந்த மூன்று திறத்தாருக்கும் அவன் கொடுக்க வேண்டிய கொடைகள் காலம், தேசம், இவற்றுக்குத் தக்க

படி அந்தந்த விதமாக மாறி நிற்கும். இன்னின்ன காலத்தில் இன்னின்னருக்கு இன்னின்ன பொருள் கொடுக்க வேண்டுமென்பது தர்மிஷ்டனுக்கு ஸ்வ பாவத்திலேயே தெரியும். சேர்க்கப்படுவது செல்வம். மனிதனுக்கு இன்பம்தரும் பண்டங்களையும் அவற்றைக் கொள்வதற்கு நல்ல கருவியாகிய பொன்னையும் சேகரித்து வைக்க வேண்டும். இடைவிடாமல் சேர்க்க வேண்டும். கை பற்றினபடியாகவே இருக்க வேண்டும். ஆனல் தீயகாரியம் செய்து; கெட்ட தொழில் செய்து சேர்த்த செல்வம் நிற்காது. செல்வம் சேர்ந்த பிறகு அதன் உரத்தால் பிறருக்குத் தீங்கு செய்வாரும் விரைவிலே கெடுவார். "அல்லற் பட்டாற்ரு து அழுதகண்ணீ ரன்றேசெல்வத்தைத் தேய்க்கும் படை" என்று திருவள்ளுவரும் சொன்ஞர். துன்பப்பட்டார் அது பொறுக்காமல் அழும் கண்ணீரானது, அந்தத் துன்ப முண்டாக்கியவனுடைய ஐசுவரியத்தை அறுத்தெறியும் ஆயுதமாகும். செல்வம் இனிது. அது முயற்சியினல் சேர்க்கப்படுவது. பயனுள்ள தொழிலே மேன்மேலும் ஊக்கத்துடனும் அறிவுடனும் செய்வதால் பொருள் பெருகும். தீயதுசெய்தாலன்றிப் பொருள்தேட முடியாதென்று மூடர் நினைக்கிருர்கள். தீயது செய்யாதபடி சேகரிப்பதே பொருளென்றும், மற்றையது பல துன்ப முண்டாக்கி விரைவிலே அருந்து போவதோர் மருளென்றும் ஒளவை சொல்லுகிருள்.

பெண்ணும், ஆணும் அன்பு கொண்டு வாழ்வதே இன்பங்களிலெல்லாம் சிறந்த இன்பம். உணவும், ஸ்நானமும், பூவும், சந்தனமும் முதலிய இன்

பங் களெல்லாவற்றைக் காட்டிலும் காதலின்பமே சிறந்தது. காதலுடைய இருவர் கருத்திலே ஒன்று பட்டவராய் ஆதரவு கொள்ளும் நிலையை மனிதர் கட்டுப்பாடுகளாலும், பணச் செருக்காலும், அநீதி யாலும் பெற விரும்புகிறார்கள். ஆண் பெண் உற வினால் வரும் துன்பந்தான் மனிதருக்கு இவ்வுலகத் தில் மற்றெல்லாத் துன்பங்களைக் காட்டிலும் அதிக மாக ஏற்பட்டு விட்டது. விவாக முறையைச் சில தேசங்களில் நாகம்போலே செய்து விட்டார்கள். தெய்வம் கொடுக்கும் இன்பத்தை மனிதர் அறியா மையாலும், பாபசிந்தையாலும் துன்பமாக மாற்றிக் கொள்ளுகிறார்கள்.

தெய்வத்தை நம்பி மேற்படி மூன்றனுள் எது வும் இன்றியமையாத தில்லையென்று கொண்டு, வருவதுதானே வருமென்று சொல்லி, எல்லாம் தெய்வத்தின் செய்கை யாதலால் நமக் கெவ்வித மான பொறுப்புமில்லை யென்று நடப்பதே விடுதலை இன்பம். துன்பம் எது நேர்ந்தாலும் சரியென்று மனக்கவலையை ஒரேயடியாக நெருப்பிலே போட்டுக் கொளுத்தி விட்டு தெய்வத்தின் நினைப்பே கதி யென்று நிற்பது விடுதலை. "எல்லாத் தருமங்களையும் விட்டு, என்னையே சரணடைக" என்று கீதையும் சொல்லிற்று.

இந்த விடுதலை பெற்றவன் பண்டாரமாகிக் கந்தையுடுத்துப் பிச்சை வாங்கித் தின்பானென்று சில பாமர ஜனங்கள் நினைக்கிறார்கள். அது முற் றிலும் தவறு. ஆயிரத்திலொரு ஜீவன்முக்தன் பண்டார வழியிலே சென்றாலும் செல்லக்கூடும்.

ஆனல் அதுவே மார்க்கமென்று நினைத்துவிடக் கூடாது. ஜனகன் ஜீவன் முக்தி பெற்று ராஜ்ய மாண்டான். அர்ஜுனனும் அப்படியே. ரிஷிக ளெல்லாரும், பெண்டு பிள்ளைகளுடன் சுகமாக வாழ்ந்தார்கள். விடுதலை பெற்றவர் எந்தத்தொழில் செய்தாலும் செய்வார்கள். ஆனல் அந்தரங்க நம்பிக்கை தெய்வ மொன்றினிடத்தேயே செலுத்தி வாழ்வார்கள். "எத்தொழிலைச் செய்தாலும், ஏதவத் தைப் பட்டாலும், முக்தர் மனமிருக்கு மோனத்தே'' என்பது முன்னோர் வாக்கு. பரனை நினைந்து முன் மூன்றையும் விட்டு விடுதல் இன்பமென்று ஔவை கூறினள். பற்று விட்டிருப்பதே விடுதலை. உள்ளத் துறவே துறவு. உள்ளத்துறவுடைய மனிதனை நாம் என்ன அடையாளத்தாலே கண்டு பிடிக்கலாம்? பக்தி முதிர்ச்சிக்கு எது தவருத லக்ஷணம்? "அஞ்சாதே!" என்றது வேதம். பயம் நீங்கி யிருப் பதே விடுதலைக்கு லக்ஷணம். ஒருவன் உண்மை யாகவே தெய்வத்தை நம்பினனு,வீணுக்குச் சொல்லு கிருனு என்பதை அறிய வேண்டுமானல் ஆபத்து வேளையிலே பார்க்க வேண்டும். ஆபத்து நேரும் போது நெஞ்சு நடுங்காம லிருப்பவன் ஞானி, பக் தன், முக்தன். மரணத்துக் கஞ்சாதவன் தெய் வத்தை உண்மையாகச் சரணடைந்தவன். தெய் வத்தை நம்பினல் தீமை நமக்கு வாராதென்பதை ப்ரத்யக்ஷ ஞானமாகக் கொண்டு ஜீவன் முக்தர் எந்தப் பதவியிலிருந்த போதிலும் நிகரற்ற வீரராக விளங்குவார்.

# தெலுங்க மஹா சபை

சக்திதாஸன்

9 ஜூன் 1917 பிங்கள வைகாசி 27

சென்ற வெள்ளிக்கிழமை (ஜூன் 1) யன்று நெல்லூரில் கூடிய ஆந்திர மஹாசபையில் சபா நாயகர் ஸ்ரீ வெங்கடப்பய்ய பந்துலு செய்த உபந்யாஸம் கவனிக்கத்தக்கது. ராஜநீதி சாஸ்த்திரத்தில் தெலுங்கர் நெடுங்காலத்துப் பெருமையுடையார். பாடலீபுத்ர நகரத்தில் நடந்த ஆந்திர ராஜ்யமும் பிற்காலத்தில் தமிழ் நாட்டைக் கட்டியாண்ட விஜய நகரத்து ராஜ்யமும் கீர்த்தி மிகுந்தனவன்றோ? தெலுங்கர் தமிழரை ஆண்ட அடையாளங்கள் நமது பாஷையிலும் ஆகாராதிகளிலும் அழிக்க முடியாதபடி பதிந்து கிடக்கின்றன. நமது ஸங்கீதமும் நாட்டியமும் தெலுங்கிலேயே இன்றுவரை முழுகிக் கிடக்கின்றன. பாடகர்கள் பாடும் கீர்த்தனங்களில் உயர்தரமெல்லாம் தெலுங்குக் கீர்த்தனங்கள். தாசிகள் ஆட்டத்தில் பாடும் வர்ணங்கள் ஜாவளிகள் முதலியவற்றில் நல்ல உருப்படியெல்லாம் தெலுங்கு. நமது கிராமங்களிலுள்ள தெலுங்க ரெட்டிகளும், நாயுடுமாரும், ஆந்த்ரபிராமணப் புரோகிதர்களும், தெலுங்க தாசிகளும் ராயர் சம்ஸ்தான காலத்தில் இங்கே உறுதி பெற்றவர்கள். நமது விவாக காலங்களில் பாடும் பத்யம், லாலி முதலானதெல்லாம்

தெலுங்குமுறை. நமது பாஷையில் "கவனம்" (ஆழ்ந்துநோக்குதல்), "ஜொகுஸா", "எச்சரிக்கை", "துரை", "வாடிக்கை," "கொஞ்சம்" முதலிய பதிற்றுக்கணக்கான தெலுங்குச் சொற்கள் சேர்ந்திருக்கின்றன. தெலுங்கர் தமிழ் நாட்டை ஆண்டபோது, அநீதியே கிடையாது. தமிழருக்கு வேறு நீதி தெலுங்கருக்கு வேறு நீதி என்ற பேதம் கிடையாது. தெலுங்கு ஜாதி, ராஜ நீதியிலே நிபுணத்தன்மை உடையது.

மேற்படி கொள்கைக்கு நல்ல திருஷ்டாந்தமாக, இக்காலத்திலும்கூடத் தெலுங்கு தேசத்தார் தமிழரைக் காட்டிலும் ராஜாங்க வ்யவஹாரங்களில் தீவ்ர புத்தி செலுத்துகிறார்கள். ஆனால் நமக்குள் ஜாதி பேதமிருககிறதே என்றால் ஜாதிபேதம் இந்தியாவில் மாத்திரமில்லை, உகத்தில் எல்லா தேசங்களிலும் இருக்கிறது. இந்தியாவில் கொஞ்சம் தீவ்ரமாகவும், விநோதமாகவும், மாற்றுவது கஷ்டமாகவும் இருக்கிறது. இப்போது பூமி முழுவதிலும் நடந்துவரும் மஹாப்ரளயத்தில் இந்த ஜாதிபேதம் தவிடுபொடியாய்ப் போய்ப் புதிய மாதிரி உண்டாகும். இது வெல்லாம் ஏன் சொல்ல வந்தேனென்றால், தமிழ் நாட்டு ஜனங்கள் வீண் சண்டைகளிலே பொழுது போக்குகிறார்கள். தெலுங்கர் ஜனவிருத்திக்கு வழியாகிய நல்ல உபாயங்களிலே புத்தி செலுத்தி வருகிறார்கள். சுதேசிய விஷயத்தில் இப்போது தெலுங்கருக்குள் இருக்கும் பக்தி சிரத்தையிலே நாலிலொரு பங்குகூடத் தமிழ் ஜனங்களிடம் இல்லை. சென்ற வெள்ளிக்கிழமையன்று கூட

மேற்படி நெல்லூர் ஆந்த்ரமஹாசபைப் பந்தலில் வந்தேமாதரம் என்ற கோஷம் அபரிமிதமாக இருந்ததென்று தந்தி சொல்லுகிறது. கொஞ்ச காலத்துக்கு முன்பு கூடலூரில் கூடிய மாஹானசபையில் "வந்தேமாதரம்" பாட்டுக்கூடப்பாடவில்லை யென்று கேள்விப்பட்டேன். தெலுங்கு ஜில்லாக்களில் ஒரு சபைகூட அப்படி நடந்திராது. இது நிற்க,

மேற்படி சபையில் ஸ்ரீ வேங்கடப்பய்யா சபா நாயகராகப் பேசிய வார்த்தைகளின் ஸாரம் பின் வருமாறு :—

1. தெலுங்கு தேசத்தைத் தனி மாகாணமாகப் பிரிக்க வேண்டும்.

2. இந்தியாவுக்குத் தன்னாட்சி கொடுக்க வேண்டும்.

3. இயன்றவரை, இந்தியா முழுதையும், பாஷைகளுக்குத் தக்கபடி வெவ்வேறு மாகாணமாக்க வேண்டும். அதாவது, மதராஸ், பம்பாய், ஐக்ய மாகாணம், மத்ய மாகாணம், பஞ்சாப், பங்காளம் என்ற பிரிவுகளை மாற்றித் தமிழ்நாடு, தெலுங்கு நாடு, மாராட்டிய நாடு, கன்னட நாடு, ஹிந்துஸ்தானம், வங்க நாடு என்று பாஷைக்கிரமப்படி வகுக்க வேண்டும்

4. ஸ்வபாஷைகளில் கல்விப் பயிற்சி செய்விக்க வேண்டும். ராஜ்ய காரியங்களும் இயன்றவரை ஸ்வபாஷையில் நடக்க வேண்டும்.

மேற்படி நாலம்சங்களில் முதலாவது, மூன்றாவது, நாலாவது இம்மூன்றும் ஒரு பகுதி; இரண்டா

வது மற்றொரு பகுதி. இரண்டாவது தாய்ப் பகுதி; மற்றவை கிளைப் பகுதிகளாகும்.

என்னுடைய அபிப்ராயத்தில் மேற்கண்ட கொள்கை யெல்லாம் நியாயமென்றே தோன்று கிறது. ஆனாலும், இந்த ஸமயத்தில் ஆந்திரரைத் தனிப் பிரிவாக ருஜுப்படுத்துவதைக் காட்டிலும், ஆஸேது ஹிமாசல பர்யந்தம் உள்ள ஹிந்துக்க ளெல்லாம் ஒன்று என்ற மூல மந்திரத்தை நிலை நாட்டுவதே அவசியமென்று என் புத்திக்குத் தோன்றுகிறது. ஹிந்துக்களெல்லாம் ஒரே கூட் டம். வேதத்தை நம்புவோரெல்லாம் ஸஹோதரர். பாரத பூமியின் மக்களெல்லாம் ஒரே தாய்வயிற்றுக் குழந்தைகள். நமக்குள் மதபேதம் ஜாதிபேதம் குலபேதம் பாஷாபேதம் ஒன்றுமே கிடையாது. இந்தக் கொள்கைதான் இந்தக் காலத்துக்கு யுக்த மானது. ஹிந்து மதத்தை உண்மையாக நம்புவோ ரெல்லாம் ஒரே ஆத்மா, ஒரே உயிர், ஒரே உடம்பு, ஒரே ரத்தம், ஒரே குடர், ஒன்று.

ஹிந்துக்கள் உயர்ந்த நிலைமைக்கு வர வேண் டுமானால் ஐக்யநெறியை உடனே அனுசரிக்க வேண் டும். போன வருஷம் கீழ்க்கடலோரத்திலே பெரிய புயற்காற்றடித்தது. ஒன்று கூடியிருந்த வீடுகள் பிழைத்தன. தனிக் குடில்களெல்லாம் காற்றிலே பறந்து போயின. உலகத்தில் புதிய ஞானம், புதிய வாழ்க்கை, புதிய அறம், புதிய நெறி தோன்றக் கூடிய காலம் பிறந்து விட்டதென்று மேதாவிக ளெல்லாரும் ஒருங்கே சொல்லுகிறார்கள். இங்ஙனம் புதிய ஞானம் பிறக்க வேண்டுமானால் அதற்கு

ஹிந்து மதமே முக்ய ஸாதனமென்று நாம் சொல்லுகிறோம். ஸ்வாமி விவேகாநந்தர், ரவீந்த்ர நாத டாகுர், ஜகதீச சந்திரவஸு முதலிய பெரியோர்களும் அங்ஙனமே சொல்லுகின்றார்கள். இந்த ஸமயத்தில் ஹிந்துக்கள் பிரிவு பேசலாமோ? ஹிந்துக்கள் பிரிந்து கிடந்தால், ஹிந்து தர்மத்தின் மஹிமையை உலகத்தார் காண்பதெப்படி?

ஹிந்து தர்மம் பெருமாள் கோயிலைப் போலே; நிற்பது எங்கே நின்றாலும் அத்தனை பேருக்கும் ப்ரஸாத முண்டு. பகவத் ஸந்நிதியில் ஜாதிபேத மில்லை. அத்தனைபேரும் கலந்து நிற்கலாம். ஹிந்து தர்மம் சிதம்பரத்தைப் போலே. அதனுள்ளே, பறையரும் ஒளியில் கலந்து விடலாம். மேலும் தெலுங்கருக்குத் தெலுங்கு பாஷையில் பிறந்திருக்கும் உண்மையான அபிமானம் தமிழருக்குத் தமிழினிடமில்லை. தமிழிலிருந்து பூமண்டலத்திலுள்ள பாஷைகளெல்லாம் பிறந்து நிற்பதாகக் கூவின மாத்திரத்தாலே ஒருவன் தமிழபிமானியாக மாட்டான். பள்ளிக்கூடத்து சாஸ்திரங்களெல்லாம் தமிழ்ப் பாஷையில் கற்றுக் கொடுக்கும்படி முயற்சி செய்கிறவன் தமிழபிமானி. தமிழராகப் பிறந்தோர் கூடியிருக்கும் சபைகளிலேயும், தமிழராகப் பிறந்தோர் ஒருவருக்கொருவர் பேசும் போதும், இதர பாஷைகள் பேசாமல் தமிழே பேசும்படி முயற்சி செய்கிறவன் தமிழபிமானி. தமிழில் புதிய கலைகள், புதிய காவியங்கள், புதிய உயிர், தோன்றும்படி செய்வோன் தமிழபிமானி. தமிழிலபிமானமுள்ளவன் ஹிந்து தர்மத்தைக் கைக்கொண்டு

நிற்பவன். அதுவே தமிழபிமானியைச் சோதிக்கும் வழி. ஏனென்றால் தேவாரத்திலும், திருவாசகத்திலும், திருவாய் மொழியிலும், திருக்குறளிலும், கம்பராமாயணத்திலும் அன்பு கொள்ளாதவனுக்குத் தமிழபிமானம் உண்மையிலே பிறக்க நியாயமில்லை. மேற்படி நூல்களை நன்றாக உணர்ந்தவன் ஹிந்து தர்மத்தாலேயே இந்த உலகம் நிலைபெற்று நிற்குமென்பதை அறிவான். ஸர்வ தர்மங்களுக்கும் ஹிந்து தர்மமே வழிகாட்டி யென்பதைக் காண்பான். ஹிந்து தர்மத்தை நிலைநிறுத்தினால் ஆந்திரர், கன்னடர், மராட்டியர், ஹிந்துஸ்தானிகள், குஜராத்திகள், வங்காளிகள், தமிழர், மலையாளர் எல்லாருக்கும் நல்ல காலம் பிறக்கும். ஆதேசம் சொல்லுகிறது :—"வேத வழியே வழி. வேறு வழியில்லை."

# பெண்

12 ஜூன் 1917 பிங்கள வைகாசி 30

பார்க்க :— மூன்றும் தொகுதி - பகுதி - மாதர்.

---

# அர்ஜுன சந்தேகம்

காளிதாஸன்

16 ஜூன் 1917 பிங்கள ஆனி 3

பார்க்க :— இரண்டாம் தொகுதி - பகுதி - கதைக் கொத்து.

# ப்ராயச்சித்தம்

காளிதாஸன்

21 ஜூன் 1917 பிங்கள ஆனி 8

என்னுடைய ஸ்நேஹிதர்களில் ஒருவராகிய ராமராயர் இங்கிலாந்துக்குப் போயிருந்தார். திரும்பி வேத புரத்துக்கு வந்தார். அவருக்கு ஒருவிதமான வேதாந்தப் பயித்தியம். ப்ரம்மமே ஸத்தியம். லோக மெல்லாம் மித்தை. ஆதலால் எல்லாரும் ஸந்யாஸம் வாங்கிக்கொள்ள வேண்டும். தலையை மொட்டை யடித்துக்கொள்ள வேண்டும். சடைக ளாகத் திரித்து விடலாம். அப்படிச் செய்தாலும் குற்றமில்லை. எப்போதும் ஓம், ஓம் என்று சொல் லிக்கொண்டிருக்க வேண்டும். அல்லது ஐம்புலன் களையும், மனம், புத்தி, சித்தம், அஹங்காரம் என்ற நான்கு அந்தக் கரணங்களையும் உள்ளே இழுத்துக் கொண்டு சுத்த ப்ரம்ம நிலையோ, அல்லது அதற்குப் போகிற பாதையோ, ஆகிய நிர்விகற்ப ஸமாதியில் நிற்க வேண்டும். இது அவருடைய மதம்; ஆனால் இவ ருடைய நடை மற்ற மனுஷ்யர்களைப் போலேதான்.

ஸந்யாஸம் வாங்கவில்லை; தலை மொட்டையு மில்லை; சடையுமில்லை; ஓங்காரத்தைத் தவிர வேறு வார்த்தைகளும் சொல்லிக் கொண்டு தான் வருகிறார். நிர்விகற்ப ஸமாதியிலே அவர் இருப்பதை நான் பார்த்ததே கிடையாது.

மேற்படி ராமராயர் இங்கிலாந்தில் இருக்கும் போது, ஐரோப்பியர் கண் பார்க்காமல் கை எப்படிச் சமைக்கும்? ஐரோப்பியர் சமையல் பண்ணின பதார்த்தங்களை நாளொன்றுக்கு நான்கு முறையாகப் பத்து வருஷ காலம் நிர்விக்நமாக போஜனம் செய்து கொண்டு வந்தார். (இந்த விஷயத்தில் அவர் மேலே அதிகக் குற்றம் சொல்ல இடமில்லை. ஐரோப்பாவில் ஐரோப்பியர் சமையல் பண்ணினதைத் தின்னுமல் எப்படிப் பிழைக்க முடியும்? இங்கிருந்து பிராமணப் பரிசாரகர்களில் நூறு நூற்றைம்பது பேரைக் கொண்டு லண்டன் பட்டணத்தில் குடியேற்றினுல் நம்மவர்கள் போய் ஜாதியாசாரங்களுக்கு விரோதமில்லாதபடி அங்கிருந்து படித்து வைதிகக் கலெக்டர்களாகவும் வைதிக பாரிஸ்டர்களாகவும் திரும்பி வர இடமுண்டாகும். ஸ்வாமி விவேகானந்தர் ஐரோப்பாவிலும், அமெரிக்காவிலும் ஸஞ்சரித்த காலத்தில் பசுக் கறி முதலியவற்றை யதேஷ்டமாக சாப்பிட்டதாகப் பாதிரிகள் இந்தியாவில் கூக்குரல் போட்டதைப் பொறுக்க முடியாமல், சென்னப் பட்டணத்திலிருந்து சில வைதிக சிஷ்யர்கள் வருத்தப்பட்டு விவேகானந்தருக்குக் காயிதம் போட்டார்கள். அடுத்த கப்பலில் ஒரு வைதிக பரிசாரகனும், வைதிக போஜனங்களும் இந்தியாவிலிருந்து அனுப்பினுல், தான் வைதிகமாக உண்பதில் ஆக்ஷேபமில்லை யென்று விவேகானந்தர் மறுமொழி எழுதினுராம்.) ராமராயர் இங்கிலாந்தில் போய்ப் பத்து வருஷ காலம் இருந்து வியாபாரம் பண்ணிவிட்டுக் கொஞ்ச காலத்

துக்கு முன்பு, வேத புரத்துக்கு வந்து சேர்ந்தார். இங்கே அவர் கையில் கொஞ்சம் காசிருப்பதைக் கண்டு சில வைதிகர்கள் அவரைப் பிராயச்சித்தம் செய்து கொள்ளும்படி சொன்னார்கள். அவர் பண்ணிக்கொள்ள வில்லை. ஆனால் இங்கு வந்த பிறகு சுத்தமான பிராமணர் சமையல் தான் சாப்பிடுகிறார். பிராமண ஆகாரம் அவருக்கு நன்றாக ஒத்து வருகிறது. உடம்புக்கு ஒன்றும் செய்வதில்லை. மற்ற நடைகளும் அப்படியே தான். மூன்று வேளையும் ஸந்த்யாவந்தன, மாத்யான்ஹிகங்கள் தவறுவதில்லை. அமாவாசை தோறும் சரியான தர்ப்பணம்; வருஷத்தில் ஐந்தாறு சிராத்தம். எல்லாம் கிரமமாகவே நடத்தி வருகிறார். ஒரே ஒரு புரோஹிதரும் அனேக லௌகிகரும் இவரை ஜாதியில் சேர்த்துக் கொண்ட மாதிரியாகவே நடந்து வருகிறார்கள். பல புரோஹிதரும், சில லௌகிகரும் கொஞ்சம் ஒட்டியும் ஒட்டாமலும், தாமரை நீர் போலிருக்கிறார்கள். சிலர் ஒட்டாமலே விலகியிருக்கிறார்கள். போன மாஸம் மேற்படி ராமராயர் என்னிடம் ஊர்க்காரருடைய திருப்தியை உத்தேசித்துத் தான் ப்ராயச்சித்தம் பண்ணிக் கொள்ள இஷ்டப்படுவதாக அறிவித்தார். நான் உடனே மேற்படி விஷயத்தை இந்த ஊர் வைதிகர்களுக்கெல்லாம் சிரோமணியாகிய ரங்கநாத சாஸ்திரிகளிடம் போய்ச் சொன்னேன். இந்த ரங்கநாத சாஸ்திரிகளுடைய மாப்பிள்ளை ஒருவன் ரங்கூனிலே போய்க் காபிக் கடை வைத்திருக்கிறான். தமிழ்த் தேங்குழல், தமிழ் முறுக்கு, தோசை, வடை, கட

லைச் சுண்டல் முதலிய பக்ஷணங்களைக் கொஞ்ச மேனும் வட இந்தியா ஆர்ய சம்பந்தமில்லாதபடி நன்ருகப் பண்ணிக் கொடுத்து அங்குள்ள தமிழ் மக்களெல்லாம், இந்த பிராமணனை மிகவும் அருமையாகப் பாராட்டினபடியால் நல்ல பணக் காரனுகி, அங்கே தனது மனைவியாகிய மேற்படி சாஸ்திரிகளுடைய பெண்ணும், தானும் நாலைந்து குழந்தைகளுமாக சௌக்கியத்தோடு வாழ்ந்து வருகிருன். இந்தக் காரணத்தை யொட்டி மேற்படி ரங்கநாத சாஸ்திரிகள் மாப்பிள்ளையுடன் எவ்வித மான சம்பந்தமு மில்லாமல் கத்தரித்து விட்டார். இவருடைய மனைவி மூலமாகக் காயிதப் போக்கு வரவு நடக்கிறது. அதில் கூட இவர் கவனம் செலுத்துவதில்லை. இதே காரணத்தை யனுசரித்து அதாவது இவருடைய மாப்பிள்ளை ரங்கனுக்குப் போனதை உத்தேசித்து இந்த சாஸ்திரிகள் தம்முடைய வைதிகத்தை மிகவும் விஸ்தாரப்படுத்தி வைத்திருக்கிருர். மற்றவர்களுடைய வைதிகம் ஆறு முழமென்று வைத்துக் கொண்டால் இவருடைய வைதிகம் பன்னிரண்டு முழம். இந்த ப்ராமணர் இங்கே வைதிகர்களுக்குத் தலைவர். இவரிடம் நான் போய் ராமராயருக்குப் பிராயச்சித்தம் செய்து வைக்கவேண்டு மென்று சொன்னேன்.

அப்போது மேற்படி ரங்கநாத சாஸ்திரிகள் என்னைப் பார்த்து, "நீர் இந்த விஷயத்தை ஏன் கவனிக்கிறீர்?" என்று கேட்டார். நான் வைதிக மென்று அவர் நினைத்துக்கொண்டிருக்கிருர். அவர் கேள்விக்கு நான் மறுமொழி சொல்லாமல்,

"ஸமுத்ர யாத்திரை செய்தவன் பண்ண வேண்டிய ப்ராயச்சித்த மெப்படி?" என்று கேட்டேன்; (இது வரைக்கும் சொன்ன கதை யெல்லாம் பீடிகை. இனிமேல் எழுதப் போகிற வசனங்களே நான் சொல்ல வந்த விஷயம். ப்ராயச் சித்தம் கடல் யாத்திரைக்கு எப்படி நடத்த வேண்டு மென்று நான் கேட்டதற்கு ரங்கநாத சாஸ்திரி சொல்லிய மறுமொழி கொஞ்சம் தர்க்க சாஸ்த்ர ஹானியாக இருந்த போதிலும் எனக்கே கேட்க ரஸமாக இருந்தபடியால், பிறருக்கும் தெரிவிப்போம் என்ற எண்ணத்துடன் இங்கெழுதலானேன்.) ரங்கநாத சாஸ்திரிகள் சொல்லுகிறார்:—

"இங்கிலிஷ் படித்தவன் பண்ணுகிற ப்ராயச் சித்த மெல்லாம் 'ஹம்பக்' (பொய் வேஷப்) ப்ராயச் சித்தம். இங்கிலிஷ் படித்தவனுக்கு இந்த விஷ யத்தில் கொஞ்சமேனும் நம்பிக்கை கிடையாது. ருஷ்யாவிலே ராஜ்யம் புரண்டு போச்சுதாமே. ஜாதிகுல மெல்லாம் லோக முழுதிலும் தலைகீழாகக் கவிழ்ந்து போமென்று ஆனிபெஸண்ட் பத்திரிகை யில் போட்டிருந்ததாமே! 'தன் மத்யே' இன்னு மொரு பேச்சு உம்மிடத்தில் கேட்க வேண்டு மென்று நினைத்துக் கொண்டே யிருந்தேன். ஆனி பெஸன்டுக்கு அஷ்டமாசித்திகளும் வருமென்று தஞ்சாவூரில் ஒரு பெரிய யோகீசுவரர் என்னிடம் நேரில் சொன்னர்....உமக்குத் தெரியாதா? போகட் டும் போம்....மொத்தத்தில் உத்தம ஸ்த்ரீ. வெள் ளைக்கார ஜாதியில் பிறந்து நம்முடைய ஹிந்து மதத்தைச் சேர்ந்து விட்டதாக வாயினலே எப்

போது சொன்னுளோ, அவள் நம்மைச் சேர்ந்தவ ளாகவே நினைக்க வேண்டும். இந்த விஷயத்தில், காளிதாஸரே, நம்முடைய அபிப்பிராயமென்ன வென்றால், எந்தக் குலமாக, எந்த ஜாதியாக இருந்த போதிலும் நமது ஆலயத்தில் வந்து கும்பிட்டால் அவர்களை நாம் ஹிந்துவாக நினைத்து ப்ரேமை செலுத்த வேண்டும். இந்த ஆனிபெஸன்ட்கூட பூமி முழுதிலும் ஸஹோதரத்வமும் ஸமத்துவமும் ஏற்படப்போகிறதென்று சொல்லுவதாகக்கேள்வி. அந்த வார்த்தை ஸத்தியமாகத்தான் இருக்கும். அந்தம்மாள் வெகு தூரம் படித்தவளாமே? அஷ்டமாஸித்தி யென்கிற வார்த்தை வந்தால் அஸாதாரணமான புத்தியாவது உண்டென்பது நிச்சயந்தானே? நம்முடைய சாஸ்த்திரங்களும் அப்படியே தான் சொல்லுகின்றன. கலி மேலே போகப்போக ஜனங்களுக்குள்ளே கலப்பு மிகுதிப் பட்டுக் கடைசியில் ஒரே குலமாய்விடுமென்று சாஸ்த்ரம் சொல்லுகிறது. ஆனல் அது கெட்ட அர்த்தத்திலே சொல்லுகிறது. எல்லாரும் ஒரே குலமாய்க் கெட்டுப் போவார்களென்று சொல்லு கிறது. யதார்த்தம் அப்படியில்லை. ப்ரஹ்மாண்ட புராணத்தில் நான் ஒரு சுலோகம் படித்தேன். அது இப்போது ஞாபகமில்லை. அதிலே என்ன போட்டிருக்கிறதென்றால் கலியுகத்திலேயே ஒரு கிருதயுகம் வரும் என்று போட்டிருக்கிறது. கலி முற்றி உலகம் நாசமாய்ப் போகுமென்ற வாக்யங் களை நான் சோதனை போட்டுப் பார்த்திருக்கிறேன். அவற்றை யெல்லாம் காட்டிலும் மேற்படி ப்ரஹ்

மாண்ட புராண வாக்யமே ப்ரமாண மென்று நான் நிச்சயமாக ருஜூப்படுத்துவேன். காளிதாஸரே, நீரும் அதை நம்பும். இதெல்லாம் ஏன் சொல்லு கிறேனென்றால் உம்முடைய ஸ்நேகிதர் ராமராயர் ப்ராயச்சித்தம் பண்ணிக் கொள்ளப் போகிறதாகச் சொன்னீரே? அது அவசியமில்லை. இன்னும் கொஞ்ச காலத்தில் கிருதயுகம் வந்து விடுமானால், அவருக்கு யாதொரு சிரமமுமில்லை. எல்லாரும் ஸமானம். அட, க்ருத யுகம் வரவேயில்லை; இந்தக் கலியுகமே சாசுவதமாக இருக்கப் போகிற தாக வைத்துக் கொள்வோம். அதிலும், அதிக மாகப் பொய் சொல்லாமல் இருப்பது விசேஷம். கலி தானாகவே முற்றுவது போதாதென்று நாம் ஒரு பக்கம் அதைப் பொய் சொல்லிப் பழுக்க வைப்பதில் என்ன சுகம்? கடல் யாத்திரை பண்ணி னால் என்ன குடி முழுகிப் போச்சு? ஏன் காணும், காளிதாஸரே, உம்மைத்தான் கேட்கிறேன். கடல் யாத்திரை பண்ணினால் என்ன? இருக்கிற பிரா மணர்களெல்லாரும் ஸ்மிருதி வாக்யம் தவறாதபடி தான் நடக்கிறார்களோ? நம்முடைய மாப்பிள்ளை ரங்கூனுக்குப் போய் அங்கே நல்ல கோடீசுவரனாக வாழ்கிறான். மயிலாப்பூர், திருவல்லிக்கேணி, பங்க ளூர், திருச்சினாப்பள்ளி, தஞ்சாவூர், புதுச்சேரி, கும்பகோணம் இத்யாதி க்ஷேத்ரங்களில் வஸிக்கும் இங்கிலிஷ் பிராமணர்களுக்குள்ளே ஸந்த்யா வந்த னம் எவ்வளவு சொற்பம்? தீர்த்த பானம் கூட நடக்கத்தான் செய்கிறது. ராமராமா! இந்த ரிஷிகளெல் லாரும் என்ன ப்ராயச்சித்தம் பண்ணுகிறார்கள்?

என் மாப்பிள்ளை ரங்கூனில் நித்ய கர்மானுஷ்டானங்கள் தவறாமல் நடத்தி வருகிறனென்று கேள்வி. அவன் வந்தால் ஜாதி ப்ரஷ்டன்தானே? ப்ராயச்சித்தம் பண்ணினல் கூட நான் சேர்த்துக் கொள்ள மாட்டேன். தள்ளுங்காணும்! ப்ராயச் சித்தமாவது, வெங்காயமாவது! நான் ஏதோ உதர நிமித்தமாக இந்த வைதிகத்தை விட முடியாமல் கட்டுப் பட்டுக் கிடக்கிறேன். இதில் மற்றவர் வந்து சேர்வதிலே எனக்கு ஸம்மதமில்லை. ராமராயர் ப்ராயச்சித்தம் பண்ணிக் கொள்ளுவதில் எனக்கு இஷ்டமில்லை. ரூபாய் ஐந்நூறு கொடுத்தால் செய்து வைக்கிறேன். ஆக்ஷேபமில்லை. அப்படியே அவர் ப்ராயச்சித்தம் செய்தாலும் நான் அவருடன் பந்தியிலிருந்து சாப்பிட மாட்டேன்" என்றார். இதை நான் ராமராய்ரிடம் வந்து சொன்னேன். ராமராயர் ப்ராயச்சித்த யோசனையை நீக்கி விட்டார்.

---

# பெண் விடுதலை

காளிதாஸன்

25 ஜூன் 1917 பிங்கள ஆனி 12

பார்க்க:—மூன்றும் தொகுதி, பகுதி—மாதர். இப்பகுதியில் பெண் விடுதலை (1) என்ற தலைப்பில் வெளியாகியுள்ளது.

# தாதாபாய் நௌரோஜி

சி. சுப்பிரமணிய பாரதி

4 ஜுலை 1917 பிங்கள ஆனி 21

தாதாபாய் நௌரோஜி ஜீவதசைமாறி ஆத்ம தசை யடைந்து விட்டார். 92 வருஷம் இந்த உலக வெள்ளத்திலே எற்றுண்டு பயன் மாறிப் போன மண் தோணியைக் களைந்துபோய் விட்டார். அவருடைய புகழுடம்பிலிருந்து ஹிந்துஸ்தானத்தின் கார்யங்களை ஆத்ம ஸ்வரூபியாகி நடத்தி வருவார். "தாதாபாய் நௌரோஜி இறந்து போனார். தாதாபாய் நௌரோஜி நீடூழி வாழ்க."

★

தாதாபாய் நௌரோஜி இறந்து போகவில்லை. அதனாலேயேதான் நீடூழி வாழ்கவென்று சொல்ல இடம் உண்டாகிறது. நம்பிக்கைக்குப் பெயர் தாதாபாய் நௌரோஜி; அதற்கு மரணம் இல்லை. நம்பின காரியம் கைகூடும் என்ற வசனத்தை ஹிந்துக்கள் நம்பும்படி செய்வதற்காகத் தோன்றிய பெரியோர்களில் தாதாபாய் ஒருவர். தன்னை மறந்து குற்றுயிரோடு கிடந்த ஹிந்து தேசம் மறுபடியும் உயிர் கொண்டு, ஸ்மரணைபெற்று வலிமை காட்டும் என்று தாதாபாய் ஒரு நாளா, இரண்டு நாளா, 70 வருஷம் இடைவிடாது நம்பினார்.

அவர் சாகுமுன்னே ஹிந்துஸ்தானம் பிழைத்து விட்டது. ஹிந்துக்களுடைய சக்தி ஏறுவதைக் கண்ணாலே பார்த்த பிறகுதான் அந்தக் கிழவனுருடைய பிராணன் பிரிந்தது. ஹிந்துக்களுக்கு இந்தியாவில் அதிகாரம் கிடைக்க வேண்டுமென்று 70 வருஷங்களுக்கு முன்னே தாதாபாய் நௌரோஜி கண்டுபிடித்தார். 11 வருஷங்களுக்கு முன்னே கல்கத்தா காங்கிரஸ் சபையில் ஹிந்துக்களுக்கு ஸ்வராஜ்யம் வேண்டும் என்று தாதாபாய் முரசடித்தார். இந்தியா முழுதும் அந்த வார்த்தை பரவி அசைக்க முடியாமல் நிலைபெற்றதைக் கண்ட பின் உயிர் துறந்தார். 1905-ம் வருஷத்தில் சென்னப்பட்டணத்தில் சுதேசமித்திரன் ஜி. சுப்ரமணிய அய்யர் என்னிடம் ஒரு நாள் தாதாபாய் நௌரோஜியின் 80-வது பிறந்த நாள் விசேஷம் கொண்டாட வேண்டும் என்று சொன்னர். "பார்லிமெண்ட் சபைக்கும், மந்திரிகளுக்கும் அதிகாரிகளுக்கும் மூச்சு விடாமல் விண்ணப்பம் எழுதி தாதாபாய் ஒரு பயனும் அறியாமல் கிழத் தன்மை முற்றிக் கிடக்கிருர். இவருக்குப் பிறந்த நாள் கொண்டாடி நாம் என்ன பயன் பெறப் போகிறோம்?" என்று கேட்டேன்.

அப்போது ஜி. சுப்ரமண்ய அய்யர் சொன்னர்:

"தாதாபாய் உறுதியுடைய மனிதன். அவர் நினைத்த காரியங்கள் கடைசிவரை ஈடேறத் தான் செய்யும். ஹிந்து ஜனங்கள் பசியாலும் பிணியாலும் அழிந்து போகாமல் காக்கவேண்டு மென்றும் அதற்கு ஆங்கிலேயர் நமக்குத் தன்னாட்சி

கொடுப்பதே உபாயம் என்றும் தாதாபாய் நௌரோஜி சொல்லிக் கொடுத்தார். நமக்கெல்லாம் தேச பக்தி அவர் கொடுத்த பிச்சை. அவரை நாம் ஆசார்யராகக் கொண்டாட வேண்டும்'' என்று சொன்னர்.

★

பல வருஷங்கள் கடந்தன. இன்று தாதாபாய் நௌரோஜியை உயிர் பெற்ற ஹிந்துஸ்தானம் ஆசாரிய ஸ்தானத்தில் கொண்டாடி ஊரூராகப் புகழ்ச்சி பேசுவதைக் காணும்போது ஜி. சுப்ரமண்ய அய்யர் போட்ட மதிப்பு சரியென்று விளங்குகிறது. வைஸ்ராய்களும் கவர்னர்களும் இப்போது நௌரோஜிக்குப் பெருமை சொல்லுகிறார்கள். உயிரோடிருக்கும்போதே அவரை ராஜாங்கத்தார் மிகவும் மேன்மைபடுத்தி உபசரிக்கத் தொடங்கி விட்டார்கள். ஸ்வராஜ்யக் கொள்கைக்கு மேன்மையும் வெற்றியும் உண்டென்பதை தாதாபாய் பல விதங்களிலே காண்பித்தார்.

★

தாதாபாய் நௌரோஜியினுடைய விண்ணப்ப உபாயம் நமக்குக் கைகூடி வருமோ என்பது ஒரு சந்தேகம். நாமே பல விண்ணப்பங்கள் ராஜாங்கத்தாருக்கு எழுதிப் பயனை இதுவரை பெறுமல் இன்றும் எதிர்பார்த்த நிலைமையில் இருக்கிறோம். நம்முடைய விண்ணப்பங்களை அதிகாரிகள் உடனுக்குடனே கவனித்தால் நமக்கும் நல்லது; அவர்களுக்கும் நல்லது. ஜனங்களுக்குள்ளே அதிருப்தி பரவாமல் நம்முடைய நோக்கம் நிறைவேறும்.

தாதாபாய் போன்ற ஸ்வராஜ்யத் தலைவர்களிடம் அதிகாரிகள் நேருக்கு நேராக மந்திராலோசனை செய்தால் நல்லது. நம்மிடத்திலே தோன்றி யிருக்கும் புதிய சக்தியை அதிகாரிகள் கண் திறந்து பார்க்காமல் புறக்கணித்திருப்பது தந்திர சாஸ்திரத் துக்குப் பொருந்திய செய்கை யன்று.

தாதாபாய் தெய்வ பக்தியுடையவர். அதனாலே தான் நான் அவருக்கு ஷை புகழ்ச்சியுரை எழுதத் துணிந்தேன். ராஜ்ய விஷயங்களிலே கலந்து காங் கிரஸ் சபைக்குப் போன மாத்திரத்திலேயே ஒரு வன் மதிப்புக்கிடமாக மாட்டான். தெய்வ பக்தியை மூலபலமாகக் கொண்டதனாலேயே தாதாபாய் கார்ய ஸித்தி பெற்றார். ஆதலால் பக்தியே தாரகம். ஒவ் வொருவனும் தெய்வ பக்தி பண்ணலாம். வியாபாரி, தச்சன், அம்பட்டன், ராஜா, மந்திரி, பிராமணன், பறையன் எல்லோரும் தெய்வபக்தியாலே மேன்மை பெறுவார்கள். எந்தத் தொழிலும் தெய்வ பக்தி யால் வெற்றி யடையும். தாதாபாயினுடைய பூத சரீரத்திலிருந்த சக்தியைக் காட்டிலும் ஆயிர மடங்கு அதிக சக்தி அவருடைய நாமத்தில் புகுந்து, அப்பெயர் நினைப்பினாலே ஹிந்து ஜாதி மேன்மை பெறும்படி நேரிடலாம். பராசக்தியின் இஷ்டப்படி உலகம் அசைகிறது. பராசக்தி இப் போது நம்பிக்கையை உலகம் முழுதும் பரப்பு கிறாள். சில தினங்களின் முன்பு ஒரு இங்கிலீஷ் சாஸ்திரி கடவுளைப்பற்றி எழுதி யிருக்கும் புஸ்தக மொன்றை வாசித்துக் கொண்டிருந்தேன். சரணா கதி தர்மத்தை அந்த நூல், நமது விசிஷ்டாத்வைதி

களைப்போல் அத்தனை தெளிவாகச் சொல்லுகிறது. ஹிந்து மதம் உலக முழுமையும் வியாபித்துக் கொண்டு வருகிறது.

நம்பிக்கையின் ஸஹஸ்ரநாமங்களில் தாதா பாய் நௌரோஜி என்பதொன்று. நம்பிக்கை வெற்றி பெறும். நம்பிக்கை நீடூழி வாழ்க.

குறிப்பு:—தாதாபாய் நௌரோஜி 30—6—1917-ல் காலமானார்.

அவரைப் புகழ்ந்து அவருடைய எண்பதாவது ஆண்டு நிறைவுக் காலத்தில் பாரதியார் தாதாபாய் நவுரோஜி என்ற பாடல் பாடியிருக்கிறார். அப்பாடல் முதல் தொகுதியில் வெளியாகி யுள்ளது.

# மழை

காளிதாஸன்

12 ஜூலை 1917 | பிங்கள ஆனி 29

குறிப்பு:—இக் கட்டுரை இரண்டாம் தொகுதியில் கதைக் கொத்து என்ற பகுதியில் வெளியாகியுள்ளது. முதல் தொகுதியில் ஸ்வ சரிதையும் பிற பாடல்களும் என்ற பகுதியில் மழை என்ற தலைப்புடன் உள்ள பாட்டு இக் கட்டுரையில் வந்ததே யாகும்.

கட்டுரையும் பாட்டும் பாரதியார் தாம் நேராகப் புதுச்சேரியில் அனுபவித்த ஒரு நிகழ்ச்சியிலிருந்து அற்புதமாக உருவாகியுள்ளன. காற்று வேகத்தையும், மின்னல் வீச்சையும், இடி முழக்கத்தையும், மழை ஆரவாரத்தையும் பாட்டிலேயும் அதன் சொற் சேர்க்கையிலேயும் நாம் பிரத்யட்சமாகக் காண்கிறோம்.

---

# ராகவ சாஸ்திரியின் கதை

காளிதாஸன்

13 ஜூலை 1917 | பிங்கள ஆனி 30

பார்க்க:—மூன்றும் தொகுதி. பகுதி—கலைகள். இந்த ராகவ சாஸ்திரியை வைத்து பாரதியார், மலையாளம் (1), மலையாளம் (2), நம்பூரிகளும் நீயரும், மலையாளத்துக் கதை என்று மேலும் நான்கு கட்டுரைகள் எழுதி யுள்ளார். அவையும் மூன்றும் தொகுதியில் உள்ளன.

# கண்ணன் பாட்டு

1917-ல் அதாவது பிங்கள வருஷம் ஆவணி மாதத்தில் பாரதியார் எழுதிய கண்ணன் பாட்டின் முதற் பதிப்பு வெளி யாகி யிருக்கிறது.

திரு. பாலி. சு. செல்லையப்ப பிள்ளை அவர்கள் பிங்கள ஆவணி 1 என்று தேதியிட்டு இதற்கு ஒரு முகவுரை எழுதி யுள்ளார்கள். அதிலே, "ஸ்ரீமான் பாரதியார் ஒரு பெரிய மேதாவி; மகா பண்டிதர்; தெய்விகப் புலவர்; ஜீவன் முக்தர். இவர் தமிழ் நாட்டு ரவீந்திரநாதர். இவர் எனது தமிழ் நாட்டின் தவப் பயன்" என்றும், "இந்த ஆசிரியன் காலத்திற்குப் பின், எத்தனையோ நூற்றாண்டுகளுக்குப் பின், இவர் பாடல்களைத் தமிழ்நாட்டு மாதர்களும் புருஷர்களும் மிகுந்த இன்பத்துடன் படித்துக் களிப்படையும் காட்சியை யான் இப்பொழுதே காண் கின்றேன்" என்றும் திரு. செல்லையப்பர் எழுதி யிருக்கிறார்.

'கண்ணன் – என் அரசன்' என்ற பாடல் இந்த முதற் பதிப்பில் காணப்படவில்லை.

முதற் பதிப்பு வெளியாகி இரண்டு ஆண்டுகளில் இதன் இரண்டாம் பதிப்பு வந்திருக்கிறது. அதற்கு வ. வெ. சு. ஐயர் சித்தார்த்தி ஆவணி 22 என்ற தேதியிட்டு ஒரு அழகிய முன்னுரை எழுதி யிருக்கிறார்.

"கவிதா ரீதியாகப் பார்க்கும்போது, இக் கீர்த்தனங்களுள் பெரும்பாலவையிலுள்ள சுவை தேனினும் இனிதா யிருக்கிறது.

"இன்னொன்று: கவிதை அழகை மாத்திரம் அனுபவித்து விட்டு, இந்நூலின் பண்ணழகை மறந்துவிடக் கூடாது. இதிலுள்ள பாட்டுக்களிற் பெரும்பாலவை தாளத்தோடு பாடு வதற்காகவே எழுதப்பட்டவையா யிருக்கின்றன. கடற்கரையில், சாந்தி மயமான சாயங்கால வேளையில், உலகனைத்தையும்

மோஹ வயப்படுத்தி நீலக் கடலையும் பாற்கடலாக்கும் நிலவொளி யில், புதிதாகப் புனைந்த கீர்த்தனங்களைக் கற்பனை கர்வத்தோடும் சிருஷ்டி உற்சாகத்தோடும் ஆசிரியன் தன்னுடைய கம்பீரமான குரலில் பாடினதைக் கேட்ட ஒவ்வொருவரும் இந் நூலிலுள்ள பாட்டுக்களை மாணிக்கங்களாக மதிப்பர்.''

இவ்வாறு வ. வெ. சு. ஐயர் தமது முன்னுரையிலே குறிப் பிடுகிறார்.

# கண்கள்

சி. சுப்பிரமணிய பாரதி

19 அக்டோபர் 1917

'கண்கள் சிவந்து பெரியவாய்' என்றார் நம்மாழ்வார்.

எம்பெருமானுடைய கண்களைச் சொல்லுகிறார். விடுதலை பெற்ற ஜீவன் முக்தர்களுடைய கண்ணும் திருமாலுடைய கண்ணைப் போலவே இருக்கும். தாமரைப் பூவைப் போலே கண் வேண்டும் என்பர். திறந்த பார்வை வேண்டும்.

மூடின கண் மறைந்த ஒளியைக் காட்டுகிறது. யோகி கண்மூடி ஜபம் பண்ணுகிறானே அதை நான் சொல்லவில்லை. ஸாமான்ய ஜனங்கள் கண்ணை முழுதும் விழித்துப் பார்க்காமல் அரைப் பார்வையும் கோணற் பார்வையும் பார்க்கும்படி செய்கிற அஞ்ஞானத்தையும் பயத்தையும் பழிக்கிறேன். இது நிற்க.

நான் சென்னப்பட்டணத்தில் இருந்தபோது ஒரு சாமியாருடன் ஸ்நேகப்பட்டேன். அவர் சுதேசியம், அன்னிய வஸ்து பகிஷ்காரம், ஸ்வராஜ்ய ஸ்தாபனம் என்ற விஷயங்களைப் பற்றி ஆத்திரத்தோடு பேசுவார். அவர் கண்களை இமைக்காமலே நெடுநேரம் இருப்பார்; மனிதர் இமைக்காமலே

இருந்து விடலாம் என்று அந்தச் சாமியார் சொல்லுவதுண்டு. அது நல்ல பழக்கம். ஸூர்யனையே பார்த்துக் கொண்டிருந்தால் ஞானதிருஷ்டி உண்டாகும். கண்ணில் வீரம் ஏற்படும்.

ஸாதாரணமாக இருவருடைய கண்கள் ஸந்தித்தால், "இவன் ஏனடா நம்மை முறைச்சுப் பார்க்கிறான்?" என்கிற எண்ணம் இருவர் மனசிலும் உண்டாகிறது. ஒருவன் கண்ணைச் சாய்த்துக் கொள்ளுகிறான். அல்லது இருவரும் சாய்த்துக் கொள்ளுகிறார்கள். நேருக்கு நேர் கண்ணுக்குக் கண் பார்த்து இரண்டு பேர் நெடுநேரம் பேசிக் கொண்டிருப்பது துர்லபம்.

பொய் இல்லாவிட்டால் பார்வை நேராகும்!

கவனி!

பொய் தீர்ந்தால் நேரே பார்க்கலாம்.

பயம் தீர்ந்தால் நேரே பார்க்கலாம்.

கவனி!

பொய் தீர்ந்தால் பயம் தீரும்.

பயம் தீர்ந்தால் பொய் தீரும்.

நேரே பார்த்தால் விரோதக் குறி யென்று யோக்யன் ஏன் நினைக்க வேணும்? அகத்தின் அழகு முகத்தில் தெரியும். உன் மனசில் என்ன இருக்கிறதென்று தெரிந்து கொள்ளும் பொருட்

டாக உன் கண்ணை நேரே பார்க்கிறேன். விரோத மில்லை. அவமரியாதை யில்லை. விஷயம் தெரிந்து கொள்ளும் பொருட்டு.

ஸ்ரீ ராமகிருஷ்ண பரமஹம்சர் ஒரு நாள் முழுதும் ஸூர்யனை இடைவிடாமல் பார்த்து உபாசனை செய்தாராம். இது நல்ல வழக்கம். கண் இருக்கும் போது ஸூர்ய நமஸ்காரம் செய்வோம். அதனல் ஞான திருஷ்டி யேற்படும்.

# குழந்தைகள்

காளிதாஸன்

25 அக்டோபர் 1917

ஐரோப்பாவில் பல தேசங்களில் சண்டையினால் ஆள் மிகவும் சேதப்படுவதிலிருந்து அங்கே பல பண்டிதர் இனி வரப்போகும் ஜனத் தொகையாகிய குழந்தைகளை நேரே பாதுகாக்கும் விஷயத்தில் அதிக சிரத்தை பாராட்டி வருகிறார்கள். மேல் வகுப்புக் குழந்தைகளுக்குக் கற்றுக் கொடுக்கும் அளவு கீழ் ஜாதிக் குழந்தைகளுக்கு அங்கே படிப்பு இதுவரை கற்றுக் கொடுக்கவில்லை. கீழ் வகுப்புக் குழந்தைகளை அதிபால்யத்திலேயே தொழிற்சாலை களுக்கு அனுப்பி வேலை செய்யச் சொல்லி வருவதால் அவர்களுடைய அறிவு விசாலமடைய யாதொரு வழியுமில்லாமற் போகிறது.

யந்திரத் தொழிற்சாலைகள் மனிதரை மிருகங்களுக்கு ஸமானமாகச் செய்து விடுகின்றன. காலை முதல் மாலை வரை ஒருவன் ஒரு மனையின் மேலிருந்து கொண்டு, நரக வாதனை போன்ற தீராத யந்திரச் சத்தத்தினிடையே, யந்திரத்துக்குள் கொஞ்சங் கொஞ்சமாகப் பஞ்சை நுழைத்துக் கொண்டிருந்து விட்டு, ஸாயங்காலம் வீட்டிற்கு வந்தவுடன் குடித்து மதிமயங்கிக் கிடந்து, மறுநாள் காலை பொழுது விடியுமுன்னே மறுபடி பஞ்சு போடப் போய்விடுகிறான். இவன் தன்னுடைய

அறிவை விசாலப்படுத்தவும், உலக இன்பங்களை அநுபவிக்கவும், தியானம் பூஜை முதலிய தெய்வக் காரியங்கள் செய்யவும் நேரமெங்கே?

எப்போதும் இடைவிடாமல், அவன் காதில் யந்திரத்தின் பேய்க் கூச்சலும், கண்முன் இரும்பும் பஞ்சும் மாறாமல் இருப்பதால் அந்த மனிதன் நாளடைவில் மனிதத் தன்மை மாறித் தான் ஒரு இரும்பு யந்திரம் போலாய் விடுகின்றான். இந்தத் தொழிலுக்குச் சிறு குழந்தைகளைக் கொண்டு விட்டால் அவற்றின் கதி என்னாகும்?

இங்ஙனம் பாழடைந்து குட்டிச்சுவராய்ப் போகும் குழந்தைகளைக் காப்பாற்ற வேண்டுமென்றும், மேல் ஜாதிக் குழந்தைகளைப் போலே கீழ் ஜாதிக் குழந்தைகளுக்கும் தக்க வயதாகும் வரை படிப்பும் நாகரிகமும் கற்றுக் கொடுத்துத் தொழிற் சாலைகளில் சேராமல் தடுக்க வேண்டுமென்றும் மேற்குத் திசையாரில் பல பண்டிதர் முயற்சி செய்து வருகிறார்கள். படிப்பாளிகளில் அநேகர் இந்த யுத்தத்தில் மடிந்து போவதால், சண்டை முடிந்த பிறகு ஐரோப்பாவில்கல்வியின் நிலைமை மிகவும் சீர்கெட்டுப் போயிருக்கு மென்பதில் ஸந்தேகமில்லை. இது நிற்க.

நமது தேசத்தில் எல்லாருக்கும் ஆரம்பப் படிப்பு ஸர்க்கார் செலவில் கற்றுக் கொடுக்க வேண்டுமென்று ஸ்ரீ கோகலே வைஸ்ராய் சபையில் கூகூ என்று கத்திப் பார்த்தார். செலவுக்குப் பணம் இல்லை என்று சொல்லி அதிகாரிகள் கையை விரித்து விட்டார்கள். இது சண்டைக்கு முந்தி! இப்போதோ கேட்கவே வேண்டியதில்லை. இனி

மேல் போகப் போகச் சண்டைச் செலவும், சண்டை முடிந்தால் வாங்கின கடனுக்கு வட்டிச் செலவும் அதிகப்பட்டுக் கொண்டு போகும். ஆதலால் நாம் ராஜாங்கத்தாரிடம் இவ்விஷயத்தில் அதிக உதவி எதிர்பார்க்க இடமில்லை.

ஆண், பெண், அடங்கலாக நாட்டிலுள்ள எல்லாக் குழந்தைகளுக்கும் இனும் படிப்புக் கட்டாய மாய்ச் சொல்லி வைக்கவேண்டும். இது ராஜாங்கத் தாருடைய கடமை. ஆனல் நம்முடைய ராஜாங்கத் தார் இப்போதுள்ள நிலைமையில் அவர்கள் இந்தக் காரியம் செய்ய மாட்டார்கள்.

நமக்கு நல்ல காலம் எப்போது வருமோ தெய் வத்துக்குத்தான் தெரியும். அதுவரை அதிகாரிகள் எப்படி யிருந்த போதிலும், அதைப் பொருட்டாக் காமல் நாட்டிலுள்ள பணக்காரர் மற்றெல்லாவித தர்மங்களைக் காட்டிலும், ஜனங்களுக்கு அறிவு விருத்தியும், தைரியமும், தேச பக்தியும் உண்டாக் கத் தகுந்த சுதேசியக் கல்வி ஏற்படுத்திக் கொடுப் பதைப் பெரிய தர்மமாகக் கருதி, அதிலே பணம் செலவிட முற்படும்படி மேற்படி பணக்காரருக்கு நல்ல புத்தி ஏற்படுத்திக் கொடுக்குமாறு தெய் வத்தை வேண்டுகிறோம். ஒரு நாட்டில் உள்ள எல்லா விதமான குறைகளுக்கும் புத்திக் குறையே ஆதாரம். இது படிப்புக் குறைவினல் உண்டாவது. இந்தக் குறையை நீக்குவதில் நாம் ஒவ்வொருவரும் முயற்சி செய்தல் மிகவும் அவஸரம்.

"கண்ணுடைய ரென்பவர் கற்றோர் முகத்திரண்டு
புண்ணுடையர் கல்லா தவர்."

# உள்ளுருத்த விளக்கம்

காளிதாஸன்

26 அக்டோபர் 1917

1. உச்சரி - சொல்.

உச்சரி என்பதை உத்-சரி என்று பிரித்தால் மேலே (உயர்ந்த படியில் நட) என்று பொருள் படுகிறது. சொல்லும்போது மேல் நிலையில் நின்று சொல்க.

2. 'கை' என்பதற்குத் தெலுங்கில் 'செய்' என்று பெயர். க, ச மாறுதல் இயல்பு. 'கை' என்ற சொல்லுக்கே செய் என்று பொருள். தொழில் செய்யாமல் இருக்கும் கையை நெருப்பிலே வை; கரியாவது கிடைக்கும் என்றர்த்தம்.

3. காக்கை ஒரு பறவையின் பெயர்.

காக்கை என்றால் காப்பாற்றுதல் என்றும் அர்த்தம். தெருவில் நாம் பண்ணுகிற அசுத்தங்களை யோசிக்கும் போது காக்கையில்லாமல் போனால் நாமெல்லோரும் நாற்றமெடுத்துச் செத்துப் போவோம் என்பதில் சந்தேகமில்லை.

காக்கைகள் பிதிர்க்களுடைய வாஹனங்கள் என்றும் அவற்றுக்கு சிராத்தாதி ஸமயங்களிலும், தினந்தோறும், வாயஸாந்தம் போடவேண்டும் என்றும் நமது முன்னோர் சொல்லி யிருக்கிறார்கள். காக்கைக்கு நூறு வயது. அது எளிதிலே சாகாது.

புயற்காற்றில் பதினுயிரக்கணக்கான காக்கைகள் மடிந்தன. தெருவெல்லாம் காக்கை செத்து விழுந்து கிடந்தது. பார்த்தவர்கள் அழுதார்கள். இரண்டு காக்கையோ மூன்று காக்கையோ மிஞ்சியிருப்பது போலே தோன்றிற்று. இப்போது பார்த்தால் ஏறக்குறைய பழைய ஜனத்தொகை காக ஜாதியில் உண்டாய் விட்டது. காக்கை வலிய பறவை; அது நம்மைக் காக்கிறது; அதை நாம் கும்பிடவேண்டும்.

4. வருஷம் என்பது மழை; ஆண்டுக்கும் பெயர்.

5. திருப்பதி என்பது ஒரு க்ஷேத்திரத்துக்கும், ஸெளபாக்ய நிலைமைக்கும் பெயர்.

6. அன்னம் என்ருல் உணவு.

அன்னம் என்பது வஸ்து.

ஸத்தியத்துக்கும், ப்ரஹ்மத்துக்கும் அன்னம் என்று பெயர். பிராம்மணர் "ஸத்யந்த்வர்த்தேந பரிஷிஞ்சாமி" என்று சொல்லி அன்னத்தை ஜலத்தில் சுற்றுகிருர்கள். அங்கு ஸத்யம் என்றது ஆகாரத்தை; ரிதம் என்றது ஜலத்தை; ஸத்யம் என்பது உண்மைக்கும், ரிதம் நேர்மைக்கும் பெயர். நேர்மையாவது தைர்யம். நாம் அறிந்த உண்மைப்படி நடக்கும் துணிவு. உண்மை ப்ருதிவியினுடைய அம்சம்; துணிவு ஜலத்தினுடைய அம்சம் என்று வேதாந்த சாஸ்திரம் சொல்லுகிறது.

அன்னம் அமிர்தம்.

வைஷ்ணவர், 'போஜனமாயிற்று?' என்பதற்கு 'அமுது செய்தாயிற்று?' என்கிறார்கள். அன்னம் அமிர்தமென்பதே ராமானுஜருடைய சித்தாந்தம். உண்மையை நேர்மையாலே காக்க வேண்டும்.

ஆதலால் அன்னத்தைக் காப்பாற்றத் தெரியாதவன் மூடன்.

# பசு

ஸ்ரீ சுப்பிரமணிய பாரதி

8 நவம்பர் 1917

பசுவின் சாணத்துக்கு நிகரான அசுத்த நிவாரண மருந்து உலகத்தில் அக்நியைத்தான் சொல்லலாம். வீட்டையும், யாகசாலையையும், கோவிலையும் நாம் பசுவின் சாணத்தால் மெழுகிச் சுத்தப்படுத்துகிறோம். அதனைச் சாம்பர் ஆக்கி அச்சாம்பரை விபூதி என்று ஜீவன் முக்திக் குறியாக வழங்குகிறோம்.

பசு வென்பது ஒளிக்குப் பெயர்.

பசுமாடு பத்தினிக்கும் மாதாவுக்கும் ஸமானம்.

அதன் கண்ணைப் பார்!

அதன் சாணமே விபூதி; அதன் பால் அமிர்தம்.

வைத்தியரும் யோகிகளும் பசுவின் பாலை அமிர்தம் என்கிறார்கள். வேதமும் அப்படியேதான் சொல்லுகிறது.

பசுவை ஹிந்துக்களாகிய நாங்கள் தெய்வமாக வணங்குவதால், நாங்கள் பெரும் பகுதியாக வாழ்வதும், எங்களுடைய பூர்வீக சொத்துமாகிய இந்த தேசத்தில் பஹிரங்கமாகப் பசுவின் கொலை யாரும் செய்யாமல் இருப்பதே மரியாதை யாகும்.

இதைத்தான் ஆப்கானிஸ்தானத்து அமீர் சாஹெப் நமது தேசத்து முஸல்மான்களிடம் சொல்லிவிட்டுப் போனார். ஹிந்துக்களின் கண்ணுக்குப் படாமல் என்ன இழவு வேண்டுமானாலும் செய்து கொண்டு போங்கள்.

பகிரங்கமாக எங்கள் நெஞ்சை உடையும்படி செய்வதில் உங்களுக்கு லாபமென்ன? பேகாரில் கலகம் நேர்ந்தது போல் மொஹரம் பண்டிகை சமயத்தில் நாட்டில் வேறெந்தப் பக்கத்தில் எவ்விதமான கலகமும் நடக்காமல், மொஹரம் பண்டிகை சுபமாக முடிவெய்தி, ஹிந்து மஹமதிய ஸஹோதரத்வம் ஸ்தாபனமாய்விட்டது பற்றி நான் மிகவும் சந்தோஷப் படுகிறேன்.

ஒரே, ஓரிடத்தில் மாத்திரம் கலகம்! அதுவும் நடக்காமல் இருந்திருக்க வேண்டும்! அந்தப் பக்கத்து ஜனத் தலைவருடைய குற்றம்; போனால் போகிறது. ஹிந்து முஸ்லிம் ஒன்று; இணங்கி வாழ்வது நன்று.

பசுவையும், காளையையும் ஹிந்துக்கள் தெய்வமென்று கும்பிடுவது போல், கஷ்டப் படுத்தாமல் மரியாதையாக நமது முன்னோர் நடத்தியபடி இப்போது நடத்துவதில்லை. வண்டிக்காரன் மாட்டைக் கொல்லுகிறான். இடையன் பசுவுக்குப் பொய்க் கன்றுக்குட்டி காட்டி, அதன் சொந்தக் கன்றைக் கொல்லக் கொடுக்கிறான். ஹிந்துக்களாகிய நாம் பார்த்துக் கொண்டு சும்மாதானே இருக்கிறோம்? வெறுமே பூவைப் போட்டுக் கும்பிட்டால் மாத்திரம் போதுமா?

நம்முடைய பக்தியை நாம் செய்கையில் காண்பிக்க வேண்டும். காண்பித்தால் பிறரும் நமது கொள்கைகளுக்கு அவமதிப்புச் செய்யாமல் மரியாதையாக நடந்து கொள்வார்கள்.

---

## நகரம்

சக்திதாஸன்

20 நவம்பர் 1917

பார்க்க :—மூன்றும் தொகுதி. பகுதி - சமூகம்.

---

## செல்வம்

சக்திதாஸன்

28 நவம்பர் 1917

பார்க்க :—மூன்றும் தொகுதி. பகுதி - சமூகம். செல்வம்(1) என்ற தலைப்பில் இக்கட்டுரை வந்துள்ளது.

# ஹிந்து தர்மம்

காளிதாஸன்

29 நவம்பர் 1917

வாரீர் நண்பர்களே, ஐரோப்பாவிலும் அமெரிக்காவிலும் ஹிந்து தர்மத்தைப் பரவும்படி செய்ய வேண்டுமானால் அதற்கு இதுவே மிகவும் ஏற்ற தருணம். ஆஹா! ஸ்வாமி விவேகாநந்தரைப் போலே பத்துப் பேர் இப்போதிருந்தால் இன்னும் ஒரு வருஷத்துக்குள் ஹிந்து தர்மத்தின் வெற்றிக் கொடியை உலகமெங்கும் நாட்டலாம். அந்தக் கண்டங்கள் யுத்தமாகிய சுழற் காற்றுக்குள்ளே அகப்பட்டுத் தத்தளித்துக் கொண்டிருக்கையிலே, ஹிந்து தர்மத்தை எவன் கவனிப்பான் என்று கூறிச் சிலர் ஆக்ஷேபிக்கலாம். அந்த ஆக்ஷேபம் சரியன்று. சண்டைக் காலந்தான் நமக்கு நல்லது. இந்த ஸமயத்திலேதான் மனுஷ்ய அஹங்காரத்தின் சிறுமையும் தெய்வத்தினுடைய மஹிமையும் மனுஷ்யனுடைய புத்திக்கு நன்றாக விளங்கும். இவ்வுலக இன்பங்களை தர்மத்தினாலே பெற்றாலொழிய அவை இன்பங்கள் போலே தோன்றினாலும் துக்கமாகவே முடியும். அவரவர் கர்மத்தின் பயனை அவரவரே அனுபவிக்க வேண்டும். வினை விதைத்தவன் வினை யறுப்பான். தினை விதைத்தவன் தினையறுப்பான். நாம் இன்று நூறு ஸப்மரீன் வைத்துக்

கொண்டு பிறருடைய கப்பல்களைத் தகர்த்தால் நாளை மற்றொரு ஜாதியார் ஆயிரம் ஸப்மரீன் கட்டி நம்முடைய கப்பல்களை நொறுக்கிப் போடுவார்கள். பாம்பைக் கொல்ல ஒரு கீரிப் பிள்ளையுண்டு; பகை பகையை வளர்க்கும். நாம் மற்றவரை அடிமைப் படுத்தினால் நம்மை அடிமைப்படுத்த வேறு யாரே னும் முளைப்பார்கள்.

இவ்வுலகத்தில் நாம் செய்கிற ஒவ்வொரு செய்கையும், ஸ்வப்ரயோஜனத்தைக் கருதாமல், லோகோபகாரத்தை முன்னிட்டுக் கொண்டு செய்ய வேண்டும். தீராத ஆவலும், அவஸரமும், ஓயாத பர பரப்பும் உள்ள ஜ்வர வாழ்க்கை நாகரிகமாக மாட் டாது. சரியான நாகரிகத்துக்கு சாந்தியே ஆதாரம். யந்திரப் பீரங்கிகளும் ஸப்மரீன்களும் நாகரிகத்துக்கு அடையாளமல்ல. நிலக்கரிச் சுரங்கங்களும் ஆகாச வெடிகுண்டுகளும் அபிவிருத்திக்கு லக்ஷணமல்ல. அவை மனுஷ்யனுக்குப் பலமல்ல, துணையல்ல; அவை மனிதனுக்குப் பகை. மனுஷ்யனையும் அவ னுடைய நாகரிகத்தையும் அழிக்கும் குணமுடையன.

கர்வத்தினாலே மரணம் உண்டாகும். அடக்கம் பொறுமை ஜீவகாருண்யம் என்ற குணங்களே உண்மையான நாகரிகத்தையும் நித்ய ஜீவனையும் விளைக்கும். இப்படி நூற்றுக் கணக்கான ஹிந்து தர்மக் கொள்கைகளை நாம் உலகத்தார் கேட்க முழங்குவதற்கு இதுவே நல்ல தருணம். இந்த ஸமயத்தில் மனுஷ்ய ஸமூகம் அழிந்து போகாமல் அதைக் காப்பாற்றி நல்ல வழியிலே சேர்க்கக் கூடிய ஜாதியார் நம்மைத் தவிர வேறு யாருமில்லை.

16

கண்ணைத் திறந்து பூமண்டல முழுதையும் ஒரே பார்வையாகப் பார்த்தால் நான் சொல்வதுண்மை யென்பது தானே விளங்கும். இவ்விஷயத்தை ஆழ்ந்து யோசனை பண்ணி இங்கிருந்து வெளி நாடு களுக்கு நூற்றுக் கணக்கான பிரசங்கிகளை அனுப் பும்படி ராஜாக்களையும் ஜமீந்தார்களையும் செட்டி யார்களையும் மடாதிபதிகளையும் பிரார்த்தனை செய்து கொள்ளுகிறேன்.

## உயிரின் ஒளி

ஸ்ரீமான் சி. சுப்பிரமணிய பாரதி

26 டிசம்பர் 1917

பார்க்க :— மூன்றும் தொகுதி. பகுதி - தத்துவம்.

மிளகாய்ப் பழச் சாமியார் என்ற கதை 29—11—1917 க்கும் 29—12—1917 க்கும் இடையே வெளியாகியுள்ளது. அந்தத் தேதி எனது குறிப்பில் கிழிந்து போயிருக்கிறது. இக்கதை இரண்டாம் தொகுதி கதைக் கொத்து என்னும் பகுதியில் சேர்க்கப் பட்டிருக்கிறது.

---

## கத்திச் சண்டை

காளிதாஸன்

10 ஜனவரி 1918 பிங்கள மார்கழி 27

பார்க்க :—இரண்டாம் தொகுதி. பகுதி - கதைக் கொத்து.

# தமிழ் நாட்டின் விழிப்பு

சக்திதாஸன்

25 ஜனவரி 1918 பிங்கள தை 13

பார்க்க:— மூன்றும் தொகுதி. பகுதி - கலைகள்.

இக்கட்டுரையின் முடிவிலே 'இன்னும் வரும்' என்று குறிக்கப்பட்டுள்ளது. ஆனால் இதே தலைப்புடன் வேறு கட்டுரை வந்ததாகத் தெரியவில்லை.



# கலியுக கடோற்கசன்

26 ஜனவரி 1918 பிங்கள தை 14

பார்க்க:— இரண்டாம் தொகுதி. பகுதி - கதைக்கொத்து.

# கோபந்நா

**காளிதாஸன்**

20 பிப்ரவரி 1918 பிங்கள மாசி 9

காலை ஒன்பது நாழிகை யிருக்கும். இள வெயில் காய்கிறது. வீதியில் வரிசையாக நிற்கும் தென்னை மரங்களில் கிளிகள் இணையிணையாகப் பறந்து விளையாடுகின்றன. வானொளியாகிய வெள் ளத்தில் புறாக் கூட்டங்களும், கொக்கு சபைகளும் தனி ராஜப் பருந்துகளும், நீந்திக் களிக்கின்றன சிறு குருவிகள் ஊசலாடுகின்றன. காக்கைகள் ஓடிப் பறந்து திரிந்து ஜீவன உத்யோகத்தை மிகவும் சிரத்தையுடன் நடத்தி வருகின்றன. வான முழுதிலும் பக்ஷிகளின் ஒலி நிரம்பிக் கிடந்தது.

அந்த ஸமயத்தில் தெருவிலே ஒரு தென்னை மரத்தில் ஒரு வண்ணான் இரண்டு கழுதைகளைக் கொண்டு கட்டினான். தென்னை மரத்தின் மேலிருந்து மைனா பக்ஷி ஆச்சரியமாகக் கூவிக் கொண்டிருந் தது. இதைக் கேட்ட கழுதைகள் தாமும் ஊளை யிடத் தொடங்கின. இதைக் கேட்டு வீதி வழியே போய்க் கொண்டிருந்த பாலர் இருவர் மேற்படி கழுதைகளின் ஒலியை அநுசாரணம் பண்ணித் தாமும் ஊளையிடலாயினர். இதைக் கேட்ட கழுதை களில் ஒன்றுக்கு மிகவும் ஸந்தோஷ மூண்டாய், ஸாதாரணக் கழுதைகள் போல "வாள்! வாள்!"

என்று கத்தாமல் ஹ்ஹு, ஹு, ஹு என்று வெற்றிச் சங்கூதுவது போல கோஷிக்கலாயிற்று.

இந்த வேடிக்கையை நான் கவனித்துக்கொண்டிருந்தேன். அப்போது அஸாதாரண அப்ராக்ருத ஒலி யொன்று காதில் விழுந்தது.

ஒரு குருடன் பிச்சைக்கு வந்தான். அவனை ஐந்து வயதுள்ள ஆண் குழந்தை யொன்று கோலைப் பற்றி அழைத்துக் கொண்டு வந்தது. அவனுடன் ஒரு ஸ்திரீயும் வந்தாள்.

அந்தக் குருடனுக்குக் கண் தெரியுமோ, அதாவது அவன் மெய்க் குருடில்லையோ, வேஷக் குருடுதானோ என்று எனக்கொரு சந்தேகம். அவனுடைய கண்ணைத் திறந்துகொண்டு தானிருந்தான். அதாவது, விழிக் கண் குருடு என்ற வகுப்பைச் சேர்ந்தவன் போலேயிருந்தான். அந்தக் கண்களை நான் பார்த்தேன். அவற்றில் புத்திக் குறிப்பு தகதகவென்று ஜ்வலித்துக் கொண்டிருந்தது. 55 வயதுள்ள கிழவன். சுக்குப் போலே, பனங் கிழங்கு போலே, ஒற்றை நாடியான, மிகவும் உறுதி கொண்ட உடம்பு. இடுப்புக்கு மேலே ஒட்டகத்தில் பாதிப் பங்கு கோணல் காணப்பட்டது. ஆனல் இயற்கையிலேயே கோணலா அல்லது அந்த மனிதன் வேண்டுமென்று தன்னுடம்பைக் கோணலாகச் செய்து கொண்டானே, என்னல் நிச்சயமாகச் சொல்ல முடியாது. செம்பட்டை மயிர். நெற்றியிலே பட்டை நாமம். ஆஹா! அவன் முகத்தின் அழகை — அதாவது குழிகள் விழுந்த, மேடு பள்ளமான, வெயிலில் மழையில் காற்றில்

அடிபட்டு முதிர்ந்து, சதைப்பற்றுக் கொஞ்சமேனு மில்லாமல், ஆனாலும் சக்திக் களஞ்சியமாக விளங் கிய அவன் முகத்தின் அழகை—நான் எப்படி வர்ணிப்பேன்? நான் சித்திரமெழுதிப் பழகாதது பற்றி மிகவும் வருத்தப்படுகிறேன். ஹா ஹிந்துஸ் தானத்து ஏழை, பரதேசி, பண்டாரம், யோகி, பிச்சைக்கார வகுப்புக்களில் சில அற்புதமான முகங்கள், எத்தனையோ அற்புதமான முகங்கள் நாள்தோறும் என் கண்ணில் படுகின்றன. அள விறந்த துயரத்தாலோ, கஷ்டங்களாலோ, தவத் தாலோ, யோக சித்திகளாலோ இவர்களிலே பல் லோர் அழுக்குப் படிந்த தேவ விக்ரகங்களின் முகங் களை யுடையோராக விளங்குகின்றனர். அதை யெல்லாம் பார்த்தெழுதி வைக்க எனக்குச் சித்திரத் திறமையில்லை. புகைப் படம் பிடித்து வைக்க லாமா என்று யோசனை பண்ணுகிறேன். இதுநிற்க.

மேற்படி குருடன் போட்ட சத்தத்தைத்தான் மேலே அப்ராக்ருதமென்றும் அஸாதாரணமென் றும் சொன்னேன். இந்த ஸம்ஸ்கிருத பதங்களின் பொருள் என்னவென்றால் அந்த மாதிரிச் சத்தம் நான் இதற்கு முன்பு கேட்டதே கிடையாது. ஆனால் அந்தக் குரல் எந்த ஜாதி யென்பதைக் கூறமுடியும். கல்லுளி மங்கான், தெருப் புழுதியிலே உருண்டு உருண்டு, ஏழுமலையானென்று கூவிக் கையில் உண்டியல் செம்பு கொண்டு பணம் சேர்க்கும் ஏழுமலையாண்டி முதலியவர்களின் குரலைப் போன் றது. ஆனால் ஒரு மூன்று மாஸத்துப் பச்சைக் குழந்தையின் சத்தத்தைக் காட்டிலும், முப்பது

வருஷத்துத் தேர்ச்சி கொண்ட கல்லுளி மங்கா னுடைய சத்தம் எத்தனை மடங்கு கடினமாக இருக்குமோ, அத்தனை மடங்கு அந்தக் கல்லுளி மங்கானுடைய சத்தத்தைக் காட்டிலும் நமது கதா நாயகனாகிய சந்தேகக் குருடனுடைய குரல் கடின மானது. எனவே 32 மூங்கிற் கழிகளைச் சேர்ந்த படியாக அறுக்கும் சத்தத்தைப் போலே, மேற்படி குருடனுடைய சத்தம். உன்னுடைய காதைத் தொளைத்துவிட வில்லையோ என்று என்னிடம் கேட்பீர்களானால், அப்படித் தொளைக்கவில்லை. அதாவது அவனுடைய சத்தம் கர்ணகடூரமில்லை. சிங்கத்தின் ஒலி கடினமாக இருந்தாலும், பயங்கர மாக இருந்தாலும் கல்லுளி மங்கானுடைய சத்தத் தைப் போல் அருவருப்புக்கிடமாகாது. நெஞ்சிலே மூச்சுப் பலம் இருந்தால் எவ்வளவு கடினமான சத்தமும் காதுக்கு சுகமாகவே கேட்கும்.

மேற்படி குருடனுடைய—அதாவது ஸம்சயக் குருடனுடைய சத்தம் என் காதுக்கு சுகமாகத்தா னிருந்தது. காலம் சென்ற ஸ்ரீ வில்லிப்புத்தூர் மூத்தையா பாகவதருடைய பாட்டைத் தமிழ் நாட் டிலே பலர் கேட்டிருக்க மாட்டார்கள். கொப்பூழி லிருந்து, ஹாகார, ஹூம்காரங்கள் கொண்டு வருவதில் அந்த பாகவதர் மஹா சமர்த்தர். ஆகாச வாணம் ஏறும்போது "ஹ்விஸ்" என்று கம்பீரமாக ஒரு சத்தம் உண்டாகிறதே, அந்தச் சத்தம் மேற்படி பாகவதர் பாட்டில் எப்போதுமே யிருக்கும். அவர் பெரிய குஸ்திக்காரரும்கூட. மூச்சையடக்கி வேலை செய்வதில் பெரிய பெரிய

ஹைதரபாத்து பஹல்வான் கூட அவருக்கு சமான மாகமாட்டார்கள். அந்த பாகவதர் செத்த பிறகு, அந்த மாதிரிக் குரலிலே ஹகாரம் பேசுவது மேற் படி குருடனிடத்திலே தான் கண்டேன். ஆனல் இந்தக் குருடன் பாடவில்லை. கூவினன். அந்தக் கூவுதலுக்கும் சந்தமிருந்தது. இவனுடைய சத்தத் தின் கனமோ என்றால் மேற்படி பாகவதர் தொண் டையைவிட 90 மடங்கு வலிமையுடையது. குழந் தைப் பிராயத்திலே இவன் சங்கீதப் பயிற்சி செய் யாமல் பிச்சைத் தொழிலைக் கைக்கொண்டானே என்றெண்ணி வருத்தப்பட்டேன்.

அந்தக் குருடன் கூவுகிருன் :— "தீராத வினை தீர்த்து வைப்பேன், கோபந்நோ!" அவனுடன் பிச்சைத் தகரப் போகணி யெடுத்துக் கொண்டு வந்த ஸ்திரீ எதிர்மொழி சொல்லுகிருள்:— "கோவிந்தா!"

அந்தக் குருடன் கூவுகிருன்:— "ஆருத புண்ணை ஆற்றி வைப்பேன், கோபந்நோ!"

ஸ்திரீ:— "கோவிந்தா!"

குருடன்:— "சனிக்கிழமை, கோபந்நோ!"

ஸ்திரீ:— "கோவிந்தா!"

குருடன்:— "நல்ல நாள் கோபந்நோ!"

ஸ்திரீ:— "கோவிந்தா!"

குருடன்:— "திருப்பதி வேங்கடாசலத்தைப் பார்த்து வந்தேன், கோபந்நோ!"

ஸ்திரீ:— "கோவிந்தா!"

குருடன்:— "ஏழுமலையான் தீர்த்து வைப்பான் கோபங்கோ!"

ஸ்திரீ:— "கோவிந்தா!"

குருடன்:— "ஹா! ஹா! மாறாத் தலைவலி மாற்றி வைப்பேன், கோபங்கோ!"

ஸ்திரீ:— "கோவிந்தா!"

குருடன்:— ஹா! ஹா! கண்ணில்லாதவருக்குக் கண் கொடுப்பேன், கோபங்கோ!"

ஸ்திரீ:— "கோவிந்தா!"

கடைசி வாக்கியத்தைக் கேட்டவுடன் எனக்கு விநோதமாகத் தோன்றிற்று. கண்ணில்லாக் குருடன் பிறருக்குக் கண் கொடுப்பேன் என்று சொன்னால் யாருக்குமே வேடிக்கையாகப் புலப்படாதா?

அப்போது என்னுடன் குள்ளச்சாமி என்ற யோகீசுரர் இருந்தார். அவர் என் மன நிலையை நான் சொல்லாமலே தெரிந்து கொண்டு பின்வருமாறு சொல்லலாயினர்:—

"இதோ, போகிறானே, இவன் போன ஜன்மத்தில் திருதராஷ்ட்ர ராஜனாக இருந்தான். இவனுடன் போகிறாளே, அவள் காந்தாரியாக இருந்தவள்.

"போன ஜன்மத்தில், தம்பி மக்களுடைய சொத்தைத் தன் பிள்ளைகள் சூதினால் அபஹரிக்கையிலே தான் ஒன்றும் தடுத்துச் சொல்லாமல் பிள்ளை துரியோதனன் பக்கம் சேர்ந்து கொண்டு வேடிக்கை பார்த்த குற்றத்துக்காக விதி இவனை இந்த ஜன்மத்தில் பிச்சைக்காரனாகவும் பிறவிக்

குருடனுகவும் செய்தது. காந்தாரி பதிவிரதையாகை யாலே தானும் கூடவந்தாள். ஐந்து வயதுக் குழந்தை கோலேப் பிடித்துக்கொண்டு போகிருனே அவன்தான் விகர்ணன்'' என்ருர்.

அப்போது நான்:— "ஐயோ, திருதராஷ்டிரன் மஹாவித்வானுயிற்றே. அவனுக்கிந்த கதி வர லாமோ?'' என்று சொல்லி வருத்தப்பட்டேன்.

அப்போது குள்ளச்சாமி சொல்லுகிருர்:— "போன ஜன்மத்தில் ராஜாவாகவும் பண்டிதனுகவும் இருந்தான். ஆனல் இந்த ஜன்மத்தில் ஏழையாகப் பிறந்து பலவிதக் கஷ்டப் பட்டுப் பிறகு பூர்வ புண்ணிய சேஷத்தால் சதுரகிரியில் ஒரு மஹரிஷி யிடம் பகவந் நாமத்தின் மஹிமையைத் தெரிந்து கொண்டு, உண்மையான பக்தி மார்க்கத்தில் சேர் ந்த படியால் இவன் இப்போது ஜீவன் முக்தனுய் விட்டான்.

"அவனுடைய தகரப்போகணி தூக்கிக்கொண்டு போகிற காந்தாரி 'கோவிந்தா! கோவிந்தா!' என்று கத்துகிருளே அதன் பொருள் தெரியுமா? ........சொல்லுகிறேன் கேள். தன்னுடைய கணவன் பரம பதத்தைக் கண்டு கோவிந்த ஸ்தானத்தை அடைந்து விட்டானென்பதை அவள் உலகமறிய முழங்குகிருள். அவளுடைய பாதிவ்ரத்ய மஹிமை யினல் இவன் இந்தப் பதவி யடைந்தான்'' என்று சொன்னர்.

நான் அப்போது குள்ளச் சாமியிடம்:—"ஜீவன் முக்தி பெற்றும் பிச்சைத் தொழில் ஏன் செய் கிருன்?'' என்று தவறுதலாகக் கேட்டேன்.

அவர் அதற்கு நேரே மறுமொழி கூறாமல் தாம் முன்பு கூறி வந்ததற்குத் தொடர்ச்சி சொல்வது போல:— "ஆகையால், இவன் போன ஜன்மத்தில் இருந்ததைக் காட்டிலும் இப்போது கோடி மடங்கு மேலான நிலைமையிலிருக்கிறான். இவனைக் குறித்து நீ கவலைப்பட வேண்டிய அவசியமில்லை" என்றார். அப்போது நான் குள்ளச் சாமியை நோக்கி:— "எனக்குப் பூர்வ ஜன்ம விஷயத்தில் இன்னும் நிச்சயமான நம்பிக்கை ஏற்படவில்லை" என்றேன். இதைக் கேட்டவுடன், அந்த யோகீசுரர் எனக்கு மறுமொழி கொடுக்காமல், "அரே! ராம், ராம்" என்று சொல்லி நகைப்புக்காட்டி ஓடிப்போய் விட்டார்.

பின்பு, குருடன் போன திசையிலே திரும்பி னேன்.

மறுபடி குருடன் கத்துகிறான்:— "தென்னை மரத்திலே கிளி பறக்குது, கோபங்கோ!"

ஸ்திரீ:— "கோவிந்தா!"

குருடன்:— "சிதம்பரத்திலே கொடி பறக்குது கோபங்கோ!"

ஸ்திரீ:— "கோவிந்தா!"

குருடன்:— "தென்னை மரத்திலே கிளி பறக் குது கோபங்கோ!"

ஸ்திரீ:— "கோவிந்தா!"

இங்ஙனம் உருவங்களும் ஒலியும் எனது புல னெல்லையைக் கடந்து சென்று விட்டன.

## திரு விளக்கு

காளயுக்தி சித்திரை 31-ந் தேதி அதாவது 13 மே 1918 தேதியன்று புதுச்சேரியில் பாரதியார் வீட்டில் நடந்த திருவிளக்குப் பூஜையைப் பற்றி இக்கட்டுரை கூறுகிறது. ஆகவே அந்தத் தேதிக்குச் சற்று பிந்தி இது எழுதப்பட்டிருக்க வேண்டும்.

இக் கட்டுரை மூன்றும் தொகுதியில் மாதர் என்னும் பகுதியில் வெளிவந்துள்ளது.

---

## ஸ்வராஜ்யம்

**சக்திதாஸன்**

5 அக்டோபர் 1918     *காளயுக்தி புரட்டாசி 20*

சென்னை "ஹிந்து" பத்திரிகையின் லண்டன் நிருபர் எழுதிய கடிதமொன்றில் "அமெரிக்காவும், ஜர்லாந்தும், இந்தியாவும்" என்ற மகுடத்தின் கீழே ஒரு குறிப்பெழுதியிருக்கிறார். அதில் அமெரிக்கா ஸ்வாதீனமடைந்த திருநாளாகிய ஜூலை நாலாந் தேதி கொண்டாட்டங்கள் ஆங்கிலேயர்களாலேயே இங்கிலாந்தில் மிகவும் விமரிசையாகக் கொண்டாடப் பட்ட செய்தியைக் குறித்துப் பேசுகிறார். [இங்கி

லீஷ் ராஜ்யத்தை எதிர்த்துப் போர் புரிந்து வெற்றி பெற்று (யுனெடெட் ஸ்டேட்ஸ்) அமெரிக்க ஐக்கிய நாடுகள் 1776-ஆம் வருஷம் ஜுலை மாஸம் நாலாந் தேதியன்று விடுதலைக் கொடி நாட்டின.] மேற்படி லண்டன் நிருபர் எழுதுகிறார்.

"இன்று ஜுலை நாலாந் தேதியன்று (ஆங்கிலேயராகிய) நாமெல்லோரும் நம்முடைய அமெரிக்க ஸகோதரருடன் கலந்து ஐக்யநாடுகளின் விடுதலையை ஆவலுடன் கொண்டாடுகிறோம்."

இன்று ஆங்கிலேயர் சொல்லும் வார்த்தைகளையும், செய்யும் செய்கைகளையும் 142 வருஷங்களுக்கு முன்பு சொல்லியும், செய்துமிருப்பார்களாயின் தேசத் துரோகிகளென்றும், கலகக்காரரென்றும் சொல்லி மரண தண்டனை விதிக்கப்பட்டிருக்கும். இதனைப் பல ஆங்கிலேயர் இப்போது நினைத்திருக்கக்கூட மாட்டார்கள். அதே ஆங்கிலேயரில் சிலர் இக்காலத்தில் "விடுதலைபெற நியாயமாகப் போராடும்" வேறு சில ஜாதியார் விஷயத்தில் என்ன மாதிரியான வார்த்தை சொல்லுகிறார்கள்?

இங்கு ஒரு முக்யமான பேதத்தை மேற்படி லண்டன் நிருபர் மறந்து விட்டார். ஐக்ய நாடுகள் விடுதலைக்காகப் படை சேர்த்துப் போர் புரிந்து ப்ரான்ஸ் தேசத்தின் உதவியால் இங்கிலாந்தை வென்றன. ஐர்லாந்து கலகங்கள் செய்து விடுதலை பெற முயன்று வருகிறது.

இந்தியாவோ அப்படியில்லை. ஆங்கிலேயரிடமிருந்து ஸமாதானமாகவே ஸ்வராஜ்யம் சட்டத்துக்கிணங்கிய முறைகளால் பெற விரும்புகிறது.

"உபாயத்தால் ஸாதிக்கக் கூடிய கார்யத்தைப் பராக்கிரமத்தால் ஸாதிக்க முடியாது" என்று பஞ்சதந்திரம் கூறுகிறது. மேலும் நமக்கு ஆங்கிலேயர் ஸமாதானமாகவே ஸ்வராஜ்யம் கொடுத்து விடுவார்கள் என்று நினைப்பதற்குக் காலதேச வர்த்தமானங்கள் மிகவும் அநுகூலமாகவே யிருக்கின்றன.

எங்ஙனமெனில் மந்திரி மிஸ்டர் மான்டேகுவும், ராஜப்ரதிநிதி லார்டு செம்ஸ்போர்டும் சேர்ந்து தயார் செய்திருக்கும் சீர்திருத்த ஆலோசனைப் புஸ்தகத்தில் அவர்கள் பின்வருமாறு கூறுகின்றனர். "இந்தியாவின் எதிர்கால நிலை டில்லி நகரத்திலேனும் ஸிம்லாவிலேனும் வைட்ஹாலிலேனும் நிச்சயிக்கப் படுவதன்று. ப்ரான்ஸ் தேசத்துப் போர்க்களங்களிலே நிச்சயிக்கப்படும்" என்கிறார்கள்.

இங்ஙனம் மந்திரியும் ராஜப்பிரதிநிதியும் கூறுவதன் பொருள் நமக்குத் தெளிவாக விளங்கவில்லை. எனினும், நேசக் கக்ஷியாருக்கு வெற்றி கிடைத்தால் நமக்கு ஸ்வராஜ்யம் கொடுக்க முடியுமென்று அவர்கள் சொல்வதாகவே நாம் பொருள் கொள்ள நேர்கிறது.

இதனிடையே இந்தியாவில் இந்து-மஹமதிய பேதங்களிருப்பதாகக் காட்டி அதினின்றும் இந்தியாவுக்கு ஸ்வராஜ்யம் கொடுக்கத் தகாதென்று சொல்லும் ஆங்கிலோ இந்தியப் பத்திராதிபர் முதலிய வெளிநாட்டு, உள்நாட்டு துரோகிகள் எல்லார் வாயிலும் ஸ்ரீமான் ஸய்யது ஹஸேன் இமாம் - நமது விசேஷ ஜனசபைக் கூட்டத்தின் அதிபதி -

மண்ணைக் கொட்டிவிட்டார். "எல்லா வகுப்புகளும் இப்போது கொண்டிருக்கும் ஐக்ய புத்தியையும், எல்லார் நலமும் ஒன்றென்ற கருத்தையும் எதிர்க்க முடியாது" என்று அவர் சொல்லுகிறார்.

மேலும் இந்தியாவுக்கு ஸ்வராஜ்யம் மிகவும் அவசியமென்பதை விளக்கிக் காட்டும் பொருட்டாக நீதி நிபுண ஸய்யது ஹஸேன் இமாம் ஸாஹப் சொல்லும் பின்வரும் வாக்யங்களுக்கு ஆங்கிலோ இந்தியப் பத்திராதிபர் என்ன மறுமொழி சொல்லக் கூடும்? ஹஸேன் இமாம் கூறுகின்றார்:—

"எல்லாவிதமான அன்னியாதிபத்தியங்களைக் காட்டிலும் ஒரு தேசத்தார் மற்றொரு தேசத்தார் மீது செலுத்தும் அன்னியாதிபத்தியம் மிகக் கொடியது என்று மக்காலே சொன்னார். இது மக்காலே காலத்தில் எத்தனை உண்மையோ அத்தனை இக் காலத்திலும் உண்மையே. அவர் வார்த்தை மற்ற தேசங்களுக்கு எவ்வளவு பொருந்துமோ அத்தனை இந்தியாவுக்கும் பொருந்தும். அன்ய நுகத்தடியின் கஷ்டத்தை இந்தியா உணர்கின்றதென்பதை மறுத்தல் மூலஸத்யங்களைப் பார்க்க மாட்டோமென்று கண்ணை மூடிக் கொள்வதேயாகும். இந்தியாவில் ப்ரிடிஷ் ராஜ்யத்தை ஆதரித்துப் பேசுவோர் இந்நாட்டிற்கு ப்ரிடிஷார் பரோபகார சிந்தனை கொண்டு மட்டும் வந்ததாகச் சொல்லுகிறார்கள். இந்நாட்டு ஜனங்கள் தமக்குத் தாமே தீங்கு செய்து கொள்ளாமல் காக்கும் பொருட்டாகவும், நம்மவரின் தர்ம ஞானத்தை உயர்த்தும் பொருட்டாகவும், நம்மவருக்கு லௌகிகச் செல்வம் ஏற்படுத்திக் கொடுக்கும்

பொருட்டாகவும், இது போன்ற பல காரணங்களின் பொருட்டாகவும் அவர்கள் இங்கு வந்ததாகச் சொல்லப் படுகிறது ; இவையெல்லாம் பக்ஷபாதிகள் வழக்கமாகச் சொல்லும் அரைமொழிச் சொற்களேயாம். உண்மை யாதெனிலோ, ஈஸ்ட் இந்தியா கம்பெனி ஏற்படுத்தப்பட்டது, இந்தியாவின் நன்மைக்காக அன்று. இந்தியாவினின்றும் பணத்தை ஏராளமாய்த் திரட்டிக் கொண்டு போய் ப்ரித்தானியாவுக்கு நன்மை செய்யும் பொருட்டாக ஏற்பட்டது. பொன்னுசையுடன் மண்ணுசையும் கலந்தது. பிறகு கம்பெனியாரிடமிருந்து அரசு மகுடத்தின் கீழே கொண்டுவரப்பட்ட பின் பொருளாசையும் அதிகார ஆவலும் ஆட்சி செய்வோருக்குக் குறைவுபடவில்லை. பேதம் யாதெனில், யதேச்சாதிகாரத்தை இப்போது ஒழுங்குப்படி நடத்துகிறார்கள். அந்தக் கொள்ளை சாஸ்த்ர தோரணையில் நடந்து வருகிறது!" என்று நம்முடைய ஜனசபைத் தலைவர் சொல்லுகிறார். "இஃதெல்லாம் ஜனங்களுக்குத் தெரியும். இது அவர்கள் நெஞ்சை உறுத்துகிறது. எனவே பண்டைச் செயல்களுக்கெல்லாம் இப்போது (ஆங்கில அதிகாரிகள்) பரிகாரம் அல்லது ப்ராயச் சித்தம் செய்ய வேண்டுமென்று ஜனங்கள் கேட்கிறார்கள்" என்று கூறி ஸய்யது இமாம் முடிக்கிறார்.

இதுதான் விஷயம் முழுதும்.

இவ்வித அதிகாரிகளின் கையினின்று நம்மை மீட்டு நமக்கு ஸ்வராஜ்யம் கொடுக்க வேண்டுமென்று மாட்சிமை தங்கிய ஐந்தாம் ஜார்ஜ் சக்ர

வர்த்தியிடம் அழுத்தமாகப் ப்ரார்த்தனை செய்கிறோம்.

எங்களுக்கு உடனே ஸ்வராஜ்யம் கொடுக்க வேண்டுமென்று வணக்கத்துடனும் எங்களுடைய பரிபூரண ஜீவபலத்துடனும் ப்ரார்த்தனை செய்து கொள்ளுகிறோம்.

# பரலி சு. நெல்லையப்பருக்குக் கடிதம்

21 டிசம்பர் 1918

குறிப்பு :—பாரதியார் புதுச்சேரியிலிருந்து வெளி வந்த பிறகு கடையம் சேர்ந்த விஷயத்தை இக் கடிதம் குறிப்பிடுகிறது. கடையம் சேர்ந்த காலத்தையும் உத்தேசமாக இதிலிருந்து அறிந்து கொள்ளலாம். கடிதம் பாரதியாருடைய கையெழுத்திலேயே தனியாகக் கொடுக்கப்பட்டுள்ளது.

# எட்டயபுரம் அரசருக்குச் சீட்டுக் கவிகள்

2 மே 1919

குறிப்பு :—இச் சீட்டுக் கவிகள் இரண்டும் முதல் தொகுதியில் ஸ்வசரிதையும் பிற பாடல்களும் என்ற பகுதியில் சேர்க்கப் பட்டுள்ளன.

புதுச்சேரியிலிருந்து கடையம் வந்து அங்கு சில காலம் பாரதியார் வசித்தார். அந்தச் சமயத்தில் இவை எழுதப் பெற்றிருக்கின்றன.

# வேப்ப மரம்

(ஒரு சிறிய கதை)

ஸ்ரீமான் சி. சுப்பிரமணிய பாரதி

21 ஜூன் 1919 சித்தார்த்தி ஆனி 7

இளவேனிற்காலத்தில் ஒரு நாள். காலை வேளையில் நான் மலயகிரிச் சார்பிலே தனியாக உலாவிக் கொண்டிருந்தேன். நெடுந்தூரம் சுற்றிய பிறகு என் உடம்பில் சற்றே இளைப்புண்டாயிற்று. அந்த இளைப்புத் தீரும் பொருட்டாக அங்கொரு தோப்புக்குள்ளே போய் ஒரு வேப்பமரத்தடியில் படுத்துக் கொண்டேன். இன்பமான காற்று வீசிற்று. சிறிது நேரத்துக்குள் கண்ணயர்ந்து நித்திரையில் ஆழ்ந்து விட்டேன். அப்போது நான் கண்ட அபூர்வமான கனவை இங்கெழுதுகிறேன்.

நான் தூங்கிக்கொண்டிருக்கையில், "ஏ மனிதா, ஏ மனிதா, எழுந்திரு; எழுந்திரு" என்று அமானுஷிகமாக ஒலி யொன்று கேட்டது. இந்த ஒலியைக் கேட்டவுடன் கண்ணை விழித்தேன். உண்மையாகவே விழிக்கவில்லை. கனவில் விழித்தேன். அதாவது விழித்துக் கொண்டதாகக் கனவு கண்டேன்.

விழித்து, "யார் கூப்பிட்டது?" என்று கேட்டேன்.

"நான்தான் வேப்பமரம்; நான்தான் கூப்பிட்டேன்; எழுந்திரு" என்று மறுமொழி உண்டாயிற்று.

உடனே நான் யோசிக்கலானேன் :—

"ஓஹோ, ஓஹோ! இது பேயோ, பிசாசோ, யக்ஷர், கிந்நரர், கந்தர்வர் முதலிய தேவ ஜாதியாரோ, வன தேவதைகளோ, யாரோ தெரியவில்லை. இல்லாவிட்டால் வேப்பமரம் எங்கேனும் பேசுவதுண்டோ? அட, போடா, பேயாவது? அதெல்லாம் சுத்தக் கட்டுக்கதை யன்றோ? நாம் உண்மையாகவே கண்ணை விழித்து ஜாக்ர நிலையடையவில்லை. இன்னும் கனவு நிலையிலேதானிருக்கின்றோம். இந்த ஒலி கனவில் கேட்கும் கற்பனையொலி"—இங்ஙனம் நான் யோசனை செய்து கொண்டிருக்கையில், "ஏ மனிதா, ஏ மனிதா, எழுந்திரு" என்று மறுபடி சத்தமுண்டாயிற்று.

"நீ யார்?" என்று பின்னுங் கேட்டேன்.

"நான் வேப்பமரம். என் அடியிலேதான் நீ படுத்திருக்கிறாய். உனக்குச் சில நேர்த்தியான விஷயங்கள் கற்றுக் கொடுக்கும் பொருட்டாக எழுப்புகிறேன்" என்று மறுமொழி வந்தது.

அப்போது நான் :—"சரி, நமக்குத் தெரியாத விஷயங்கள் உலகத்தில் எத்தனையோ உண்டென்று ஷேக்ஸ்பியரே சொல்லி யிருக்கிறார். அந்தப்படி மரங்களுக்குப் பேசும் சக்தி இருக்கலாம். அவ் விஷயம் நமக்கு இதுவரை தெரியாமலிருக்கலாம். ஆதலால், இந்த மரத்துடன் ஸம்பாஷணை செய்து

விஷயத்தை உணர்ந்து கொள்வோம்" என்றெண்ணிக் கண்ணைத் திறந்துகொண்டெழுந்து நின்றேன்.

(உண்மையாகவே எழுந்து நிற்கவில்லை. எழுந்து நின்றதாகக் கனவு கண்டேன்.)

எழுந்து நின்று கொண்டு :—"வேப்பமரமே, உனக்கு மனித பாஷை எப்படித் தெரிந்தது? மனிதரைப்போல் நெஞ்சு, வாய், தொண்டை, அண்ணம், நாக்கு, பல், உதடு என்ற கருவிகளில்லாதபோது மனித பாஷை பேசுவது ஸாத்யப் படாதே? எங்களிலே பல் மாத்திரம் விழுந்தவர்களுக்கும் உச்சரிப்பு நேரே வராமல் போகிறதே. அடி நாக்கில்லாதவர்கள் ஊமையாய்ப் போகிறார்களே. அப்படியிருக்க நீ மனித சரீரமேயில்லாமல் மனித பாஷை எங்ஙனம் பேசுகிறாய்?" என்று கேட்டேன்.

அப்போது வேப்பமரம் சொல்லுகிறது:—

"கேளாய், மானுடா, மனிதனுக்கு ஒரே வாய்தானுண்டு. எனக்கு உடம்பெல்லாம் வாய். மனித பாஷை பேசுவதற்கு வாய் முதலிய புறக் கருவிகள் மனிதரைப் போலவே யிருத்தல் அவசியமென்று நீ நினைக்கிறாய். ஸாதாரண ஸ்திதியில் அவை அவசியந்தான். ஆனால், நான் ஸாதாரண மரமில்லை. நான் அகஸ்த்ய முனிவரின் சிஷ்யன். தமிழ் பாஷையில் எனக்குள்ள ஞானம் இக்காலத்தில் அகஸ்த்யரைத் தவிர வேறு யாருக்குமே கிடையாது......."

வேப்பமரம் பின்னுஞ் சொல்லுகிறது :—

"நடந்த கதையை அடியிலிருந்து சொல்லுகிறேன். மானுடா, கவனத்துடன் கேள். எனக்கு

இப்போது முப்பது வயதுதானுகிறது. நான் இள மரம். பதினைந்து வருஷங்களின் முன்பு ஒரு நாள் வஸந்த காலத்தின்போது இராவேளையில் ஆச்சர்ய மான நிலா வீசிக் கொண்டிருந்தது. நான் விழித் துக் கொண்டிருந்தேன். ஸாதாரணமாக மரங்கள் மனிதரைப் போலவே பகல் முழுவதும் விழித்துக் கொண்டிருக்கும். இரவானவுடனே தூங்கும். அன் றிரவு எனக்கு எந்தக் காரணத்தாலோ தூக்கமே வரவில்லை. நிலாவையும், வானத்தையும், சூழ்ந்திருக் கும் மரங்களையும் பார்த்துக் கொண்டு பிரமாநந்தத் தில் முழுகி யிருந்தேன். அப்போது பதினறு வய துடைய, மிகவும் அழகான மனித ஆண் பிள்ளை யொருவனும், அவனைக் காட்டிலும் அழகான பன்னிரண்டு வயதுடைய மனிதப் பெண் ஒருத்தியும் அதோ தெரிகிற நதியில் விளையாடிக் கொண்டிருப் பதைக் கண்டேன். சிறிது நேரத்துக்குள்ளே அவ் விருவரும் ஸாமான்ய மனிதரில்லை யென்பது எனக் குத் தெளிவாய் விட்டது. சிறகுகளில்லாமல் அவர் கள் வானத்தில் பறந்து விளையாடுவது கண்டேன். பிறகு ஒருவருக்கொருவர் பேசிய வார்த்தைகளி லிருந்து அவர்கள் இன்னரென்று தெரிந்து கொண் டேன். அவ்விருவரும் யாரெனில் அகஸ்த்ய மஹரிஷியும் தாம்ரபர்ணியம்மனும். அகஸ்த்யர் ஸாதாரண காலத்தில் கட்டை விரலளவுடைய வடி வங் தரித்திருப்பது வழக்கம். ஆனல் அவர் காமரூபி. அதாவது, நினைத்தபோது நினைத்த வடிவங் தரிக் கும் திறமை படைத்தவர். தாம்ரபர்ணி யம்மனும் அப்படியே. ஆதலால் அவ்விருவரும் அப்போது

அதி சுந்தரமான மனுஷ்ய ரூபந்தரித்து விளையாடிக் கொண்டிருந்தார்கள். அவர்களுடைய கிரீடை பொழுது விடியும் வரை நடந்தது. அப்பால் தாம்ர பர்ணி மறைந்து விட்டாள்........"

வேப்பமரம் சொல்லுகிறது :—"கேளாய், மானுடா, கவனத்துடன் கேள். தாம்ரபர்ணியம்மன் பகலைக் கண்டவுடன் மறைந்து சென்று விட்டாள். அகஸ்த்யர் மாத்திரம் தனியாக வந்து எனதடியில்-இப்போது நீ நிற்குமிடத்திலே-படுத்துக் கொண்டு யோக நித்திரையில் ஆழ்ந்தனர். எனக்கு அந்த ஸமயத்தில் அகஸ்த்யருடைய சக்திகளெல்லாம் நன்ருகத் தெரியாது. ஆதலால், அவர் யோகத்தி லிருக்கிருரென்பதை அறியாமல் ஜலக்கிரீடையின் சிரமத்தால் ஸாதாரண நித்திரையிலிருக்கிருரென்று நினைத்தேன். பொழுது விடிந்து ஏறக்குறைய ஒரு ஜாமமாயிற்று. அப்போது அதோ, உனக்கெதிரே ஒரு புளியமரம் நிற்கிறது பார்—அந்த மரத்தின் கீழேயுள்ள புற்றிலிருந்து ஒருபெரிய நல்ல பாம்பு 'ஹூஸ்' என்று சீத்காரம்செய்து கொண்டு அகஸ்தியர் படுத்திருந்த இடத்தை நோக்கிப் பாய்ந்து பாய்ந்து வரலாயிற்று. அதைக் கண்ட மாத்திரத்தில் நான் திடுக்கிட்டுப் போனேன். 'ஐயோ! இந்தக் கொடிய பாம்பு இந்த மஹா புருஷனைக் கொன்றுவிடப் போகிறதே! இவரை எப்படியேனும் கண் விழிக்கும்படி செய்வோமானல் தம்முடைய தவ வலிமையினல் பாம்பை அடக்கி விடுவார்' என்றெண்ணி அவரை விழிக்கச் செய்ய வேண்டுமென்ற நோக்கத்துடன் என் இலைகளை

அவர் மீது சொரிந்தேன். அவர் விழிக்கவில்லை. இதற்குள் பாம்பும் அவரை நெருங்கி வந்து அவருடைய பாதத்தில் இரண்டு முறை கடித்தது. மூன்றாம் முறை கடிக்கும் பொருட்டும் படத்தைத் தூக்கிற்று. அத்தருணத்தில் அவர் கண்ணைத் திறந்து பார்த்துக் கயிற்றைத் தூக்குவதுபோல் எளிதாக அந்தப் பாம்பைக் கையால் எடுத்துக் கழுத்தில் வளைய வளையச் சுற்றிக் கொண்டார். அந்தப் பாம்பும் கயிற்றைப் போலவே ஒன்றும் செய்யாமல் பரம ஸாதுவாக அவர் கழுத்தில் கிடந்தது. கடியுண்ட இடத்தில் இரத்தம் ஒழுகிக்கொண்டிருந்தது. அதில் அவர் கொஞ்சம் மண்ணை யெடுத்துப் பூசினார். புண் உடனே ஆறிப்போய் சாதாரணத் தோலாய் விட்டது. இதைக் கண்டு நான் மிகவும் ஆச்சர்யமடைந்தேன். இப்படிப்பட்ட மஹானிடம் ஒரு வார்த்தை பேசக்கூட யோக்கியதை யில்லாமல், ஊமை மரமாய்ப் பிறந்து விட்டோமே என்றெண்ணித் துயரப்பட்டேன். எப்படியேனும் எனது கருத்தை அவருக்குத் தெரிவிக்க விரும்பி அவர் காலின் மீது சில மலர்களையும் இலைகளையும் சொரிந்தேன். அவர் தலையை நிமிர்த்து என்னை நோக்கி :—

'வேப்பமரமே' என்று கூப்பிட்டார்.

வேப்பமரம் பின்னுங் கதை சொல்லுகிறது :—
"கேளாய், மானுடா, கவனத்துடன் கேள். இங்ஙனம் என்னை அகஸ்த்யர் கூப்பிட்டவுடனே என்னை யறியாமலே என் கிளைகளிலுள்ள வாய்களினின்றும், 'ஏன் முனிவரே?' என்ற தமிழ்ச் சொற்

கள் உதித்தன. என் உடம்பு முழுவதும் புளகித
மாய் விட்டது. மாற்றிப் பிறக்க வகையறிந்து
கொண்டேன். வேப்பமரப் பிறவி போய் எனக்கு
மனிதப் பிறவி யுண்டாயிற்றென்று தெரிந்து
கொண்டேன். உடம்பு மாறவில்லை. உடம்பு
மாறினலென்ன, மாருவிட்டாலென்ன? நான் உடம்
பில்லை. நான் ஆத்மா. நான் போதம். நான் அறிவு.
திடீரென்று வேப்பமரச் சித்தம் மாறிப் போய்
எனக்குள் மனுஷ்ய சித்தம் சமைந்து விட்டது.
மனுஷ்ய சித்தம் ஏற்பட்டாலன்றி மனித பாஷை
பேச வருமா? கோடி ஜன்மங்களில் நான் பெற்றி
ருக்க வேண்டிய பயனை அந்த முனிவர் எனக்கு
ஒரே கணத்தில் அருள் செய்தார். எனக்கேற்பட்ட
ஆனந்த மிகுதியால் என் பூக்களையும் இலைகளையும்
கணக்கில்லாமல் அவருடைய பாதத்தின் மீது
வர்ஷித்தேன். அவர் மிகவும் மகிழ்ச்சி பூத்தவராய்,
'ஏ, வேப்ப மரமே, நேற்றிரவு நானும் தாம்ரபர்ணி
யும் இங்கு ராம நதியில் ஜலக்ரீடை செய்து கொண்
டிருந்த காலத்தில் நீ பார்த்துப் பெரு மகிழ் வெய்திப்
பல ஆசிர்வாதங்கள் கூறினய். அதை நான் ஞான
திருஷ்டியால் உணர்ந்தேன். அப்பால், சிறிது
நேரத்துக்கு முன்பு நான் யோக ஸமாதியிலிருந்த
போது இந்தப் பாம்பு வருவதைக் கண்டு நீ என்னைக்
காக்க விரும்பி என்னை எழுப்பும் பொருட்டாக என்
மீது நின் இலைகளையும் பூக்களையும் சொரிந்தாய்.
இங்ஙனம் நீ என்னிடம் காட்டிய அன்பிற்குக் கைம்
மாருக உனக்கு நான் ரிஷிபோதம் கொடுக்கிறேன்.
இதனல் உனக்கு ஸகல ஜந்துக்களின் பாஷைகளி

லும் சிறந்த ஞானம் இயல்பாகவே உண்டாய்விடும். எல்லா ஜந்துக்களினிடத்திலும் ஸமமான பார்வையும் ஸமமான அன்பும் உண்டாகும். எல்லா உயிர்களி டத்திலும் தன்னையே காண்பதாகிய தேவ திருஷ்டி ஏற்படும். இவற்றால் நீ ஜீவன் முக்தி பெறுவாய்' என்றார். அது முதல் நான் அவர் கூறிய சக்தி களெல்லாம் பெற்று, யாதொரு கவலையுமில்லாமல் யாதொரு பயமுமில்லாமல் ஜீவன் முக்தி பத மடைந்து வாழ்ந்து வருகிறேன்" என்று வேப்ப மரம் சொல்லிற்று. உடனே நான் அந்த வேப்ப மரத்தடியில் ஸாஷ்டாங்கமாக நமஸ்காரம் பண்ணி னேன். "உனக்கென்ன வேண்டும்?" என்று கேட் டது. அப்போது நான் அந்த வேப்ப மரத்தை நோக்கி:— "உனக்கெப்படி அகஸ்த்யர் குருவோ அப்படியே நீ எனக்கு குரு. அந்த முனிவர் உனக் கருள் புரிந்த ஜீவன் முக்தி பதத்தை நீ எனக்கருள் புரிய வேண்டும்" என்று பிரார்த்தனை செய்தேன்.

"கொடுத்தேன்" என்றது வேப்ப மரம்........

இந்த ஸமயத்தில் நான் உண்மையாகவே தூக்கந் தெளிந்து கண்ணை விழித்தெழுந்து நின் றேன்; எழுத்தாணிக் குருவிகளும், சிட்டுக் குருவி களும் வேறு பலவிதமான குருவிகளும் பறந்து கூவி விளையாடிக் கொண்டிருந்தன. அணில்களும் ஓந்தி களும் ஆடியோடிக்கொண்டிருந்தன. காக்கைகளும், கிளிகளும், பருந்துகளும், தட்டான் பூச்சிகளும், வேறு பலவகை வண்டுகளும் ஒளிக்கடலிலே களித் தோணி கொண்டு நீந்துவது போல் உலாவி வந்தன. கண்ணுக்குப் புலப்படாத மறைவிலிருந்து ஓராண்

குயிலும் ஒரு பெண் குயிலும் ஒன்றுக் கொன்று காதற் பாட்டுக்கள் பாடிக் கொண்டிருந்தன.

ஆண் குயில் பாடுகிறது :—

"துஹூ, துஹூ, துஹூ

துஹூ, துஹூ, துஹூ

ராதா ரே."

[இதன் பொருள் :—

நீ, நீ, நீ.

நீ, நீ, நீ.

ராதை யடீ.]

பெண் குயில் பாடுகிறது :—

"துஹூ, துஹூ, துஹூ

ராதா க்ருஷ்ண, க்ருஷ்ண, க்ருஷ்ண".

வேப்பமரம் தனது பசிய இலைகளை வெயிலில் மெல்ல மெல்ல அசைத்துக் கொண்டிருந்தது. "என்ன ஆச்சர்யமான கனவு கண்டோம்!" என்றெண்ணி யெண்ணி வியப்புற்றேன். இதற்குள் வெயிலேறலாயிற்று. எனக்கும் பசியேறத் தொடங்கிற்று. வேப்ப மரத்துக்கு ஒரு கும்பிடு போட்டு விட்டுத் தோப்பினின்று புறப்பட்டு வீட்டுக்கு வந்து சேர்ந்தேன்.

# காந்தாமணி

## (ஒரு சிறு கதை)

ஸ்ரீமான் ஸி. சுப்பிரமணிய பாரதி எழுதியது.

14 செப்டம்பர் 1919

"காந்தாமணி, உங்கப்பா பெயரென்ன?" என்று பாட்டி கேட்டாள். ஒரு கிணற்றங்கரையில் நடந்த ஸங்கதி. கோடைக் காலம். மாலை வேளை. வானத்திலே பால ஸூர்யன் கிரணங்களை ஒழிவில்லாமல் பொழிந்து விளையாடுகிறான். எதிரே நீலமலை; பச்சை மரங்கள்; பசுக்கள்; பல மனிதர்; சில கழுதைகள்; இவற்றின் தொகுதி நின்றது. வெயிலொளி எந்தப் பொருள் மீது பட்டாலும் அந்தப் பொருள் அழகுடையதாகத் தோன்றுமென்று ஷெல்லி என்ற ஆங்கிலக் கவிராயன் சொல்லுகிறான். எனக்கு எந்த நேரத்திலும் எந்தப் பொருள்களும் பார்க்க அழகுடையனவாகத் தோன்றுகின்றன.

ஆனால் காலை வேளையில் மனிதக் கூட்டத்தில் கொஞ்சம் உற்சாகமும் சுறுசுறுப்பும் அதிகமாகக் காணப்படுவதால் அப்போது உலகம் மிகவும் சந்தோஷகரமான காட்சி யுடையதாகிறது.

தோட்டத்துக்கு நடுவே ஒரு கிணறு. அத் தோட்டத்தில் சில அரளிப்பூச் செடிகள்; சில மல்லிகைப்பூச் செடிகள்; சில ரோஜாப்பூச்

செடிகள். அக் கிணற்றிலிருந்து அதற்கடுத்த வீதியி லுள்ள பெண்களெல்லாரும் ஜலம் எடுத்துக் கொண்டு போவார்கள்.

இந்தக் கதை தொடங்குகிற அன்று காலையில் அங்கு காந்தாமணியையும் பாட்டியையும் தவிர ஒரு குருட்டுக் கிழவர் தாமே ஜலமிறைத்து ஸ்நானத் தைப் பண்ணிக் கொண்டிருந்தார். போலீஸ் உத்தியோகத்திலிருந்து தள்ளுபடியாகி அதிலிருந்து அந்தக் கிராமத்துக்கு வந்து தமது வாழ்நாளின் மாலைப் பொழுதை ராமநாமத்தில் செலவிடும் பார்த்தசாரதி அய்யங்கார் அங்கு பக்கத்திலே நின்று கிழவியைப் குறிப்பிட்டுப் பார்த்துக் கொண்டிருந்தார்.

மேற்படி கிணற்றுக்கருகே ஒரு குட்டிச்சுவர். அதற்குப் பின்னே ஒரு வேப்பஞ் சோலை. அங்கு பல மூலிகைகளிருக்கின்றன. அவற்றுள் ஒன்று மிகுந்த பசி உண்டாக்கு மென்று என்னிடம் ஒரு சாமியார் சொன்னார். அது கொண்டு நான் மேற்படி மூலிகையைப் பறித்து வரும் பொருட்டாக அந்தச் சோலைக்குப் போயிருந்தேன். வானத்தில் குருவி கள் பாடுகின்றன. காக்கைகள் ‘கா, கா’ என்று உபதேசம் புரிகின்றன. வானவெளியிலே ஒளி நர்த்தனம் பண்ணுகிறது. எதிரே காந்தாமணியின் திவ்ய விக்ரஹம் தோன்றிற்று.

“உங்கப்பா பெயரென்ன?” என்று பாட்டி காந்தாமணியிடம் கேட்டாள்.

“எங்கப்பா பெயர் பார்த்தஸாரதி அய்யங்கார்” என்று காந்தாமணி புல்லாங்குழலைப் போல் ஊதிச்

றந்த பாட்டுப் பக்ஷிகளுக்குத் தன் கிளைகளிலே வாஸம் தரும்.

இந்தக் குப்பையான பழைய யந்திரத்துடன் நான் ஸமாதானம் ஏன் பேச வேண்டும்? நமது நீதி ஸ்தலங்கள், கச்சேரிகள், போலீஸ் டாணாக்கள், சிறைச்சாலைகள், பைத்திய வைத்தியசாலைகள் முதலிய நம்முடைய நாகரிகக் கோலங்களுடன் அதுவும் ஒன்றாகச் சேர்த்துவிடுங்கள். தேசத்துக்குப் பழமும் நிழலும் வேண்டுமாயின், இந்தச் செங்கல் சுண்ணாம்புக் கட்டிடங்களை விட்டு வெறுங் தரைக்கு வருக. வேத காலத்தில் காட்டில் ஆசிரமங்களிலும், பௌத்த காலத்தில் நளந்தா, தக்ஷசிலா முதலிய இடங்களிலும், இன்று நமது வீழ்ச்சிக் காலத்திலே கூடத் திண்ணைப் பள்ளிக்கூடங்கள், சாஸ்த்ரப் பாட சாலைகளிலும் பிள்ளைகள் கூடவில்லையா? அது போலே இப்போதும் நாம் ஸர்வகலாசாலை வைத்து நமது பிராண சக்தியால் போஷிப்போமென்று ஏன் தைரியத்துடன் சொல்லக்கூடாது? ஸ்ருஷ்டியில் முதற்படி விரும்புதல்; இன்று நமது தேசத்தில் அவ்வித விருப்பத்தின் சலனங்கள் இல்லையா? ஆராய்ச்சியிலும் தியானத்திலும் படிப்பிலும் ஈடுபட்ட நமது நாட்டு வித்வான்கள் தமது வித்தையைப் பிறருக்குக் கொடுக்க வேண்டுமென்று இச்சைப் படுவதுபோல் அதை அவர்களிடம் பெறவேண்டுமென்று விரும்புவோர் யாருமில்லையா? ஏறிச்* செல்லும் நீராவியோடு கலந்து செழிப்பை யுண்டாக்கும் மழையாக விழுகின்ற மேகங்களைப் போலத் தாய்ப் பாஷையிற் கலந்து தாய் நாட்டிலுள்ள தாகங்

கொண்டோருக்குத் தண்ணீராகவும், பசித் தோருக்கு ஆகாரமாகவும் பெருக்கெடுக்க ஆசை கொள்வோர் யாருமில்லையா?

கடைசியாகக் கூறிய எனது வார்த்தைகள் கிரியாம்சையில் ஸாத்யமானவையல்ல; ஒரு கருத் தையே அவை வெளியிடுகின்றன. ஆனால் இந்தக் காலம் வரை கிரியாம்சையில் ஸாத்தியமாகக் கூடிய ஆலோசனைகள் ஒட்டுப் போடுவதற்குத்தான் உதவி யிருக்கின்றன; கருத்துக்களே உண்மையான சிருஷ்டிசெய்துள்ளன.

குறிப்பு:—மேலேயுள்ள கட்டுரையின் இறுதியிலே சில வரிகள் கிடைக்கவில்லை. முடிவுறுமல் கட்டுரையை அப்படியே நிறுத்தி னல் வாசகர்களுக்குத் தாகூரின் முழுக் கருத்தும் தெரியாமற் போய்விடும் என்று கருதி உடுக்குறியிட்ட பாகத்திலிருந்து இறுதி வரை ஆங்கிலக் கட்டுரையைப் பார்த்து மொழிபெயர்த்துச் சேர்க்க நேர்ந்தது. பாரதியார் எழுதிய இறுதிக் கட்டுரையாக **ஸ்ரீ ரவீந்திர திக் விஜயம்** என்பது கிடைத்துள்ளது. அது சுதேச மித்திரனில் வெளியான தேதி 1921 ஆகஸ்ட் 25. அடுத்த செப் டம்பர் 11-ஆம் தேதியில் பாரதியாரின் பூதவுடல் ஓய்ந்துவிடுகிறது. உலகப் புகழ் பெற்ற ஒரு கவிஞருக்கு மற்ருெரு சிறந்த கவிஞர் தமது இறுதி அஞ்சலியைச் செலுத்திவிட்டு விடைபெற்றுக் கொள்ளுகிருர்.

ரவீந்திரநாத தாகூரின் வாக்கிலே பாரதியாருக்கு மிகுந்த பற்று தலுண்டு. தாகூரின் சிறந்த கவிதைகள், கதைகள், கட்டுரைகள் சிலவற்றைப் பாரதியார் தமிழில் மொழிபெயர்த்திருக்கிருர். "வளர் பிறை" குழந்தைக் கதை என்ற கட்டுரையிலே (பாரதி நூல்கள் - தொகுதி 1.) தாகூரின் சில பாடல்களையும், "நாட்டுக் கல்வி" என்ற பாடலையும் (தொகுதி 1.) மொழிபெயர்த்திருக் கிருர். உரை நடைக் கவிதை எழுதுவதற்கும் ரவீந்திரரே இவ ருக்கு முக்கியமாக உற்சாகம் அளித்திருக்கிருர் என்று கூறலாம். தாகூரின் சிறுகதைகளையும் பாரதியார் மொழிபெயர்த்திருக்கிருர்.

வ. வெ. சு. ஐயர் முதலியோர் செய்த மொழி பெயர்ப்புக்களுடன் சேர்த்து அவை நூல் வடிவில் முன்பு வெளியாயின. நான் வைத்திருந்த அந் நூற் பிரதி கை நழுவி விட்டது. வேறு பிரதியும் கிடைக்கவில்லை. தாகூர் எழுதிய கட்டுரைகள் சிலவற்றையும் பாரதியார் மொழி பெயர்த்திருக்கிறார். அவற்றில் ஐந்தைத் தொகுத்து **தாகூரின் பஞ்ச வியாசங்கள்** என்ற தலைப்புடன் ஒரு நூலாக முன்பு வெளியிட்டுள்ளனர். அந்நூலின் பிரதிகள் இப்பொழுது கிடைப்பதில்லை. திரு. பி. ஸ்ரீ. அவர்கள் அருமையாகப் பாதுகாத்து வைத்திருந்த பிரதி யொன்றை எனக்கு அன்புடன் உதவினார்கள். அதில் கடைசிப் பக்கம் மட்டும் இல்லை.

அன்பர் பி. ஸ்ரீ. அவர்கள் பாரதியாரோடு பழகியவர்; அவரிடத்திலே பெரிதும் ஈடுபாடுடையவர்கள். பாரதியாருடைய நூல்களை மக்கள் நன்கு சுவைக்க வேண்டும் என்ற ஆர்வமுடையவர்கள். இந்நூலை நல்ல முறையிலே வெளிக் கொண்டுவர திரு. பி ஸ்ரீ. ஆர்வத்தோடு பலமுறை எனக்கு யோசனை கூறியுதவினார். அவருக்கு எனது நன்றியைத் தெரிவித்துக் கொள்ளுகிறேன்.

தாகூர் எழுதிய இந்த ஐந்து கட்டுரைகளும் 'மாட்ர்ன் ரெவியூ' என்ற பத்திரிகையில் கீழ்க்கண்ட தேதிகளில் வெளியாகியுள்ளன.

1. ஜப்பானுடைய ஆவி (The Spirit of Japan) 1917 ஜூன்.
2. ஜாதி (The Nation) 1917 ஜூலை.
3. அடங்கி நட (Thou Shalt Obey) 1917 செப்டம்பர்.
4. கல்வி கற்பிக்கும் பாஷை (The Medium of Education) 1917 அக்டோபர்.
5. சிறிதும் பெரிதும் (The Small and the Great) 1917 டிசம்பர்.

இவற்றில் ஜப்பானுடைய ஆவி, ஜாதி என்பவை தாகூரால் ஆங்கிலத்திலேயே எழுதப் பெற்றவை. மற்றவை மூன்றையும் வங்காளி மொழியில் அவர் எழுதினார். ரவீந்திரநாத தாகூரின் உடன் பிறந்தார் மைந்தரான திரு. சுரேந்திரநாத தாகூர் என்பார் அவற்றை ஆங்கிலத்தில் மொழிபெயர்த்திருக்கிறார். இந்த விவரங்

களை ரவீந்திரநாத தாகூரின் புத்திரரான திரு ரதீந்திரநாத தாகூர் எனக்குத் தெரிவித்ததோடு இக் கட்டுரைகளை வெளியிட அன்புடன் அனுமதியும் தந்தார்கள்; மாக்மில்லன் கம்பெனியாரும் அனுமதி யளித்தார்கள். அவர்களுக்கு என் நன்றியைத் தெரிவித்துக் கொள்கிறேன்.

மேலே குறித்த ஐந்து கட்டுரைகளில் 'அடங்கி நட' என்பது **பாரதி நூல்கள்** மூன்றும் தொகுதியில் முன்பே வெளியாகி யிருப்ப தால் அதை விலக்கி மற்ற நான்கையும் இங்கு தந்திருக்கிறேன்.

தாகூரின் கட்டுரைகள் கவிதை நடையிலே அமைந்திருக் கின்றன. ஆழ்ந்த, பரந்த கருத்துக்களைத் தாங்கி நிற்கின்றன. அவற்றின் சுவை குறையாமல் அழகிய முறையிலே பாரதியார் மொழி பெயர்த்து நமக்கு உதவியுள்ளார். தாய் மொழியிலேயே உயர்தரக் கல்வி யனைத்தும் புகட்ட வேண்டும் என்று ரவீந்திரர் 1917லேயே வற்புறுத்தி இக் கட்டுரையை எழுதியுள்ளார். இன் றும் நாம் அதைக் கடைப் பிடிக்காமலிருக்கிறோம். தாய் நாட்டிற் காகவும் தாய் மொழிக்காகவும் தமது வாழ்க்கையையே அர்ப்ப ணம் செய்த பாரதியாரின் கடைசி எழுத்தாக இந் நூலிலே இந்த முக்கியமான மொழிபெயர்ப்புக் கட்டுரை அமைந்துள்ளது. இரண்டு கவிஞர்களுடைய இந்த வாக்கு விரைவிலே நிறைவேற வேண்டும்.



# துணை நூல்கள்

1. மகாகவி பாரதியார் - வ. ரா.
2. பாரதியார் சரித்திரம் - செல்லம்மா பாரதி
3. கவிச்சக்ரவர்த்தி சுப்ரமணியபாரதி சரிதம் - ஆக்கூர் அனந்தாச்சாரி
4. புதுமைக்கவி பாரதியார் - தி. ஜ. ர.
5. என் குருநாதர் பாரதியார் - ரா. கனகலிங்கம்
6. பாரதியும் கவிதையும் - தங்கம்மாள் பாரதி
7. வி. ஓ. சி. கண்ட பாரதி - வ. உ. சிதம்பரம் பிள்ளை
8. பாரதி விளக்கம் - சுத்தானந்த பாரதி
9. பாரதியார் - 'சக்தி தாசன்'
10. சுதேசமித்திரன் - தொகுதிகள் 1905 - 1921 (தினசரி, வார மும்முறைப் பதிப்புகள்)
11. இந்தியா - பாரதியார் நடத்திய வாரப்பத்திரிகை இதழ்கள்
12. லோகோபகாரி - பரலி சு. நெல்லையப்பர் நடத்திய வாரப்பத்திரிகை இதழ்கள்
13. Bharathi and his Works - C. Viswanathan
14. பாரதி நூல்கள் - மூன்று பாகங்கள்
15. தாகூர் பஞ்ச வியாசங்கள் - பாரதியார் மொழி பெயர்ப்பு

# திருத்தம்

| பக்கம் | வரி | பிழை | திருத்தம் |
|---|---|---|---|
| 1 | 8 | தந்திடுமூனுறு | தந்திடுமூனுறு |
| 19 | 3 | இத்தியா | இந்தியா |
| 20 | 13 | பராமார்த்திக | பாரமார்த்திக |
| 46 | 1 | பராதியாரின் | பாரதியாரின் |
| 61 | 4 | 1901 | 1910 |
| 98 | 28 | விதை | கவிதை |
| 100 | 3 | செய்யம் | செய்யும் |
| 151 | 23 | பிருக்கிருர் | யிருக்கிருர் |
| 153 | 6 | பதினெழுசை | பதினேழுசை |
| 159 | 7 | ஜனச்சேதமும் | ஜனச்சேதமும் |
| 197 | 3 | பார்கக | பார்க்க |
| 207 | 4 | மாஹான | மாஹாண |
| 207 | 20 | மாராட்டிய | மராட்டிய |

